# திருவாரூர்

# மாவட்டத் தொல்லியல் வரலாறு

ஆசிரியர்கள்

பொ. இராசேந்திரன்

வெ. வேதாசலம்

சொ. சாந்தலிங்கம்

க. நெடுஞ்செழியன்

பொதுப் பதிப்பாசிரியர்

கு. தாமோதரன்

இயக்குநர், தொல்லியல் துறை



வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

தரமணி, சென்னை - 600 113

2000

# திருவாரூர்

# மாவட்டத் தொல்லியல் வரலாறு


ஆசிரியர்கள்

**பொ. இராசேந்திரன்**

**வெ. வேதாசலம்**

**சொ. சாந்தலிங்கம்**

**க. நெடுஞ்செழியன்**

பொதுப் பதிப்பாசிரியர்

**கு. தாமோதரன்**

இயக்குநர், தொல்லியல் துறை



வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

தரமணி, சென்னை - 600 113

2000

தொல்லியல் துறை வெளியீடு எண் 145

முதற் பதிப்பு 2000
பிரதிகள் 500



# திருவாரூர் மாவட்டத் தொல்லியல் வரலாறு

ஆசிரியர்கள்

பொ. இராசேந்திரன்
வெ. வேதாசலம்
சொ. சாந்தலிங்கம்
க. நெடுஞ்செழியன்



பொதுப் பதிப்பாசிரியர்
கு. தாமோதரன்



விலை ரூ.

அச்சிட்டோர்

தமிழ்நாடு அரசு
தொல்லியல் துறை
அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது

# பொருளடக்கம்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்
எம்.ஏ., பி.எச்.டி.
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும்
அறநிலையத் துறை அமைச்சர்.

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009
நாள் : 25–1–2000
தி. பி. / 2031 தை 11

# அணிந்துரை

தமிழகத்தில் கல்வெட்டு, செப்பேடு, ஓலைச்சுவடி, தொல்பொருள், காசு, சிற்பம், கோயில், இலக்கியச் செய்தி, வெளிநாட்டார் குறிப்பு, கதைப்பாடல் என்று ஏதேனுமொரு தொல்லியல் தரவு ஊர்தோறுமுண்டு என்பதை அண்மைக்காலத் தொல்லியல் ஆய்வுகள் வெளிப் படுத்தி வருகின்றன. உலக அளவில் தொல்லியல் சான்று கள் ஊர்தோறும் கிடைப்பது தமிழகத்தில்தான் என்று பெருமை கொள்ளவும் தோன்றுகிறது, பட்டி தொட்டி யெல்லாம் மலிந்து கிடக்கும் இத்தரவுகள் ஒன்று திரட்டப் பட வேண்டும். அவ்வவ்வூர் மக்கள் அவற்றை அறிந்து கொண்டு காத்துப் போற்ற அவை வெளியிடப்பட வேண்டும் என்பதில் **மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களின் தலைமையிலான இவ்வரசு முனைப்பாக ஈடுபட்டு வருகிறது.

ஊரெல்லாம் நிறைந்து கிடக்கும் இத்தரவுகள் தமிழகத்தின் வரலாறு பொதுப்படையாக எழுதப்படும் போது விரிவஞ்சி விடுபட்டுப் போகின்றன. மேலும் வட்டார வரலாறுகள் சொல்லும் நூல்களும் குறைவே. மாவட்டங்களுக்கான விவரச்சுவடிகள் ஆங்கிலேயர் காலத்தில் வெளியிடப்பட்டன. எங்கும் தமிழ் எதிலும்

தமிழ் என்றான பின் தமிழில் வெளிவருகின்றன. எனினும் அவற்றில் மக்கள் கணக்கெடுப்பு, வருவாய்த் துறைச் செய்திகள், நிலவியல் செய்திகள் என்று பல விவரங்களும் வெளியிடப்படுவதால் தொல்லியல் செய்திகள் குறைந்த அளவே இடம்பெறுகின்றன. தமிழகத்தின் தொல்லியல் பெருமையைக் கருத்தில் கொண்டு தொல்லியல் துறை மாவட்ட வாரியாகத் தனித்தனியே தொல்லியல் வரலாற்று நூல்களை வெளியிட வேண்டும் என்ற அடிப் படையில் நிதி ஒதுக்கப்பட்டு அவ்வரலாற்று நூல்கள் வெளியிட தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறை தொல்லியல் துறையை முடுக்கி விட்டுள்ளது. அவ்வகையில் முதல் நூலாகத் ''திருவாரூர் மாவட்டத் தொல்லியல் வரலாறு'' என்ற இந்நூல் வெளியிடப்படுகிறது.

இதனில் சங்ககாலம் தொட்டு ஆங்கிலேயர் காலம் வரையிலான காலப்பரப்பெல்லையில் ஒவ்வொரு வட்டமாக ஏழு வட்டங்களில் உள்ள ஏறத்தாழ நூறு ஊர்களைப் பற்றிய தொல்லியல் செய்திகள் அடங்கியுள்ளன. கல்வி யாளர்களுக்கும், பொது மக்களுக்கும் அந்தந்த மாவட்டத் தொல்லியல் வரலாற்றை அறிந்து போற்ற இந்நூல் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை விரைந்து வெளிக்கொணர அயராது உழைத்த தொல்லியல் துறை இயக்குநர் திரு. கு. தாமோதரன் அவர்களையும், அவரது வழிகாட்டுதலின் கீழ்த் திறம்பட இந்நூலை எழுதிக் கொணர்ந்த ஆசிரியர் குழுவையும் நான் உளமாரப் பாராட்டுகிறேன்.

அன்புடன்,

**மு. தமிழ்க்குடிமகன்**

# முன்னுரை

தமிழ்நாட்டு வரலாற்றைச் செழுமைப்படுத்தி எழுதும் பணியில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது. தமிழகம் எங்கும் நிறைந்திருக்கும் கல்வெட்டுகளைப் படியெடுத்துப் படித்துப் பல தொகுதிகளாக இத்துறை வெளியிட்டு வருகிறது. அகழாய்வுகள் மூலம் பெறப்படும் தொல்லியல் சான்றுகளைக் கொண்டு அவ்வப்பகுதியின் ஆய்வறிக்கைகளை வெளியிட்டு வருகிறது. இவ்விதம் தரவுகளைச் சேகரித்து வெளியிடும் பணிகளுடன், அத்தரவுகளைக் கொண்டு பல வரலாற்று நூல்களையும் எழுதி இத்துறை வெளியிட்டு வருகிறது.

இப்பணியில் மாவட்ட வாரியாகத் தொல்லியல் வரலாற்றை எழுத வேண்டும் என்றும், அதன் மூலம் அவ்வவ்வட்டார மக்களுக்கு அவர்கள் பகுதியின் வரலாற்றைக் கொண்டு செல்ல வேண்டும் என்றும் தொல்லியல் துறை திட்டமிட்டுள்ளது. முதல் கட்டமாகத் திருவாரூர், காஞ்சிபுரம், கரூர், விருதுநகர், தருமபுரி ஆகிய ஐந்து மாவட்டங்களின் வரலாற்றைத் தனித் தனியே வெளியிட அரசு நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. அந்த வரிசையில் ''திருவாரூர் மாவட்டத் தொல்லியல் வரலாறு'' என்னும் இந்நூல் முதல் நூலாக வெளிவருகிறது.

திருவாரூர் என்றவுடன் நம் நினைவுக்கு வருவது தியாகராசர் திருக்கோயிலும், மநுநீதிச் சோழன் கதையும் மட்டுமல்ல, தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களும்தான். அவர் வாழ்ந்து, வளர்ந்து இளமையில் பொது வாழ்க்கையை நடத்திய ஊர் திருவாரூர். இம்மாவட்டத்தின் வரலாற்றை இத்துறை முதலில் வெளியிடுவதில் பெரிதும் மகிழ்ச்சி கொள்கிறது.

திருவாரூர் மாவட்டம் பண்டைய சோழநாட்டின் மையமான பகுதியாகும். இப்பகுதியின் வரலாறு சங்க

காலம் தொடங்கி அண்மைக்காலம் வரை, அரசியல் வரலாறு, சமய வரலாறு, சமூக வரலாறு, கலை வரலாறு என்ற உட்தலைப்புகளில் விரிவாக வெளியிடப்படுகிறது. மேலும் இம்மாவட்டத்தில் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க சிற்றூர்களின் வரலாறும் வட்டவாரியாகக் கொடுக்கப் பட்டுள்ளது. மாணவர்களுக்கும், இளம் ஆய்வாளர் களுக்கும் எளிதில் விளங்கும் வகையில் எளிய நடையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இந்நூலை வெளிக்கொணர நிதி ஒதுக்கீடு செய்து எமது பணிகளை ஊக்குவிக்கும் **தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். எமது துறையின் ஒவ்வொரு முயற்சியிலும் அக்கறை கொண்டு ஊக்கமும் ஆக்கமும் அளித்து வரும் தமிழ் ஆட்சிமொழி தமிழ்ப் பண்பாடு இந்துசமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க் **குடிமகன்** அவர்கள் இந்நூலுக்கு அழகிய முறையில் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அவருக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

இந்நூலைக் குறித்த காலத்தில் எழுதி வழங்கிய ஆசிரியர் குழுவினராகிய எம் துறை அலுவலர்கள் திரு. பொ. இராசேந்திரன், முனைவர் வெ. வேதாசலம், திரு. சொ. சாந்தலிங்கம், திரு. க. நெடுஞ்செழியன் ஆகி யோருக்கு எனது பாராட்டுகள் உரியவை. சிறந்த முறையில் குறுகிய காலத்தில் அச்சிட்டுக் கொணர்ந்த எம் துறை அச்சுப் பிரிவினர்க்கும், உதவிப் பணி மேலாளர் திரு. ச. செங்கல்வராயன் அவர்களுக்கும் எனது பாராட்டுக்கள். தமிழுலகம் இதுபோன்ற நூல்களைப் படித்துப் பயன் பெற வேண்டும் என்பது எமது அவா.

இப்படிக்கு
**கு. தாமோதரன்**
இயக்குநர், தொல்லியல் துறை

# அரசியல்

திருவாரூர் மாவட்ட வரலாறு சங்ககாலம், களப்பிரர்காலம்; பல்லவர்காலம், சோழப்பெருவேந்தர்காலம், பிற்காலப்பாண்டியர் காலம், விசயநகரவேந்தர்காலம், தஞ்சைநாயக்கர்காலம், மராட்டியர் காலம், என்று பல்வேறு காலகட்டங்களைக் கொண்டுள்ளது. இக் கால கட்டங்களில் அரசியல், சமுதாயம், கலை, சமயம், பொருளா தாரம் ஆகிய துறைகளில் பல்வேறு வளர்ச்சிகளைக் கண்டுள்ளது. பல்வேறு சமூகப்பண்பாட்டுத் தொடர்புகள் இம்மாவட்டத்தில் நுழைந்து பல புதியபோக்குகளைத் தோற்றுவித்துள்ளதை இதன் காலவரலாறு காட்டுகிறது. இவற்றை அறிந்து கொள்ளும் சான்று களாக இலக்கியங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள், கட்டடங்கள், சிற்பங்கள், தொல்பொருள்கள், வெளி நாட்டார் குறிப்புகள் ஆகியவை விளங்குகின்றன.

## சங்ககாலம் கி.மு. 400 - கி.பி. 300

கி. மு. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பாகவே நாகரிகமும் பண்பாடும் மிக்க மக்கள் இப்பகுதியில் இருந்துள்ளனர், என்பதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இம்மாவட்டத்தின் முதல் ஆட்சியாளர்களாகவும் இப்பகுதிக்கு உரிமையுடையவர்களாகவும் தொன்றுதொட்டு இருந்தவர்கள் சோழமன்னர்கள். சங்ககாலத்தில் உறையூரையும் காவிரிப்பூம்பட்டினத்தையும் தலைநகரங்களாகக் கொண்டு சோழமன்னர்கள் ஆண்டனர். அவர்களுக்குக் கீழே சில குறுநிலமன்னர்கள் இப்பகுதியிலிருந்து ஆட்சிபுரிந்துள்ளனர்.

பெருநற்கிள்ளி, கோப்பெருஞ்சோழன், இளஞ்சேட்சென்னி, கரிகால்பெருவளத்தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளிவளவன் போன்ற பெருமன்னர்கள் சங்ககாலத்தில் இப்பகுதியில் ஆட்சி புரிந்திருக்கின்றார்கள். கரிகால்பெருவளத்தான் காலத்தில் இம் மாவட்டத்துக் கோயில்வெண்ணியில் (நீடாமங்கலம் வட்டம்)

சங்ககாலத்தில் முக்கியமான பெரும்போர் ஒன்று நடைபெற்றுள்ளது. வெண்ணிப்போரைக் கரிகாலன் இளைஞனாக இருந்தபோது நடத்தியதைப் பொருநராற்றுப்படை உணர்த்துகிறது. இப்போரில் கரிகாலன் தன்னை எதிர்த்துத் தாக்கிய பதினோரு வேளிரையும் பாண்டியனையும் சேரமன்னன் நெடுஞ்சேரலாதனையும் முறியடித்து வெற்றிகண்டான் இப்போரில் முதுகில் புண்பட்ட பெருஞ்சேரலாதன் போர்களத்திலேயே வடக்கிருந்து உயிர்துறந்தான். இப்போரினைப் பற்றி பொருநராற்றுப்படை, புறநானூறு (பா. 65, 66) அகநானூறு (பா. 55, 246) போன்ற நூற்கள் கூறுகின்றன. இப்போர் பற்றிப் பாடிய புலவர்களில் ஒருவர் வெண்ணியைச் சார்ந்தவர். இவர் வெண்ணிக்குயத்தியார் என்ற பெண்பாற்புலவராவார். இவ்வெண்ணிப்போர் பற்றிப் பாடிய பிற புலவர்கள் மாமூலனார், முடத்தாமக்கண்ணியார் ஆவார்கள்.

கிள்ளிவளவன் காலத்தில் சிறுகுடி என்ற ஊரில் சிறுகுடிக்கிழான் பண்ணன் என்ற வள்ளல் தன்மைமிக்க குடித்தலைவன் வாழ்ந்துள்ளான். இவன் வாழ்ந்த ஊரே இன்று குடவாசல் வட்டத்தில் செருகுடி என்று அழைக்கப்படும் ஊராகும் எனக் கருதுகின்றனர். கல்வெட்டிலும் இலக்கியத்திலும் இவ்வூர் திருச்சிறுகுடி என்று குறிப்பிடப்படுகின்றது. சங்ககாலத்தில் இவ்வூரில் வாழ்ந்த சிறுகுடிக்கிழான் பண்ணன் தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் சோறு வழங்கினான். இதனைப் பெறுவதற்காகச் சாரை சாரையாக எறும்புகள் செல்வது போன்று இரவலர்கள் சென்றார்கள். சோழமன்னன் கிள்ளிவளவனே இதனை வியந்து பாடியதோடு அல்லாமல் (புறநானூறு பா. 173) தான் வாழ்கின்ற வாழ்நாளும் சேர்த்துப் பண்ணன் வாழ வேண்டும் என்று மனதார வாழ்த்தியுள்ளான். சங்ககாலச் சோழமன்னர்கள் தமக்குக்கீழிருந்த ஒரு குறுநிலமன்னனின் அரிய குணத்தினைக் கண்டு மனம் திறந்து பாராட்டும் பண்பு பெற்றிருந்தார்கள் என்பதைக் கிள்ளிவளவனின் புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது.

நன்னிலம் வட்டத்திலுள்ள "அம்பர்மாகாளம்" என்ற ஊரில் அம்பர்க்கிழான் அருவருந்தை என்ற குறுநிலக்குடித்தலைவன் வாழ்ந்திருக்கின்றான். காவிரி பாயும் வளம் மிக்க அம்பர் என்ற ஊருக்கு உரிமையுடைய தலைவனாகவும் வள்ளலாகவும் விளங்கிய

இவன் "நல்அருவந்தை" என்று அழைக்கப்பட்டான். இவனது சிறப்பைக் "காவிரி அணையும் தாழ்நீர்ப்படப்பை நெல்விளை கழனி அம்பர்கிழவோன் நல்அருவந்தை" என்று கல்லாடனார் பாடியுள்ளார் (புறம். பா. 385).

வலங்கைமான் வட்டத்திலுள்ள ஆலங்குடி, ஆவூர் முதலிய ஊர்கள் சங்ககாலப் புலவர்கள் வாழ்ந்த ஊர்களாகும். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு முதலிய எட்டுத்தொகை நூற்களில் சில பாடல்களைப் பாடிய புலவர் ஆலங்குடி வங்கனார் ஆவார். சங்கபுலவர்களான ஆவூர்மூலங்கிழார், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனார், கண்ணனார், காவிதிகளார் சாதேவனார் போன்ற புலவர்கள் திருவாரூர் மாவட்டத்து ஆவூரைச் சார்ந்தவர்கள் ஆவார்கள். இம்மாவட்டத்து குடவாயில் என்ற ஊரிலும் சங்ககாலப் புலவர் ஒருவர் வாழ்ந்துள்ளார். இவர் குடவாயில் கீரத்தனார் என்று அழைக்கப்பட்டுள்ளார். குடவாயில் சங்ககாலச் சோழ மன்னர்களுக்குரிய காவல் நகரங்களில் ஒன்றாக விளங்கியுள்ளது. இதில் சோழர்கள் சிறைச்சாலை அமைத்திருந்தனர். சோழன் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையைப் போரில் வென்று சிறைப்பிடித்து அவனை குடவாயிலில் உள்ள சிறையில் அடைத்து வைத்தான் எனக் கருதுகின்றனர்.

### களப்பிரர் காலம் (கி.பி. 3, 4-ஆம் நூற்றாண்டு)

தமிழ்நாட்டிற்கு வடக்கேயிருந்து வந்த களப்பிரர் என்ற சிற்றரசர் மரபினர் தமிழ்நாட்டில் தொண்டைநாடு, சோழநாடு, பாண்டியநாடு ஆகிய நாடுகளைக் கைப்பற்றி ஆண்டார்கள் என்பதைப் பிராகிருத இலக்கியங்களும், தனிப்பாடல்களும் தெரிவிக்கின்றன. இதனைப் பாண்டியரது வேள்விக்குடிச் செப்பேடும் பல்லவரது செப்பேடுகளும் உறுதிப்படுத்துகின்றன. இக்காலத்தில் திருவாரூர் மாவட்டம் உள்ளடங்கிய சோழநாட்டை அச்சுதவிக்கந்தன், அச்சுதகளப்பாளன் என்றழைக்கப்பட்ட களப்பிர அரசர் ஆண்டுள்ளனர். மன்னார்குடி வட்டத்தில் அமைந்த பூதமங்கலத்துப் புத்ததத்தர் தாமியற்றிய "அபிதம்மாவதாரம்" என்ற நூலில் சோழ நாட்டை அச்சுதவிக்கந்தன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து ஆண்டதாகக் குறிப்பிட்டுள்ளார். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில்

கோச்செங்கணான் என்ற சோழமன்னன் சோழநாட்டை ஆண்டுள்ளான். இவனைப் பற்றி சம்பந்தர், அப்பர், திருமங்கையாழ்வார் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. இவனே களப்பிரரிடமிருந்து சோழநாட்டை மீட்டிருக்க வேண்டும். சோழநாட்டில் குறிப்பாக திருவாரூர் மாவட்டத்தில் இவன் நன்னிலம் திருக்கொண்டீச்சுரம், அம்பர்மாகாளம், இடும்பாவனம் முதலிய இடங்களிலுள்ள கோயில்களைத் திருப்பணி செய்து கட்டியுள்ளான் என்று தேவாரப்பாடல்கள் தெரிவிப்பது இவனது ஆட்சி களப்பிரர் ஆட்சிக்குப் பின்னர் சோழநாட்டில் இருந்துள்ளது என்பதை உறுதிப்படுத்துகிறது.

## பல்லவர் காலம் (கி.பி. 575-850)

மகேந்திரவர்மனின் தந்தையாக விளங்கிய சிம்மவிஷ்ணு என்ற பல்லவமன்னன் தொண்டைநாட்டில் களப்பிரர் ஆட்சியை ஒழித்து சோழநாட்டில் சோழர்களை வென்று காஞ்சியிலிருந்து ஆட்சிபுரிந்தான். இதனால் சோழநாட்டுப் பகுதிகள் பல்லவ மன்னர்களின் ஆட்சிக்குக்கீழ் வந்தன. பல்லவர் காலத்தினைச் சார்ந்த கல்வெட்டுகள் சோழநாட்டுப் பகுதிகளிலுள்ள கோயில்களில் காணப்படுகின்றன. திருவாரூர் மாவட்டத்தில் குடவாசல் வட்டத்துச் சேங்காலிபுரத்தில் நந்திவர்மன் கல்வெட்டு காணப்படுகிறது. வலங்கைமான் வட்டத்திலுள்ள ஆலங்குடிக்குச் "சிம்ம விஷ்ணுச் சதுர்வேதிமங்கலம்" என்ற பெயர் இருந்திருப்பதைக் கல்வெட்டு உணர்த்துவது இம்மாவட்டத்தில் பல்லவர் ஆட்சி இருந்திருப்பதை உறுதிப்படுத்துகிறது. சிம்மவிஷ்ணுவின் தந்தையான சிம்மவர்மனின் செப்பேடு திருத்துறைப்பூண்டி வட்டத்துப் பள்ளன் கோயிலில் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. சேக்கிழார் கூற்றுப்படி காடவர்கோன் கழற்சிங்கன் என்ற நாயனார் இப்பல்லவர் காலத்திலேயே திருவாரூர் கோயிலுக்கு வந்திருக்க வேண்டும்.

## முத்தரையர்

பல்லவர் ஆட்சியின்போது சோழநாட்டுப் பகுதிகளை முத்தரையர் என்ற சிற்றரசர் மரபினர் பல்லவர்கட்குக் கட்டுப்பட்டு ஆண்டு வந்துள்ளதை சோழநாட்டிலுள்ள வல்லம், செந்தலை போன்ற இடங்களிலுள்ள அவர்கள் கல்வெட்டுகள் காட்டுகின்றன. பெரும்பிடுகு முத்தரையன் குவாவன்மாறன், மாறன்பரமேசுவரன்,

பெரும்பிடுகு முத்தரையனான சுவரன்மாறன் போன்ற முத்தரைய மன்னர்கள் இக்காலத்தில் சோழநாட்டை ஆண்டனர்.

## சோழர்காலம் *(கி.பி. 850-1279)*

*தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட முத்தரையரை முறியடித்து விசயாலயன் என்ற சோழமன்னன் மீண்டும் சோழ நாட்டில் சோழரது ஆட்சியை ஏற்படுத்தினான். இவனது வழி வந்த முதலாம் ஆதித்த சோழன், பராந்தக சோழன், கண்டராதித்த சோழன், சுந்தரசோழன், ஆதித்தகரிகாலன், உத்தமசோழன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரசோழன், இரண்டாம் இராசேந்திரன், இராசாதிராசன், வீரராசேந்திரன், அதி ராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன், மூன்றாம் இராசேந்திரன் முதலிய மன்னர்கள் சோழநாட்டை நீண்டகாலம் ஆட்சிபுரிந்தனர். இவர்களது கல்வெட்டுகள் திருவாரூர் உள்ளிட்ட சோழநாடு முழுவதும் காணப்படுகின்றன. திருவாரூர் மாவட்டத்தில் பள்ளன்கோயிலில் சுந்தரசோழனின் செப்பேடு கிடைத்துள்ளது. திருக்களரில் கி. பி. 11-ஆம் நூற்றாண்டு சோழரது செப்பேடு கிடைத்துள்ளது.*

## போசளர், பாண்டியர் (கி.பி. 13, 14-ஆம் நூற்றாண்டு*)*

*கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் சோழநாட்டில் சமயபுரத்தினைத் (கண்ணனூர்) தலைநகரமாகக் கொண்டு போசளர் ஆட்சி ஏற்பட்டது. போசளமன்னன் சோமேசுவரன், வீரராமநாதன் கல்வெட்டுகள் சோழநாட்டின் மேற்பகுதியில் காணப்படுகின்றன. திருவாரூர் மாவட்டத்தில் மன்னார்குடி செயங்கொண்டநாதர் கோயிலில் போசளமன்னன் வீரராமநாதனின் கல்வெட்டு காணப் படுகிறது. இது இவன் பெயரில் சிறப்பு வழிபாடு செய்ய சந்தி ஏற்படுத்தியதைத் தெரிவிக்கிறது.*

*கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முதல் மாற வர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1238) சோழநாட்டை வென்று மீண்டும் மூன்றாம் இராசராசன் என்ற சோழமன்னன் நாட்டை ஆளும்படித் தந்தான். இவனைத் தொடர்ந்து வந்த முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251-1271) முதல்*

மாறவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி. 1268-1311) சோழ நாட்டைக் கைப்பற்றி ஆண்டார்கள். இவர்கள் காலத்தில் சோழ நாட்டில் மாறவர்மன் வீரபாண்டியன், ஸ்ரீவல்லபன், பாண்டியரின் பிரதிநிதியாய் ஆட்சி புரிந்தனர். மேலே கண்ட நான்கு மன்னர்களின் கல்வெட்டுகளும் திருவாரூர், மன்னார்குடி, கீரனூர், திருப்பனையூர், திருமீய்ச்சூர், திருக்கொட்டாரம் போன்ற திருவாரூர் மாவட்ட ஊர்களில் காணப்படுவது பாண்டியர் ஆட்சி இப்பகுதியில் இருந்திருப்பதை உறுதிப்படுத்துகிறது. பிற்காலப் பாண்டிய மன்னர்கள் சோழநாட்டில் சோழரது ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தார்கள்.

## விசயநகரவேந்தர் காலம்

கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து சோழ நாட்டில் விசயநகரவேந்தர் ஆட்சி ஏற்பட்டது. கி.பி. 14, 15, 16-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த விசயநகர வேந்தர்களின் கல்வெட்டுகள் சோழநாட்டில் காணப்படுகின்றன. அச்சுத தேவராயரின் கல்வெட்டு குடவாசலிலும் கிருஷ்ணதேவராயரின் கல்வெட்டுகள் கந்தலூர், திருக்கொண்டீசுவரம், திருவாஞ்சியம் முதலிய ஊர்களிலும் ஸ்ரீரங்கர் செப்பேடு ருத்திரகங்கையிலும் கிடைத்துள்ளன. வரலாற்றாசிரியர் ஆர். டி. பானர்ஜி விசயநகர வேந்தர் காலத்தில் திருவாரூர், திருச்சிப்பகுதிகளில் ஒரிசாவிலிருந்து ஒட்டர்கள் படையெடுப்பு நடைபெற்றதாகக் கூறுகின்றார். ஆனால் இதற்கு இதுவரை தெளிவான வரலாற்றுச் சான்றுகள் இல்லையென ஏ. கிருஷ்ணசாமி மறுக்கின்றார். எதிர்காலத்தில் கிடைக்கும் சான்றுகள்தான் இதற்கு விடையளிக்க வேண்டும்.

## தஞ்சைநாயக்கர் காலம்

தஞ்சையில் நாயக்கர் ஆட்சி கி.பி. 1530-ல் தொடங்கியது. இதன் முதல் மன்னரான செவ்வப்ப நாயக்கர் கல்வெட்டு சிற்றாய்மூரில் காணப்படுகிறது. இவரது மகனான அச்சுதப்ப நாயக்கரின் சிற்பமும், மனைவி மூர்த்தியம்மாளின் சிற்பமும் மன்னார்குடியில் காணப்படுகின்றன. அச்சுதப்ப நாயக்கரைத் தொடர்ந்து வந்த இரகுநாத நாயக்கர், விசயராகவ நாயக்கர், ஆகியோரது கல்வெட்டுகள், செப்பேடுகள் திருவாரூர் மாவட்டத்தில்

கிடைக்கின்றன. இரகுநாதநாயக்கர் காலக் கல்வெட்டு திருவாஞ்சியத்தில் காணப்படுகிறது. இம்மன்னனது பிரதிநிதிகளாக மாதைய நாயக்கரும், மல்லப்ப நாயக்கரும் விளங்கியுள்ளனர்.

## மராட்டியர் காலம்

கி.பி. 1675-ல் தஞ்சை நாயக்கர் ஆட்சி முடிவடைந்தது. தஞ்சையைக் கைப்பற்றி முதல் மராட்டிய மன்னராக ஏகோஜி முடிசூடினார். இதனால் சோழநாடு மராட்டியர் ஆட்சிக்கு உட்பட்டது.

திருவாரூர் மாவட்டத்தில் மராட்டிய மன்னர்களான துளசா, சரபோஜி, இரண்டாம் துளசா, பிரதாப்சிங் ஆகிய மன்னர்களின் கல்வெட்டுகள் முறையே மகாதேவப்பட்டணம், கூத்தனூர், சேகல், மன்னார்குடி முதலிய இடங்களில் கிடைத்துள்ளன. மராட்டிய மன்னர்களின் செப்பேடுகள் இம்மாவட்டத்தில் பல இடங்களில் கிடைத்துள்ளன.

## ஆங்கிலேயர் ஆட்சி

கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயர் ஆதிக்கம் தஞ்சையில் ஏற்படத் தொடங்கியது. கி.பி. 1799-ல் தஞ்சைப்பகுதியில் வரிவசூல் செய்யும் உரிமை ஆங்கிலேயர் வசம் வந்தது. கி.பி. 1859-ல் தஞ்சையில் மாவட்ட கலெக்டர் நியமிக்கப் பட்டார். இவர் ஆங்கில அரசின் நேரடியான பிரதிநிதியாக திருவாரூர் அடங்கிய பழைய தஞ்சைமாவட்டத்தை ஆளத் தொடங்கினார். சுதந்திர இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தஞ்சைமாவட்டத்திலிருந்து பிரிந்து புதிய திருவாரூர் மாவட்டம்உருவானது.

# சமுதாயம்

திருவாரூர் மாவட்டத்திலுள்ள நூற்றுக்கணக்கான கல்வெட்டு கள் பழங்காலத்தில் வாழ்ந்த பல்வேறு சமூகத்தினரின் சமூக நடை முறைகள், சமூக நிறுவனங்கள் பற்றித் தெரிவிக்கின்றன. பிராமணர், வேளாளர், வணிகர், கைக்கோளர், சாலியர், இடையர், கம்மாளர், குயவர், உவச்சர், உழுகுடிகள் என்று பல்வேறு குடிகள் பற்றியும் இச்சமூகத்தினரிடையே நிலவிய சமூக முரண்பாடுகள், ஒற்றுமைக் கூறுகள் பற்றியும் தெரிவிக்கின்றன. சோழர்காலச் சமுதாயம் பல படிநிலைகளில் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்த சமூக மாகவே இருந்துள்ளது. தொழில் அடிப்படையில் குடிகளிடையே வேறுபாடு இருந்தது. பிறப்பினை அடிப்படையாகக் கொண்ட வருணப் பாகுபாட்டில் சமூகம் இயங்கவில்லை என்பதை கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

ஒவ்வொரு ஊரிலும் இருந்துவந்த ஊரவைகள் தங்களது ஊர்க் காரியங்களை அவ்வப்போது கூட்டம் நடத்திச் செய்து வந்தன. சில வேளைகளில் காரியங்கள் நடத்துவதில் சில முரண் பாடுகள் ஏற்பட்டுள்ளன. மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் நன்னிலத்திற்கு அருகிலுள்ள அச்சுதமங்கலத்தில் சோம நாதர்கோயில் இறைவன் திருவீதி உலா எழுந்தருளுவதற்கு வீதி யினை அகலப்படுத்தும்போது வழியில் இருந்த ஆக்கிரமிப்புகளை அகற்றினர். இதனால் பாதிக்கப்பட்டவர்கள் கோயில் நிருவாகத் தினரிடம் முறையிட்டனர். கோயில் நிருவாகத்தினர் அதற்குச் சில விதிகளும் நடைமுறைகளும் இருப்பதாகக் கூறி அவர்களுக்கு மாற்று ஏற்பாடு செய்தனர். இரண்டாம் இராசேந்திரசோழன் காலத்தில் களப்பாழ் சபையினர் திருத்துறைப்பூண்டி கீரகளூரில் கூடினர். அப்போது அவ்வூரில் வைத்தியம் செய்துவந்த வைத்தியக் குடியைச் சார்ந்த ஒருவன் தமக்கு வைத்திய விருத்தியாக வழங்கிய நிலம், மனை ஆகியவற்றிற்கு ஆதாரம் இல்லையென்று ஊரவை அவற்றை எடுத்துக்கொண்டதாகவும், ஆனால் தன்னிடம் ஆதாரம் உள்ளது என்றும் கூறி முறையிட்டான். சமூக நடைமுறைப்படி

ஊரவையாரிடம் முறையிட்ட அவன் கூற்றில் உண்மை இருக்கிறது என்று கூறி அதற்குப் பரசுராமன் என்பவன் சாட்சி கூறினான். இதனால் ஊரவையினர் மீண்டும் அவ்வைத்தியனுக்கு நிலம், மனை ஆகியவற்றை அளித்துள்ளனர். கல்வெட்டில் காணும் இச்செய்தி மூலம் அக்காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் வைத்திய குலத்தினைச் சார்ந்தவர்கள் இருந்து ஊர் மக்களுக்கு வைத்தியம் செய்தனர்; அதற்காக ஊதியமாக நிலமும் வீடும் பெற்றிருந்தனர் என்ற சோழர்கால நடைமுறையை அறியமுடிகிறது. குடவாசல் வட்டத்து அன்னியூரில் விக்கிரமசோழன் காலத்தில் மடப்புற இறையிலியாக நாற்பது காசுகளைப் பெற்று அதற்குரிய காரியங்களைச் சிலர் செய்யாது இருந்து வந்தனர். இதனைக் கோட்புலியாண்டார் அன்னியூரார் இவ்வாறு செய்வது தவறு என்று பலமுறை எடுத்துக்கூறிப் பின்னர் அவர்களைத் தர்மகாரியங்கள் செய்து வரும்படி செய்துள்ளனர். கல்வெட்டுகள் கூறும் இச்செய்திகள் கோயிலும் சமூகமும் எவ்வாறு இணைந்து செயல்பட்டுவந்தன என்பதைக் கூறுகின்றன. தவறு நடந்தால் அதனைத் திருத்திக் கொண்டு வாழ்ந்தனர் என்பதை மேற்சுட்டிய நிகழ்வுகள் தெளிவாக்குகின்றன.

மூன்றாம் இராசராசன் காலத்தில் அச்சுதமங்கலம், சீதக்கமலம் என்ற இரண்டு ஊரார்க்கும் முடிகொண்டசோழப் பேராற்றிலிருந்து நீரைப் பயன்படுத்துவதில் தகராறு ஏற்பட்டது. அதில் இராசராசப்பேரையன் என்பவன் தவறாகத் தண்டிக்கப்பட்டான். இதனைப் பின்னர் அறிந்த ஊரவையினர் தண்டிக்கப்பட்டு இறந்து போன அவனது குடும்பத்தினர்க்கு (மகனுக்கு) உதிரப்பட்டியாக நிலம் அளித்துள்ளனர்.

சோழர்காலத்தில் வறுமையின் காரணமாக சிலர் அடிமைகளாகக் கோயிலில் பணிசெய்ய தாங்களாகவே முன்வந்து தங்களைக் கோயிலுக்கு விற்றுக் கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளது. மூன்றாம் இராசராசன் காலத்தில் தச்சர் குடும்பத்தினைச் சார்ந்த ஏழு பேர் சோமநாதமங்கலம் கோயிலுக்குத் தம்மை விற்றுக்கொண்டு அடிமையானதைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. தம்மிடம் அடியவர்களாக இருந்த ஆட்களைக் கோயிலுக்குத் தானமாக வழங்கும் முறையும் அக்காலத்தில் இருந்துள்ளது. திருப்பாம்புரம் சிவன் கோயிலுக்கு மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில்

ஆளவந்தாள் என்ற பெண் தன்னிடம் வைத்திருந்த சில அடியவர்களைக் கோயிலுக்குத் தானமாகத் தந்துள்ளதைக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

திருவாரூரிலுள்ள பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த வடமொழிக் கல்வெட்டு ஒன்று தச்சர் சமூகத்தினைப் பற்றி விரிவாக எடுத்துக் கூறுகிறது. பாண்டிய குலாந்தகச் சதுர்வேதி மங்கலத்துப் படித்த அந்தணர்கள் கூடித் தச்சர்கள் செய்யும் தொழில், அவர்களுக்குரிய கல்வி பற்றி ஆராய்ந்து பல நூற்களில் இருந்து மேற்கோள்காட்டிப் பேசி அச்செய்திகளைக் கல்வெட்டாக எழுதிவைத்துள்ளனர். இதில் தச்சர்கள் "ரதகாரர்கள்" என்ற கலப்பின சாதியினராக கூறப்பட்டுள்ளனர். இவற்றில் அனுலோமர், பிரதிலோமர் என்ற இருபிரிவினர் இருந்தனர். அனுலோமர் என்பவர்கள் உயர்குடி ஆண்களுக்கும் அடுத்த சாதிப்பெண்களுக்கும் பிறந்தவர்கள். பிரதிலோமர் உயர்குடிப்பெண்களுக்கும் தாழ்ந்த சாதி ஆண்களுக்கும் பிறந்தவர்கள். ரதகாரர்களைச் சில நூற்கள் உயர்குடிப் பிறந்தவர்கள் என்று கூறுகின்றன. சில நூற்கள் இதற்கு முரண்பாடாகக் கூறுகின்றன என்று திருவாரூர்க் கல்வெட்டு தெரிவிக்கிறது. வலங்கைமான் வட்டத்து ஆலங்குடியிலுள்ள கல்வெட்டு ஒன்று தச்சர்களின் பெருமையைக் கூறும் மெய்க் கீர்த்தியுடன் காணப்படுகிறது. ஆலங்குடி ஆபத்சகாயேசுரர் கோயிலில் இவர்களது மெய்க்கீர்த்தி உள்ளது.

"பெற்றுடையது உத்திராபதி
அளந்துடையது தவப்பள்ளி
ஐயத்துடையது மகரக்கொடி
கொற்றவரும் தேவர்களும் கொண்டாட
அறத்தோடு புரிந்த வாக்குப் பெருக்கமும்
சிறப்போடு பொலிந்த செல்வம் நன்கு பெயும்
குன்றாத குடிப்பிறப்பும்
கூறுடை சொல் வீறுடைமையும்
இவரொடும் மாறானார் நிராசையும்
மன்று கலங்கா மனை வாழ்க்கையும்

சென்ற இடத்துச் செறுவெற்றியும்

..............................

யாவரும் தொழில் வல்லாராய்

அக்கசாலையும் பள்ளியும் ஆணையாக"

கொண்ட அறுவகைத்தொழில் நால்வகை ரதகாரர் என்று இவர்களைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பதினேழு நாடுகளைச் சார்ந்த இவர்கள் கூடி எடுத்த முடிவே ஆலங்குடியில் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது. திருநீற்றுச்சோழன் தோப்பில் கட்டிய "முழுதும் வல்லான்" மண்டபத்தில் ஆபத்சகாயப் பெருமாள் எழுந்தருளும்போது நடக்கும் திருவிழாவிற்குரிய செலவிற்காக ஒவ்வொரு ரதகாரர் குடும்பமும் குறிப்பிட்ட அளவு பணம் அளிக்கவேண்டும் என்று முடிவு செய்ததையே ஆலங்குடிக் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

வணிகர் சமூகத்தினர் ஆங்காங்கேயுள்ள ஊர்களில் தங்களது பொருள்களைச் சேமித்து வைக்கும் மண்டிகளை ஏற்படுத்தி வணிகம் செய்து வந்துள்ளனர். மன்னார்குடியில் சாரிகைக் கோட்டை என்றழைக்கப்படும் வணிகர் குடியிருப்பு இருந்துள்ளது. இதில் 'புவனேகவீரன் மடிகை" என்ற பெயரில் சரக்கு மண்டி ஒன்று இருந்தது. இது "விக்கிரமபாண்டியன் மடிகை" என்றும் பெயர் பெற்று விளங்கியது. சாரிகைக் கோட்டைக்குள் வரும் ஒவ்வொரு சரக்கிற்கும் குறிப்பிட்ட அளவு பணம் வரியாக வசூல் செய்யப் பட்டது என்று மன்னார்குடி செயங்கொண்ட சோழீசுவரர் கோயிலில் உள்ள விக்கிரம பாண்டியன் கல்வெட்டு கூறுகிறது. திருத்துறைப்பூண்டி வட்டத்து வடகாடுகோயிலூர் வழியாக அக்காலத்தில் ''சனநாதன்பெருவழி'' என்ற பாதையில் சென்ற சரக்குகளுக்கு வரிவசூல் செய்யப்பட்டதாகச் சோழர் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

# சமயம்

## சைவசமயம்

சோழநாட்டில் சைவசமயம் பல்லவர், சோழர் காலங்களில் மிகுந்த வளர்ச்சி கண்டுள்ளது. இம்மாவட்டத்தில் நாயன்மார்களால் தோற்றுவிக்கப்பட்ட பக்தி இயக்கத்தின் காரணமாக ஏராளமான சிவன்கோயில்கள் தோன்றியுள்ளன. கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்பாக களப்பிரர் காலத்திற்குப் பின்னர் சோழநாட்டில் ஆட்சிபுரிந்த கோச்செங்கணான் என்ற மன்னன் எழுபது சிவன் கோயில்களை எடுத்தான். நன்னிலம், அம்பர் மாகாளம், திருக்கொண்டீச்சுரம் (நன்னிலம் வட்டம்) இடும்பாவனம் (திருத்துறைப்பூண்டி வட்டம்) முதலிய இடங்களில் உள்ள சிவன் கோயில்களை, இவன் திருப்பணி செய்து கட்டியுள்ளான். இதனை சம்பந்தர், அப்பர் ஆகியோர் தமது பதிகங்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர்.

தேவார முதலிகள் மூவரது பாடல்பெற்ற தலங்கள் திருவாரூர் மாவட்டத்தில் பல உள்ளன. திருத்துறைப்பூண்டி வட்டத்தில் களந்தை, வடகாடுகோயிலூர், கச்சனம், திருத்தெங்கூர், சித்தாய்மூர், இடும்பாவனம் ஆகியவை பாடல்பெற்ற தலங்களாகும், நீடாமங்கலம் வட்டத்தில் பூவனூர், பேரையூர், கோயில்வெண்ணி முதலிய ஊர்களும் வலங்கைமான் வட்டத்தில் அரிதுவாரமங்கலம், மணற்கால், ஆவூர், அவளிவநல்லூர், ஆலங்குடி முதலிய ஊர்களும் மன்னார்குடி வட்டத்தில் பாமணி, கோட்டூர், திருக்களர், திருவெண்டுறை முதலிய ஊர்களும் பாடல்பெற்ற கோயில்களைக் கொண்டவையாகும். குடவாசல் வட்டத்தில் திருவீழிமிழலை, திருப்பாம்புரம், அன்னியூர், கருவிழி, குடவாசல் கொள்ளம்புதூர், திருமெய்ஞானம், திருவிடைவாய் ஆகியவைப் பாடல் பெற்ற தலங்களாகும். நன்னிலம் வட்டத்தில் கோயில் திருமாளம், திருவிராமேசுவரம், நன்னிலம், திருக்கொட்டாரம், திருக்கொண்டீச்சுரம், திருசெங்காட்டங்குடி, திருமருகல், திருமெய்ச்சூர், திருப்பயற்றூர், திருப்பனையூர், திருவாஞ்சியம், விற்குடி ஆகியவை

பாடல்பெற்ற திருத்தலங்களாகும். திருவாரூர் வட்டத்தில் திருப்பள்ளிமுக்கூடல், திருவாரூர், விளமல், திருக்காரவாசல், காட்டூர், வலிவலம், தளிச்சாத்தங்குடி, குன்றியூர், காட்டூர், ஐயன் பேட்டை முதலிய இடங்களில் பாடல் பெற்ற கோயில்கள் உள்ளன. திருவாரூர் மாவட்டத்தில் பல ஊர்கள் தேவாரப் பாடல் பெற்ற ஊர்களாக விளங்கியிருப்பது கி.பி. ஏழு, எட்டாம் நூற்றாண்டிலேயே இப்பகுதியில் எத்துணையளவு சைவம் வளர்ச்சி பெற்றுச் செல்வாக்கு பெற்ற சமயமாக விளங்கியுள்ளது என்பதைக் காட்டுகிறது.

இக்காலத்தில் பல சைவநாயன்மார்களும் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளார்கள். சில அடியார்கள் வேறுநாடுகளில் பிறந்து இம்மாவட்டத்திற்கு வந்து வாழ்ந்துள்ளனர். அரிவாட்டாயனார் பிறந்த ஊர் திருத்துறைப்பூண்டிக்கு அருகிலுள்ள கணமங்கல மாகும். தண்டியடிகள் நமிநந்தியடிகள், விறல்மிண்டர், சோமாசி மாறர் ஆகியோர் திருவாரூரில் வாழ்ந்து சைவப்பணி செய்தவர்கள் ஆவார்கள். விறல்மிண்டரை தவிர ஏனையோர் திருவாரூர் மாவட்டத்தில் பிறந்தவர்கள் ஆவார்கள். சுந்தரர் பரவையாரை மணந்து தமது வாழ்நாளின் ஒரு பகுதியை திருவாரூரில் கழித்தவர். திருவாரூர் இறைவனிடத்து அளவற்ற ஈடுபாடு கொண்டவராக இவர் விளங்கியுள்ளார். தனது பிள்ளையை அடியார்க்குச் சமைத்துப் படைத்த சிறுத்தொண்டர் திருசெங்காட்டங்குடியில் பிறந்தவர். திருவாரூரில் சைவர், காபாலிகர், மாவிரதிகள், காளா முகர் போன்ற பல்வகைச் சைவப்பிரிவைச் சார்ந்தவர்கள் வாழ்ந் துள்ளதைத் தேவாரம் தெரிவிக்கிறது.

சைவக்கோயில்களில் அட்டவீரட்டானம் என்று பெயர் பெற்ற தலங்களில் ஒன்றான விற்குடி திருவாரூர் மாவட்டத்தில் உள்ளது. சப்தவிடங்கத் தலங்களில் திருக்காறவாசல் திருவாரூர் என்ற இரு தலங்கள் இம்மாவட்டத்தில் இருப்பது குறிப்பிடத்தக்கது

சோழர்காலத்தில் இருந்த பெருவேந்தர்கள் சைவத்திற்குப் பேரளவில் ஆதரவு தந்தமையால் பல்லவர் காலத்தில் செங்கல் தளியாக இருந்த கோயில்கள் கற்றளியாக மாற்றப்பட்டுள்ளன. சோழ மன்னர்கள், அரசியர், அதிகாரிகள் ஆகியோர் இதனை

முன்னின்று செய்துள்ளனர். இதே போன்று இக்கோயில்களின் வழிபாட்டிற்கென்று அளவில்லாத கொடைகளை அளித்துள்ளனர். சோழர் காலத்தில் தேவாரம் (திருப்பதியம்) பாடுவதற்கென்று சிவன்கோயில்களில் மண்டபங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இவை "திருக்கைகொட்டி" மண்டபம் என்று அழைக்கப்பட்டுள்ளன. திருக்காரவாசல், திருவீழிமிழலை போன்ற பல கோயில்களில் இத்தகைய மண்டபங்கள் கட்டப்பட்டு அவற்றிலிருந்து பதியம் பாடுவார்க்குத் "திருக்கைக்கொட்டிப்புறம்" என்ற பெயரில் நிலங்கள் அளிக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

மடங்கள் சைவசமய வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்துள்ளன. இம்மடங்கள் சைவசமய கல்வி வளர்ச்சிக்கும் அருந்தொண்டாற்றியுள்ளன. திருவாரூர் மாவட்டத்தில் சோழர், பாண்டியர் காலங்களில் சிவன் கோயில்கள் உள்ள பகுதியில் அவற்றையொட்டி சைவமடங்கள் தோற்றுவிக்கப்பட்டு அவற்றிற்கு மடப்புறமாக நிலங்கள் தானமாக அளிக்கப்பட்டுள்ளன. இப்பகுதிகளில் பல இன்றளவும் 'மடப்புறம்' என்ற பெயரில் இருந்து வருவதைத் திருவாரூர் மாவட்டத்தில் 'மடப்புறம்' என்ற பெயர்களால் காணப்படும் பல ஊர்களிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. சிவாச்சாரியார்மடம் (திருத்துறைப்பூண்டி) சண்டிகேசுவரன்மடம (திருவாரூர்) தவப்பெருமாள்மடம் (வலிமடம்) சிறுத்தொண்டர்மடம் (திருச்செங்காட்டங்குடி) முழுதுமூவடியான் திருமடம் (அவளிவநல்லூர்) திருத்தொண்டத்தொகையான் திருமடம் (திருவீழிமிழலை) என்ற பெயரில் பல மடங்கள் இம்மாவட்டத்தில் இருந்துள்ளன. இவற்றில் ஒவ்வொன்றிலும் சைவாச்சாரியார்கள் என்ற மடத்தலைவர்கள் தமது சீடர்களுடன் வாழ்ந்துள்ளனர். குகை என்ற பெயரிலும் தமிழ் மரபைக் காக்கும் சைவமடங்கள் திருத்துறைப்பூண்டி திருவீழிமிழலை போன்ற இடங்களில் இருந்துள்ளன. வலங்கைமான் வட்டத்து முனியூரில் திருஞானசம்பந்தன் குகை இருந்துள்ளது. சோழர்காலத்தில் ஒருசாரார் இதனை அழிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். மூன்றாம் குலோத்துங்கசோழன் காலத்தில் "குகையிடிகலகம்" திருத்துறைப் பூண்டியில் நடைபெற்றது.

சைவசமயப் பெரியார்கள் சோழ அரசர்களது அரசகுருக்களாக இருந்துள்ளனர். மூன்றாம் குலோத்துங்கசோழனின் அரசகுருவாக

விளங்கிய ஈசுவரசிவர் என்பவர் அச்சுதமங்கலத்தில் சிவன் கோயிலைக் கட்டியுள்ளார். சோழர்கள் பல சிவன்கோயில்களைத் திருப்பணி செய்வதற்கும், புதிதாகத் தோற்றுவிப்பதற்கும் சைவ சமயப் பெரியார்களாக விளங்கிய அரசகுருக்கள் தூண்டுதலாய் இருந்தார்கள்.

**வைணவம்**

சைவசமயத்திற்கு அடுத்த நிலையில் வைணவம் இம் மாவட்டத்தில் வளர்ச்சிபெற்று விளங்கியது. பல்லவர் காலத்தில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் இம்மாவட்டப் பகுதிகளுக்கு வந்து வைணவ பக்தியியக்கம் வளர பாடுபட்டுள்ளார். இவரால் பாடப் பட்ட தலங்கள் சில இங்கு உள்ளன. இவற்றில் குறிப்பிடத் தக்கவை குடவாசல் வட்டத்திலுள்ள திருக்கண்ணமங்கை, நன்னிலம் வட்டத்திலுள்ள சிறுபுலியூர் ஆகும். இவை இவரால் மங்களா சாசனம் பெற்ற பதிகளாகும். திருகண்ணமங்கையிலுள்ள பெருமாள்கோயில் இன்றும் சிறப்புடன் விளங்கி வருகிறது. நாதமுனிகளின் உடன்பிறந்த சகோதரி இவ்வூரில் வாழ்க்கைப் பட்டவர். "இராமானுசக்கூடம்" என்ற பெயரில் இவ்வூரில் கி.பி. 1553-ல் அன்னதானச் சத்திரம் ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. திருவரங்கத்து அமுதனார், பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், அந்தகக் கவி வீரராகவ முதலியார், காளமேகப்புலவர் பாடல்களில் இத்திருத்தலம் இடம் பெற்றுள்ளது. சிறுபுலியூர் பெருமாள் பற்றி திருமங்கையாழ்வார் பத்துப் பாடல்கள் பாடிப் போற்றியுள்ளார்.

சோழர் காலத்தில் சைவத்தினைப் போன்று வைணவத்திற்கு ஆதரவு கிடைக்காவிட்டாலும் திருவாரூர் மாவட்டத்துப் பழமை யான ஊர்கள் ஒவ்வொன்றிலும் வைணவக் கோயில்களும் இருந்துள்ளன. இவற்றிற்குச் சோழ அரசர்களும் அதிகாரிகளும் பொதுமக்களும் குறிப்பிடத்தக்க அளவு கொடைகள் அளித் துள்ளதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பருத்தியூரில் கிடைத்த இராமர், சீதை, இலட்சமணர் செப்புத்திருமேனிகள் சோழர்காலத்துத் தலைசிறந்த படைப்புகள் ஆகும். மன்னார்குடி, திருமக்கோட்டை முதலிய இடங்களிலுள்ள பெருமாள் கோயில்கள் குறிப்பிடத்தக்க முறையில் இக்கோயில் கொடைகளைப் பெற்றன. மன்னார்குடி இராசகோபாலசாமி கோயில் முதல் இராசாதிராசன் காலத்தில் கி.பி. பதினோறாம் நூற்றாண்டில் எடுக்கப்பட்டு

முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி கண்டது. இது "குலோத்துங்கசோழ விண்ணகரம்" என்று இக்காலத்தில் பெயர் மாற்றம் பெற்றது. மூன்றாம் இராசேந்திர சோழன் ஆட்சிக்காலத்தில் "வண்டுவராபதிமடம்" என்ற வைணவ மடம் மன்னார்குடியில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதற்காக மடப்புற இறையிலியாய் இக்காலத்தில் நிலங்கள் அளிக்கப் பட்டுள்ளன. தஞ்சை நாயக்கர் காலத்தில் இக்கோயில் பெருவளர்ச்சி பெற்றது. இரகுநாதநாயக்கர், விசயராகவநாயக்கர் காலத்தில் இக்கோயிலில் பெரும் மண்டபங்களும், இராசகோபுரமும் வாகன மண்டபங்களும் கட்டப்பட்டுள்ளன. தஞ்சை மராட்டியர் ஆட்சியின் போதும் இக்கோயில் வளர்ச்சி கண்டுள்ளது. மன்னார் குடியிலிருந்து தஞ்சாவூர் செல்லும் வழியில் உள்ள வடுவூர் பெருமாள் கோயில் தஞ்சை நாயக்கர் காலத்தில் தோன்றி மராட்டியர் காலத்தில் திருப்பணி கண்ட கோயிலாகும். தஞ்சை நாயக்கர் காலத்தினைச் சார்ந்த அழகிய இராமர், இலட்சுமணர், சீதை ஆகியோரது செப்புத்திருமேனிகள் இங்குள்ளன.

## பல்வகைக் கோயில்கள்

திருவாரூர் மாவட்டத்தில் பல்வேறு தெய்வங்களுக்குக் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. முதலாம் இராசராசன் காலத்தில நன்னிலம் வட்டத்துக் கிரனூரில் இருந்து துர்க்கை கோயிலுக்கு அர்ச்சனா போகமாக நிலமளிக்கப் பட்டுள்ளது. வலங்கைமான் வட்டத்து முனியூரில் சோழர் காலத்தில் துர்க்கையம்மன் கோயில் இருந்துள்ளது. கொற்றவை என்று தமிழ்மக்களால் வழிபடப்பட்ட இத்தெய்வம் தொடர்ந்து சோழர் காலத்திலும் தனிக்கோயில்களில் வைத்து வழிபடப்பட்டாள். எல்லைக் காவல்தெய்வமாக. சோழர் காலத்தில் பிடாரியம்மன் விளங்கியுள்ளார். ருத்ரகங்கை, திருவாஞ்சியம் முதலிய ஊர்களில் பழமையான பிடாரி கோயில்கள் இருந்துள்ளன. கல்விக்குக் கடவுளாக விளங்கிய சரஸ்வதி தேவிக்கு நன்னிலம் வட்டத்துக் கூத்தனூரில் கோயில் ஒன்று எடுப்பிக்கப்பட்டுள்ளது. பிற்காலச் சோழ மன்னரின் கவிச்சக்கரவர்த்தியாய் விளங்கிய ஒட்டக்கூத்தரின் பேரனார் மலரியைச் சார்ந்த ஓவாதகூத்தனார் இக்கோயிலை எடுத்துள்ளார். ஓவாதகூத்தரும் கவிச்சக்கரவர்த்தியாய் விளங்கி யதைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. காடுகாள் என்ற பெண்

தெய்வத்திற்குச் சோழர் காலத்தில் திருவீழிமிழலையில் கோயில் இருந்துள்ளது. மழைவளம் தரும் அய்யனார்க்கும் கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளதைத் திருவீழிமிழலையிலுள்ள சோழரது கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. யமனுக்கு என்று தனிச்சிற்றாலயம் ஒன்று திருவாஞ்சியம் சிவன் கோயிலில் கட்டப்பட்டுள்ளது.

**சமண சமயம்**

திருவாரூர் மாவட்டப் பகுதியில் சோழ மன்னர்களின் ஆதரவுடன் சமணப் பள்ளிகள் தோன்றியிருக்கின்றன. தொண்டை நாட்டில் சோழர் காலத்தில் குறிப்பிடத்தக்க அளவில் சமணம் வளர்ச்சி கண்டுள்ளது. அதேவேளையில் சைவசமயத்தின் மையமாக விளங்கிய சோழநாட்டின் அகப்பகுதிகளில் முற்றிலுமாகப் புறக்கணிக்கப்படாமல் ஓரளவு சமண சமயத்திற்குச் சோழர்கள் ஆதரவு தந்துள்ளனர். இதனைக் காட்டுகின்ற முறையில் ஆங்காங்கே தற்போது அழிந்துபோன சமணப்பள்ளிகளில் தீர்த்தங்கரர் சிற்பங்கள் கிடைத்துள்ளன. சமணப்பள்ளிகளுக்கு அளித்த நிலங்களைக் குறிக்கும் "பள்ளிச்சந்தம்" என்ற பெயர் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன. இம்மாவட்டத்தில் சில இடங்களில் சமண சமயம் தொடர்பான செப்பேடுகளும் கிடைத்துள்ளன.

திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள பள்ளன்கோயிலில் நிலத்தைத் தோண்டும்போது கி.பி. ஆறாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பல்லவ மன்னன் சிம்மவர்மனின் செப்பேடு ஒன்று கிடைத்துள்ளது. தொன்றுதொட்டு சமணத்தலமாக விளங்கிவந்த ஊர் பள்ளன்கோயிலாகும். எனவேதான் இப்பகுதியில் சமணர்களால் இது பாதுகாக்கப்பட்டுக் காலப்போக்கில் மண்ணில் மறைந்து பின்னர் கிடைத்திருக்கிறது. சிம்மவர்மனின் ஆறாவது ஆட்சியாண்டில் (கி.பி. 550) வெளியிடப்பெற்ற இச்செப்பேடு தமிழ் நாட்டில் சமண சமயம் தொடர்பாகக் கிடைத்தச் செப்பேடுகளில் மிகவும் பழமையானது. காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள திருப்பருத்திக்குன்றத்தில் (ஜீனகாஞ்சி) வாழ்ந்த வச்சிரநந்திக்குரவர் என்ற சமணப்பெரியார்க்குப் பள்ளிச்சந்தமாக, நிலம் அளிக்கப் பட்டதை இது தெரிவிக்கிறது.

கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த சுந்தரசோழன் காலத்துச் சமணப்பள்ளி தொடர்பான செப்பேடு ஒன்றும் பள்ளன் கோயிலில் கிடைத்துள்ளது. தற்போது இப்பள்ளி முற்றிலுமாகச் சுவடு இல்லாமல் அழிந்துபோன நிலையில், இச்செப்பேடே இவ்வூரில் சமணப்பள்ளி இருந்துள்ளதைக் காட்டுகிறது. இப்பள்ளி "சுந்தரசோழப்பெரும்பள்ளி" என்று அக்கால அரசனின் பெயர் பெற்று விளங்கியுள்ளது. செல்வ வளம் பெற்ற "சிலேட்டிகுடியன்" என்ற வணிகனால் இப்பள்ளி கட்டப்பட்டிருக்கிறது. இதற்கான நிலத்தை இவர் உம்பளநாட்டு இருமுடிச்சோழபுரத்து நகரத்தாரிடமிருந்து விலைகொடுத்து வாங்கியுள்ளார். இப்பள்ளியில் வழிவழியாக பூசைகள் நடைபெறுவதற்கான செலவிற்காக உம்பள நாட்டிலும் தண்மலிபூண்டியிலும் பலநிலங்களை இவ்வணிகர் வாங்கித் தானமாக அளித்துள்ளார். இப்பள்ளியின் தலைமைப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்தவர் சந்திரநந்திபட்டாரகர் என்ற சமணத்துறவி ஆவார். பள்ளன்கோயிலில் இவரது கீழ் பல மாணவர்களும் மாணாக்கியரும் சமயக் கல்வி கற்றனர். இவர்களது உணவு முதலிய தேவைகளுக்கும் தானம் அளிக்கப்பட்டுள்ளது. திகம்பர சமணப்பிரிவில் நந்திசங்கத்தினைச் சார்ந்த துறவியரின் கீழ் பள்ளன்கோயில் சமணப்பள்ளி வழிபாட்டுத் தலமாகவும் சமயக்கல்வி பயிற்றுவிக்கும் கல்வி நிறுவனமாகவும் விளங்கியிருக்கிறது. திருவாரூர் மாவட்டத்தில் சோழர் காலத்தில் இருந்த வெண்ணாடு என்ற உள்நாட்டுப் பிரிவில் "அமண்குடி" என்ற ஊர் இருந்திருக்கிறது. சமணர்கள் வாழ்ந்தமையால் இவ்வூர் இப்பெயர் பெற்றிருக்க வேண்டும். மன்னார்குடி சோழர்காலத்தில் சமணத் தலமாக இருந்திருக்கக்கூடும். இன்றும் இவ்வூரில் சமணர்கள் வாழ்ந்து வருகின்றனர், சைவ, வைணவ சமயங்களின் எழுச்சியினால் இங்கிருந்த சமணப்பள்ளி பள்ளன்கோயில் சமணப் பள்ளியைப் போன்று முற்றிலுமாக அழிந்துபட்டிருக்க வேண்டும். இங்குள்ள இராசகோபாலசுவாமி கோயில் முன்பாக நெடுஞ் சாலையின் ஓரத்தில் உள்ள கொடிக்கம்பம் சமணர் கோயிலின் வாயிலில் காணப்படும் மானஸ்தம்பம் போன்றே காட்சியளிக்கிறது. எனவே இவ்வூரில் இருந்த சமணக்கோயிலின் கட்டடக்கலையின் தாக்கம் வைணவக்கோயிலுக்கும் பரவியிருக்க வேண்டும் எனக் கருத இடமுள்ளது,

திருத்துறைப்பூண்டி மருந்தீசர்கோயிலில் உள்ள மூன்றாம இராசராசசோழனின் கல்வெட்டு (கி. பி. 1227) அவ்வூருக்கு அருகிலுள்ள ஊர் ஒன்று சாத்தமங்கலம் என்று பெயர் பெற்று விளங்கியிருக்கிறது என்றும் இவ்வூரில் "பள்ளிச்சந்தமாக" அளிக்கப்பட்ட நிலங்கள் இருந்தன என்றும் குறிப்பிடுகிறது. சமண சமயத்தில் இருபத்து நான்காவது தீர்த்தங்கரராகத் தோன்றியவர் வர்த்தமானர் என்றழைக்கப்பட்ட மகாவீரர் ஆவார். இவரது பெயரில் திருவாரூர் மாவட்டத்திலும் அதன் புறப்பகுதிகளிலும் சிவன்கோயில்கள் சில இருந்திருக்கின்றன. திருப்புகலூர் சிவன் கோயில் "வர்த்தமானீசுவரம்" என்று அழைக்கப்பட்டிருக்கிறது. திருத்துறைப்பூண்டிப் பகுதியில் அமைந்த சேகல் என்ற ஊரின் சிவன்கோயில் இறைவன் "வர்த்தமானேசுவரர்" என்று அழைக்கப் படுகின்றார். இம்மாவட்டத்தில் சோழர் பல்லவர் காலங்களில் நிலவிய சமண சமயத்தின் செல்வாக்கினால் இப்பெயர்கள் சிவன் கோயில்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். நன்னிலம் வட்டத்தினை ஒட்டி இருந்த தீபங்குடியில் செயங்கொண்டார் என்ற சமணப்புலவர் வாழ்ந்துள்ளார். இவர் இயற்றிய சமண இலக்கியம் "தீபங்குடிப் பத்து" என்று பெயர் பெற்று விளங்கியுள்ளது. திருவாரூர் வட்டத்தினை ஒட்டியிருக்கும் கும்பகோணம் வட்டத்திலுள்ள கூகூரில் முதல் குலோத்துங்கசோழன் காலத்தில் இருந்த சமணப் பள்ளி "குலோத்துங்க சோழப்பெரும்பள்ளி" என்று பெயர் பெற்றுத் திகழ்ந்துள்ளது. இதற்குப் பள்ளிச்சந்தமாக நிலங்களும் அளிக்கப்பட்டுள்ளன.

திருவாரூரில் சமணர்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்துள்ளதைச் சம்பந்தர் பதிகத்தின் மூலம் அறியமுடிகிறது. இதனைச் சேக்கிழாரும் தனது பெரியபுராணத்தில் உறுதிப் படுத்துகின்றார். திருவாரூர் கமலாலயத்தைச் சூழ்ந்த கரைப்பகுதிகளில் சமணர்களின் பாழிகள் இருந்தன என்றும் இவை தண்டியடிகள் என்ற நாயன்மாரால் அகற்றப்பட்டன என்றும் சேக்கிழார் கூறுகின்றார். மேலும் திருவாரூரில் இருந்த விறல் மிண்டநாயனார் என்ற சைவஅடியார் சமணர்களின் கேலிக்கு ஆளானார் என்றும் கூறுகின்றார்.

குடவாசல் பகுதியில் அமைந்த ஓகை என்ற பகுதியில் தீர்த்தங்கரரின் சிற்பம் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது. அசோகமரத்தின்

நிழலில் முக்குடைக்குக் கீழே அர்த்தபரியங்காசனத்தில் அமர்ந்த நிலையில் இத்தீர்த்தங்கரர் காட்சியளிக்கின்றார். இத்தீர்த்தங் கரரின் சிம்மபீடத்தில் இரு யானைகளுக்கு இடையில் அமர்ந் திருக்கும் கஜலட்சுமியின் உருவம் காணப்படுவது புதுமையாக உள்ளது.

## பௌத்த சமயம்

திருவாரூர் மாவட்டத்தை உள்ளடக்கிய சோழநாட்டில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே பௌத்தசமயம் சிறப்புடன் விளங்கி வந்திருக்கிறது. சங்க காலத்தினை அடுத்து வந்த களப் பிரர்களும் பிற்காலச் சோழர்களும் பௌத்த சமயத்திற்குத் தொடர்ந்து ஆதரவு அளித்து வந்திருக்கின்றனர். இதனால் சோழ நாட்டில் சங்க காலத்திலிருந்து கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு முடிய பௌத்த சமயம் தொடர்பான இலக்கியங்கள், கல்வெட்டுகள், சிற்பங்கள், செப்பேடுகள் கிடைக்கின்றன. இடைக் காலத்தில் கிழக்காசிய நாடுகளுடன் சோழர்கள் கொண்ட அரசியல் வணிகத் தொடர்புகளால் அங்கிருந்து பௌத்தம் மீண்டும் சோழநாட்டில் மறுமலர்ச்சியடைந்துள்ளது. தமிழ்நாட்டின் அருகில் இருந்த இலங்கையும் சோழநாட்டில் பௌத்தம் பரவுவதற்குக் காரணமாக இருந்தது. முதலாம் இராசராசனின் ஆனைமங்கலம் செப்பேடு (லெய்டன் செப்பேடு), முதலாம் குலோத்துங்கனின் சிறிய ஆனைமங்கலம் செப்பேடு ஆகியவை நாகபட்டினத்தில் பௌத்தம் கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டுகளில் மிகச்சிறப்பாக இருந்ததைக் காட்டுகின்றன. கிடாரத்தரசன் சூளாமணிவர்மன் மகன் மாறவிசய குலோத்துங்கவர்மன் என்பவன் நாகபட்டினத்தில் பெரிய புத்தவிகாரம் ஒன்றினைக் கட்ட அனுமதியளித்து தானம் வழங்கிய செய்தியை இராசராசனின் செப்பேடு உணர்த்துகிறது. திருவாரூர் மாவட்டத்திற்கு அருகிலுள்ள நாகபட்டினத்தின் மூலமாக சோழநாட்டின் உள்பகுதிகளில் பௌத்தம் பரவ வழி ஏற்பட்டது.

சங்க காலத்திற்குப் பின்னர் திருவாரூர் மாவட்டத்திலும் அதன் எல்லையை ஒட்டிய மாவட்ட ஊர்களிலும் புத்தரின் உருவங்களும் பௌத்தம் தொடர்பான சான்றுகளும் கிடைத்துள்ளன. இவற்றில்

குறிப்பிடத்தக்க ஊர்களாக பூதமங்கலம், எலயனூர், பெருஞ்சேரி, கோட்டப்பாடி, புஷ்பவனம், இடும்பவனம் முதலிய ஊர்களைக் கூறலாம்.

மன்னார்குடி வட்டத்திலுள்ள பூதமங்கலம் களப்பிரர் காலத்திலும் அதனைத் தொடர்ந்தும் தலைசிறந்த பௌத்தத் தலமாக விளங்கியுள்ளது. சங்க காலத்திற்குப் பின்னர் களப்பிரர் சோழ நாட்டைக் கைப்பற்றியாண்டனர். அக்காலத்தில் களப்பிரர்கள் பௌத்த சமயத்தை ஆதரித்துப் போற்றியுள்ளனர். கி.பி. நான்காம் நூற்றாண்டில் அச்சுதவிக்கந்தன் என்ற களப்பிர அரசன் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து சோழநாட்டை ஆட்சிபுரிந்தான். இவனது காலத்தில் புகழ்பெற்ற பௌத்த சமய நூல்களை எழுதிய புத்ததத்தர் என்ற பௌத்த துறவி வாழ்ந்துள்ளார். இவரது ஊர் பூதமங்கலம் ஆகும். மன்னார்குடி வட்டத்திலுள்ள பூதமங்கலமே புத்ததத்தரின் ஊராகும் என்று பல்லவர் வரலாற்றை எழுதிய மீனாட்சி அவர்கள் கருதுகிறார். இவ்வூரில் வேணுதாசர் என்பவரால் கட்டப்பட்ட பெரிய புத்தவிகாரம் ஒன்று இருந்துள்ளது. இதில் தங்கியிருந்த காலத்தில்தான் பாலி மொழியில் புத்ததத்தர் 'விநயவிநிச்சயம்'' என்னும் நூலை இயற்றினார். பூதமங்கலத்தின் சிறப்பினையும் அவ்வூரில் இருந்த பௌத்த விகாரம் பற்றியும் புத்ததத்தர் இந்நூலில் எடுத்துக்கூறியுள்ளார். ''பூதமங்கலம் சோழநாட்டிற்குக் கொப்பூழ் போன்று (நாபிக் கமலம்) இருந்தது. இது பல்வேறு மரங்களாலும் சோலைகளாலும் பல்வேறு நீர்ப்பூக்கள் நிறைந்த குளங்களாலும் சூழ்ந்திருந்த வளமுடைய ஊராக விளங்கியது. காவிரி பாயும் இவ்வூரில் அகழியால் சூழப் பெற்ற வேணுதாசரால் கட்டப்பட்ட பௌத்தவிகாரம் இருந்தது'' என்று புத்ததத்தர் தமது நூலில் குறிப்பிடுகின்றார்.

> "காவேரி ஜலஸம்பாத பரிபூத மஹீதலே
> இத்தே ஸப்பங்க ஸம்பன்னே மங்கலே பூதமங்கலே
> பவராகார பாகார பரிக்ஷா பரிவாரிதே
> விஹாரே வேணுதாஸஸ்ஸ தஸ்ஸனீய மனோரமே''

புத்ததத்தரின் நூலில் இருந்து பூதமங்கலம் அவரது காலத்தில் பெரியபட்டணமாக விளங்கியிருக்கிறது என்று அறியமுடிகிறது. தற்போது இவ்வூரில் பௌத்த சமயம் தொடர்பான சான்றுகள்

எதுவும் இல்லாமல் அழிந்துவிட்டன. இவ்வூரில் அழிந்துவிட்ட பழமையான இரண்டு மண்மேடுகள் காணப்படுகின்றன. செங்கல் கட்டடம் இங்கு இருந்து அழிந்தமைக்கான தடையங்கள் காணப்படுகின்றன. இவற்றில் அகழாய்வு செய்தால் பழமையான பௌத்த சமயச் சான்றுகள் கிடைக்க வாய்ப்புள்ளது. பூத மங்கலத்திற்கு அருகில் பள்ளிவிருத்தி என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூர் பௌத்த சமயத்தவர்க்கு அளிக்கப்பட்ட நிலங்களைக் கொண்டிருந்தமையால் இப்பெயர் பெற்றது என்று மீனாட்சி கருதுகின்றார். மேலும் இவ்வூருக்கு அருகிலுள்ள மன்னார்குடி சமணர்கோயிலில் புத்தரின் சிற்பம் ஒன்று இருந்ததாகவும் குறிப் பிடுகின்றார்.

புத்தமங்கலம் என்ற ஊர் திருவாரூர்க் கூற்றத்தில் இருந்த தாகச் சோழர் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவ்வூர் பௌத்த சமயத்தினர் வாழ்ந்த, அவர்களுக்கு உரிமையுடைய ஊராக சோழப் பெருவேந்தர் காலத்தில் இருந்திருக்க வேண்டும். பழைய நன்னிலம் வட்டத்தினைச் சார்ந்த எலயனூர், கோட்டப்பாடி என்ற ஊர்களில் புத்தரது சிற்பங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இவற்றில் எலயனூர் சிற்பம் தற்போது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள இடும்பவனத்திலும், புஷ்ப வனத்திலும் கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த புத்தரின் சிற்பங்கள் கண்டறியப்பட்டுள்ளன. மாயவரத்திலிருந்து திருவாரூர் செல்லும் புகைவண்டிப் பாதையிலுள்ள பெருஞ்சேரி என்ற ஊரில் மிகப்பெரிய புத்தரின் கற்சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தின் பீடத்தில் இருந்த தமிழ்க் கல்வெட்டு தற்போது அழிந்த நிலையில் காணப் படுகிறது. சோழநாட்டில் கிடைத்த இப்புத்தர் சிற்பங்கள் அர்த்த பரியங்காசனத்தில் அமர்ந்த நிலையில் காட்சியளிக்கின்றன. மார்பிலும் இடது தோளிலும் ஆடைக்கட்டு காணப்படுகிறது. தலையில் ஞானமுடியுடன் கூடிய அருள்முடி காட்டப்பட்டுள்ளது. கரங்கள் இரண்டும் மடித்துவைத்த கால்களின் மீது வைத்த நிலையில் காணப்படுகின்றன.

# கலை

திருவாரூர் மாவட்டம், கட்டடம், சிற்பம், செப்புத்திருமேனி ஓவியம், இசை, நடனம் என்று பல்வேறு கலைகளை வளர்க்கும் மாவட்டமாக வரலாற்றில் திகழ்ந்து வருகிறது.

**கட்டடக்கலை**

இம்மாவட்டத்தில் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து அண்மைக் காலம் வரை கோயில்கள் கட்டப்பட்டுள்ளதை இலக்கியங்கள் கல்வெட்டுகள் எடுத்துக் கூறுகின்றன. இவற்றில் பல புதிய மரபுகளைப் புகுத்திக் காண்பவர் மனத்தினைக் கவரும் விதத்தில் கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த கோச்செங்கணான் என்ற சோழமன்னன் மாடக்கோயில் என்ற ஒருவகைக் கோயிலைப் பல இடங்களில் எடுப்பித்துள்ளான். இவன் கட்டிய கோயில்கள் நன்னிலம், அம்பர்மாகாளம் போன்ற இடங்களில் இருந்துள்ளதைத் தேவாரம் தெரிவிக்கிறது. பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மவர்மனின் படைத்தலைவனாக விளங்கிய பரஞ்சோதி என்று அழைக்கப்பட்ட சிறுத்தொண்டர் கணபதி வழிபாட்டை வாதாபியிலிருந்து இம்மாவட்டத்திற்குக் கொண்டு வந்தார். தாம் பிறந்த திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சுவரம் என்ற பெயரில் கோயில் கட்டியுள்ளார். பெரியபுராணம் இவரது வரலாற்றை விரித்துக் கூறுகிறது. தொண்டைநாட்டில் அதிக வழக்கில் இருந்த தூங்கானைமாடக்கோயில் வடிவம் திருவாரூர் வட்டத்துத் திருமெய்ச்சூர் கோயிலில் காணப்படுகிறது.

சங்க காலத்திற்குப் பின்னர் மீண்டும் கி.பி. 850-ல் விசயாலயனை முதல் மன்னனாகக் கொண்டு சோழர்கள் எழுச்சியுற்று சில நூற்றாண்டுகள் சோழநாட்டை ஆண்டனர். இக்காலத்தில் இம் மாவட்டத்தில் ஏராளமான ஊர்களில் கோயில்களின் விமானம், மண்டபம், கோபுரம் ஆகியவற்றைச் சோழர்கள் தோற்று வித்துள்ளனர். திருவீழிமிழலைக்கோயில் முற்காலச்சோழர் காலத் தினைச் சார்ந்த விசயாலயன் காலத்துக் கலைப்படைப்பாகும்.

கண்டராதித்த சோழனின் மனைவியாக விளங்கிய செம்பியன் மாதேவியார் கோயில் கலை வளர்ச்சிக்குப் பெரும்பங்கு ஆற்றியுள்ளார். திருவாரூரில் தியாகராசர் கோயில் வளாகத்தில் வேலைப்பாடுமிக்க அறநெறிஈஸ்வரம் என்ற சிவன்கோயிலைக் கற்றளியாக்கியுள்ளார். முதல் இராசேந்திரன் காலத்தில் அவனுடன் நெருங்கிய உறவுகொண்டு வாழ்ந்த பரவைநங்கை என்ற பெண் திருவாரூர் வீதிவிடங்கர் கோயில் விமானத்தைக் கற்றளியாக்கியுள்ளாள். முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் திருவாரூர்க் கோயிலின் தேவாசிரியமண்டபம் திருப்பணி செய்யப்பட்டதுடன் "இராசநாராயணன் திருமண்டபம்" என்ற பெயரில் மண்டபம் ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. இரண்டாம் இராசராசனின் காலத்தில் நன்னிலம் வட்டத்திலுள்ள ருத்திரகங்கை சிவன் கோயில் விமானம், மண்டபம் ஆகியவை பலரால் சேர்ந்து உருவாக்கப்பட்டுள்ளது. அச்சுதமங்கலத்துச் சிவன் கோயிலை மூன்றாம் குலோத்துங்கசோழனின் இராசகுரு எடுப்பித்துள்ளார். மூன்றாம் குலோத்துங்கசோழன் காலத்தில் பிற்காலச்சோழர் காலத்துக் கட்டடம் சிற்பம் ஆகியவற்றிற்குக் கலைக்கூடமாய் திகழும் கோபுரம் ஒன்று திருவாரூர்க் கோயிலின் கிழக்கு வாயிலில் கம்பீரமாகக் கட்டப்பட்டது. மனுநீதிச் சோழனின் வரலாற்றை விளக்கும் திருவாரூர்க் கல்தேர் பிற்காலச் சோழரின் அரிய கலைப்படைப்பாகும். பிற்காலச் சோழர்கள் இம்மாவட்டத்துச் சிவன் கோயில்களில் திருக்காமகோட்டம் என்றழைக்கப்படும் அம்மன் கோயில்களை உருவாக்கியுள்ளனர்.

விசயநகர, நாயக்கர் காலங்களிலும் கோயில் கட்டடக்கலை இம்மாவட்டத்தில் வளர்ச்சி கண்டுள்ளது. கி.பி. 1440-ல் விசயநகரப் படைத்தலைவன் லக்கணதண்டநாயக்கன் காலத்தில் திருவாரூர்க் கோயிலின் மேற்குக் கோபுரம் கட்டப்பட்டுள்ளது. திருவாரூர்க் கோயிலில் காணப்படும் கமலாலயம் என்றழைக்கப்படும் கலை எழில்வாய்ந்த தெப்பக்குளமும் அம்மன் கோயிலும் விசயநகர நாயக்கர் காலத்தில் தோன்றியவையாகும். மன்னார்குடியில் உள்ள இராசகோபாலசுவாமி கோயில் கொடிமரம் தமிழ்நாட்டுக் கோயில்களில் அரியமுறையில் காணப்படும் நாயக்கர்காலக் கலைப் படைப்பாகும். 'மானஸ்தம்பம்' என்று கருநாடக சமணர் கோயில் களில் காணப்படும் கட்டடக்கலை மரபை நாயக்க மன்னர்கள்

பின்பற்றி இதனை உருவாக்கியுள்ளனர். இராசகோபாலசுவாமி கோயிலின் பெருங்கோபுரமும் அவற்றின் மண்டபங்களும் தஞ்சை நாயக்கர் காலத்தில் உருவானவையாகும்.

## சிற்பம்

திருவாரூர்க் கோயிலில் பல்லவர் காலத்தினைச் சார்ந்த சப்தகன்னியர்களின் உருவங்கள் காணப்படுகின்றன. இங்கு பல்லவர் காலத்துச் சேட்டையின் உருவமும் உள்ளது. சோழ மன்னர்கள் எடுப்பித்த கோயில்களின் விமானங்களிலுள்ள தேவகோட்டங்களில் பல அழகிய தெய்வ உருவங்கள் காட்சியளிக்கின்றன. திருவாரூரில் செம்பியன்மாதேவியும், பரவைநங்கையும் எடுப்பித்த விமானக் கோட்டங்களில் துர்க்கை, தட்சிணாமூர்த்தி போன்ற பல அழகிய தெய்வ உருவங்கள் காட்சியளிக்கின்றன. வன்மீகநாதர் கோயில் அடித்தளத்தில் பல சிற்றுருவச் சிற்பங்கள் சோழர்கலைக்குச் சான்றாய் விளங்குகின்றன. சோழர் காலத்துப் பரிவார ஆலயங்களிலும் தனித்த நிலையில் விளங்கும் சிற்றாலயங்களிலும் அழகிய சிற்பங்கள் வழிபாட்டிற்காகச் செய்து வைக்கப்பட்டுள்ளன. திருத்துறைப்பூண்டியில் சோழர் காலத்துக் கசசம்காரமூர்த்தியின் கம்பீரமான உருவம் ஒன்று உள்ளது. புத்தகமூரிலுள்ள தட்சிணாமூர்த்தியின் பின்புறம் அதனைச் செய்வித்தோர் பற்றித் தெரிவிக்கும் சோழர் காலக் கல்வெட்டு உள்ளது.

பல்வேறு அரச மரபினர் எடுப்பித்த கோயில்களில் அவர்கள் என்றும் அடியாராய் வணங்கி நிற்கும் உருவச் சிலைகள் திருவாரூர் மாவட்டத்தில் பல கோயில்களில் காணப்படுகின்றன. திருவாரூர்க் கிழக்குக்கோபுரத்தில் மூன்றாம் குலோத்துங்கசோழன் உருவச் சிலை உள்ளது. இக்கோயிலிலுள்ள துந்துபீசுவரத்தில் மூன்றாம் குலோத்துங்கனின் இராசகுரு ஈசுவரசிவர் ஆன சோமேசுவரரின் உருவச்சிலை காணப்படுகிறது, தஞ்சை மன்னர் செவ்வப்பநாயக்கரின் ஆதரவில் எடுக்கப்பட்ட திருவாரூர்க் கோயில் வடக்குக்கோபுரத்தின் மாடத்தில் செவ்வப்பநாயக்கரின் உருவச் சிலை காட்சியளிக்கிறது. திருத்துறைப்பூண்டி பிறவிமருந்தீசுவரர் கோயிலில் கசசம்காரமூர்த்தி சிலையின் அடியில் மூன்றாம் இராசேந்திரன் உருவச் சிலை உள்ளது. முனியூர் அகத்தீசுவரர் கோயிலில் மூன்றாம் இராசராச

சோழனின் உருவச் சிலை காணப்படுகிறது. தஞ்சை நாயக்க மன்னரான அச்சுதராயர் அவரது மனைவி திருமலாம்பாள் உருவச் சிலைகள் மன்னார்குடி இராசகோபால சுவாமி கோயிலில் உள்ளன. இவர்களது உருவச் சிலைகள் இவர் காலத்தில் எடுப்பிக்கப்பட்ட ஐம்பத்துநான்கு அடி உயரமுள்ள இராசகோபாலசுவாமி கோயிலில் கருடத்தம்பத்தின் அடியிலும் அஞ்சலித்த நிலையில் காணப்படுகின்றன. மன்னார்குடி கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தில் தூண் ஒன்றில் உயரமான விசயராகவநாயக்கரின் அழகிய எடுப்பான தோற்றமுடைய உருவம் மனைவியருடன் காணப்படுகிறது.

## செப்புத்திருமேனிகள்

தமிழ்நாட்டில் சோழர் காலத்தில் கோயில்களில் உற்சவமூர்த்திகளாக விளங்கும் செப்புத் திருமேனிகள் உயர் கலைத்தரம் கொண்டவையாய் செய்து வைக்கப்பட்டுள்ளன. இவற்றைச் செய்து வைத்தமைக்கான குறிப்புக்கள் அம்பர், திருவாரூர், திருவீழிமிழலை கோயில்களின் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. காலத்தினைக் கணித்துக் கூறுகின்ற முறையில் செப்புத் திருமேனிகளின் பீடத்தில் அவற்றைச் செய்வித்தோரின் பெயர் பொறித்த சோழர் காலத்துச் செப்புத் திருமேனிகள் பல திருவாரூர் மாவட்டத்தில் கண்டறியப்பட்டுள்ளன.

திருத்துறைப்பூண்டி பிறவி மருந்தீசர் கோயிலிலுள்ள தனியம்மன் பீடத்தில் உள்ள பொறிப்பு மூலம் உமாபரமேசுவரியாரை கி.பி. பத்தாம் நூற்றாண்டளவில் தேவன்பழிப்பிலி என்பவன் செய்வித்துள்ளதை அறியமுடிகிறது.

நீடாமங்கலம் வட்டத்தினைச் சார்ந்த முல்லைவாசல் சிவன் கோயிலில் காணப்படும் சோமாஸ்கந்தர் உருவத்தை (உமாஸ்கந்ததேவர்) கி.பி. 11-12ஆம் நூற்றாண்டளவில் குன்றனூர்க்கிழவன் குலமாணிக்கம் செய்தளித்துள்ளான். இதனை இச்செப்புத் திருமேனியின் பீடத்திலுள்ள பொறிப்புத் தெரிவிக்கிறது. திருமெய்ச்சூர் சிவன் கோயிலிலுள்ள சோழர் காலத்துத் திரிபுராந்தகர் செப்புத்திருமேனியின் பீடத்திலும் எழுத்துப் பொறிப்பு உள்ளது. முதலாம் குலோத்துங்கசோழனின் காலத்தில் இத்திரிபுராந்தகர்க்கு வழிபாட்டிற்காக நிலம் அளித்த செய்தி இதில் குறிப்பிடப்பட்டது புதுமையானதாகும்.

கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல் அண்மைக்காலம் வரையுள்ள காலத்தினைச் சார்ந்த அழகிய செப்புத் திருமேனிகள் திருவாரூர் மாவட்டத்துக் கோயில்களில் உள்ளன. இவற்றில் சில கோயில்களில் திருப்பணி செய்யும்போது கண்டறியப்பட்டுள்ளன. நல்லூர் சிவன்கோயிலில் நிலவறையின் உள்ளேயிருந்து கலைச் சிறப்பு வாய்ந்த செப்புத்திருமேனிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பல்லவர் சோழர் காலத்துச் செப்புத்திருமேனிகளின் கலைக்கூடமாய் திருவாரூர் மாவட்டம் விளங்குகிறது.

திருவாரூர் வட்டத்து திருநெய்ப்பேரில் பல்லவர் காலத்தினைச் சார்ந்த நின்ற நிலையிலுள்ள திருமால் (கி.பி. 750) சோழர் காலத்தினைச் சார்ந்த திரிபுராந்தகர் (கி.பி. 875) வீணாதரர் (கி. பி. 10ஆம் நூற்றாண்டு) திருமால் (கி. பி. 965) செப்புத் திருமேனிகள் உள்ளன. குடவாசல் வட்டத்துப் பருத்தியூரில் கலைச்சிகரமாய் விளங்கும் இராமர், இலட்சுமணர், சீதை, திருமால் (கி.பி. 950) செப்புத்திருமேனிகள் காணப்படுகின்றன. நல்லூரில் கண்டறியப்பட்ட முற்காலச்சோழர் காலத்து உமா, நடராசர் திருவுருவங்கள் கலைநயம் படைத்தவையாகும். திருத்துறைப்பூண்டி கோயிலில் பல அரிய செப்புத்திருமேனிகள் உள்ளன. இவற்றில் சண்டிகேசுவரர் (கி.பி. 950), விநாயகர் (கி.பி. 1000), ரிசபவாகன தேவர் (கி.பி. 1050), திரிபுராந்தகர் (கி.பி. 925), பைரவர் (கி.பி. 925), விநாயகர் (கி.பி. 1000), உருவங்கள் குறிப்பிடத் தக்கவையாகும். சேகல், கொருக்கை கோயில்களிலும் முற்கால இடைக்கால, பிற்காலச்சோழர் காலத்துச் செப்புத் திருமேனிகள் காணப்படுகின்றன. சேகலைச் சார்ந்த சோமாஸ்கந்தர் (கி.பி. 950), அப்பர் (கி.பி. 1000) சூரியன் (கி.பி. 1150), செப்புத்திருமேனிகள் குறிப்பிடத்தக்கவையாகும். கொருக்கையில் உள்ள சண்டிகேசுவரர் (கி.பி. 1000), ஆலிங்கனசந்திரசேகரர் (கி.பி. 1000), பைரவர் (கி.பி. 1000), காளைவாகனம் (கி.பி. 1200) முதலிய செப்புத் திருமேனிகள் கலைச்சிறப்பு வாய்ந்தவையாகும். நடப்பூரில் உமையை அணைத்து நிற்கும் ஆலிங்கனசந்திரசேகரரின் திருமேனி (கி. பி. 1100) கிடைத்துள்ளது. குடவாசலிலுள்ள வடவீரர் கோயிலில் உள்ள காளியின் உருவம் கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. சுகாசனத்தில் நான்கு கரங்களுடன் விளங்குகிறது. திருவாரூர் மாவட்டம் செப்புத் திருமேனிகளின் கலைக்கூடமாய்

விளங்குகிறது என்பதற்குச் சான்றாக இன்னும் ஆயிரக்கணக்கான செப்புத்திருமேனிகள் இம்மாவட்டத்துக் கோயில்களில் காணப் படுகின்றன. சோழர்கள் தங்கள் வெற்றியினால் அடைந்த செல்வத்தைச் செப்புத் திருமேனிகளாகச் செய்து வைத்தார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது. கனமாகச் செய்யப்பட்ட இத்திருமேனிகளை எவ்வளவு நுணுக்கமாகக் 'கண்ணுள் வினைஞர்' எனப் போற்றப்பட்ட சிற்பக் கலைஞர்கள் செய்திருக்கின்றார்கள் என்பது இவற்றின் கலைத்திறனை ஆய்வார்க்குப் புலனாகும்.

## அணிகலன்கள்

சோழர்கள் தாங்கள் வெற்றியில் ஈட்டிய பொருள்களைச் சேமித்து வைக்கும் ஆன்மிகக் கருவூலங்களாகக் கோயில்களைக் கருதினார்கள். தங்களது பெருமையும் ஆளுமையும் புலப்படுகின்ற முறையில் விலைமதிப்பற்ற கல்மணிகள் பதித்த அணிகலன்களை அவர்கள் இம்மாவட்டத்துக் கோயில்களுக்கு அளித்துள்ளனர். திருவாரூர், திருவீழிமிழலை, அம்பர் முதலிய இடங்களிலுள்ள கோயில்களில் மலைக்கவைக்கும் இவற்றின் விவரங்கள் கல்வெட்டு களில் விரிவாகப் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. இவற்றின் பெயர்களும் அமைப்பும் அக்காலத்து மக்களின் நாகரிகத்தினை அறிந்து கொள்ளத் துணைசெய்கின்றன.

## இசையும் கூத்தும்

திருவாரூர் மாவட்டத்துக் கோயில்களில் இசையும் நடனமும் மிகுந்த சிறப்புடன் விளங்கின என்பதை அங்குள்ள சிற்பங்களும் கல்வெட்டுகளும் புலப்படுத்துகின்றன. இசைக்கருவிகள் பல கோயில் களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. திருத்துறைப் பூண்டி பிறவிமருந்தீசர் கோயிலுக்குச் செம்பாலான "குடமுழா" என்ற வாத்தியக்கருவி தானமாகச் சோழர் காலத்தில் தரப்பட் டுள்ளது. குடமுழா சிவனது நாட்டியத்தின் போது நந்திகேசுவரர் வாசிக்கும் கருவியாகும். நடராசர் சிற்பங்களின் அடியில் நந்தி தேவர் குடமுழா வாசிப்பதுபோல காட்டப்படுவது வழக்கமாகும். திருத்துறைப்பூண்டிக் கோயிலுக்கு குடமுழா என்ற பஞ்சமுகவாத்தி யத்தை கி.பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டில் மல்லாண்டாரான சோழகோனார் என்பவர் அளித்துள்ளதை அதில் பொறிக்கப்பட்ட பொறிப்புத் தெரிவிக்கிறது.

"ஸ்வஸ்திஸ்ரீ இக்குடவிழா சமைப்பித்
திட்டார் சிகாருடையார் மல்லாண்டா
ரான சோழ கோனார்"

என்பது அப்பொறிப்பாகும்.

சிவன் கோயில்களில் சோழர் காலத்தில் ஆடற்கலையில் கற்றுத் துறைபோகிய நாட்டிய நங்கையர் இருந்தனர். தளிச்சேரிப் பெண்டுகள் என்று அழைக்கப்பட்ட இவர்கள் அரசர்கள் கோயில் களுக்கு வந்திருந்தபோது தங்களது நாட்டியத்தை அரங்கேற்றம் செய்துள்ளனர். அரசனால் இவர்களுக்குத் "தலைக்கோலி" என்ற பட்டமும் அளிக்கப்பட்டுள்ளது. விக்கிரமசோழன் திருவாரூர்க் கோயிலுக்கு வந்திருந்தபோது தனது நாட்டியத்தை அவர்முன் அரங்கேற்றிய பெண்ணொருத்தி தலைக்கோலிப் பட்டம் பெற்றிருக்கின்றாள். விழாக்காலங்களில் கோயில்களில் இருந்த ஆடல்மகளிர் பல்வகை நடனங்களைப் பொதுமக்களுக்கு ஆடிக் காட்டியுள்ளனர்.

முதல் இராசராசன் தஞ்சாவூரில் தான் கட்டிய பெருங் கோயிலில் நானூறு ஆடல் மகளிரை ஆடல் பணியில் அமர்த்தி யுள்ளான். அக்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த கோயில்கள் பலவற்றிலிருந்து பணிபுரிந்துவந்த தேர்ச்சிமிக்க நாட்டியமகளிர் தேர்வு செய்யப்பட்டு தஞ்சைக்கோயிலில் நடனமாடும் பணியில் அமர்த்தப்பட்டனர். இதற்குத் திருவாரூர்க் கோயிலிலிருந்து பலரும் இம்மாவட்டத்துப் பிறகோயில்களிலிருந்தும் தேர்வு செய்யப்பட்டு தஞ்சைக் கோயிலில் இராசராசனால் பணியில் அமர்த்தப்பட்டனர். இதனைத் தஞ்சைக்கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவாகளது பெயர், கோயில், ஊர், நாடு முதலிய விவரங்கள் கல்வெட்டில் தெளிவாகக் குறிப்பிடப்படுகின்றன.

தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவரும் கூத்துக்கள் சோழர்காலத்துக் கோயில்களில் ஆடப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படும் சாக்கைக் கூத்து, சாந்திக்கூத்து போன்றவை இம்மாவட்டத்துக் கோயில்களில் திருவிழா நாட்களில் நிகழ்த்தப்பட்டுள்ளன. இதற்காக நிலக் கொடைகள் வழங்கப்பட்டுள்ளன. திருவாரூர்க் கோயிலிலும்

நன்னிலவட்டத்துக் கோட்டூர்க் கோயிலிலும் சாந்திக்கூத்து ஆடப் பட்டுள்ளது. சாக்கைக் கூத்து நன்னில வட்டத்துக் கீரனூரில் ஆடப்பெற்றுள்ளதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

திருக்காறவாசல், திருவீழிமிழலை போன்ற இடங்களிலுள்ள கோயில்களில் தேவாரப்பாடல் பாடுவதற்குத் "திருக்கைக்கொட்டி" என்ற பெயரில் தனியாக மண்டபங்கள் இருந்துள்ளன. இதனால் சமயஞ்சார்ந்த இசைக்கலை கோயில்களில் வளர வழியேற் பட்டுள்ளது. அண்மைக் காலம்வரை இசைக் கலைஞர்களின் இருப்பிடமாய் இம்மாவட்டம் இருந்துள்ளது. கருநாடக சங்கீத மும்மணிகள் என்று போற்றப்படும் தியாகையர், முத்துசாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரி ஆகியோர் திருவாரூரில் தோன்றி யவர்கள் ஆவார்கள்.

## ஓவியக்கலை

ஓவியக்கலையும் இம்மாவட்டத்தில் தொன்றுதொட்டு வளர்ந் துள்ளது. விசயநகரவேந்தர், நாயக்கர், மராட்டியர் கால ஓவியங்கள் இம்மாவட்டத்துக் கோயில் விதானங்களில் காணப்படு கின்றன. கி.பி. 15-16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த விசயநகர வேந்தர் காலத்து ஓவியம், திருவீழிமிழலை சிவன்கோயில் "உக்கல் கிழான்மண்டபத்தின்" விதானத்தில் காணப்படுகிறது. இவ்வோவி யத்தில் காளியன் என்ற பாம்பின்மீது களிநடனம் புரியும் கண்ணன், உயிர்களை மயங்க வைக்கும் நிலையில் குழல் ஊதும் வேணு கோபாலன் ஆகியோர் உருவங்கள் காணப்படுகின்றன. திருவாரூர் தேவாசிரியர் மண்டபத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தியின் வரலாற்றை விளக்கும் நாயக்கர் கால ஓவியம் காணப்படுகிறது. இக்கோயிலில் மராட்டியர் பாணியில் வரையப்பட்ட சரபோஜியின் வண்ண வோவியமும் உள்ளது. நீடாமங்கலம் யமுனாம்பாள் சத்திரத்தி லுள்ள பிரதாபசிம்மன், யமுனாம்பாள் துளசா ஆகியோரின் வண்ண ஓவியங்கள் மராட்டியர் கலைப்பாணியில் அமைந்த மிகச்சிறந்த படைப்புகளாகும்.

# நாட்டுப் பிரிவுகள்-ஊர்கள்

## நாட்டுப் பிரிவுகள்

சோழநாடு இடைக்காலத்தில் பல ஊர்களின் தொகுதிகளைக் கொண்ட நாடு என்ற பல சிறிய உட் பிரிவுகளைக் கொண்டிருந்தது. இந்நாடுகள் ஏதேனும் ஒரு ஊர்ப் பெயரினை அடிப்படையாகக் கொண்டு நாடு, கூற்றம் (எ.கா: மருகல்நாடு, திருவாரூர்க்கூற்றம்) என்ற பின்னொட்டுக்களைக் கொண்டு விளங்கின. இவை ஆட்சியாளரால் உருவாக்கப்பட்ட நிர்வாகப் பிரிவுகள் அல்ல. சோழநாட்டில் இருந்த வேளாண் சமூக நிலவுடமை யாளர்கள் தங்கள் சமூக நலனைக் காத்துக்கொள்ள உருவாக்கிய அமைப்பாகும். இவையே அக்காலச் சமூகபெருச்சமுறைக்கு அடிப்படையாய் இருந்தன. இவை பல இனமரபு வட்டாரங்களாக தனிக்கூறு கொண்டவையாய் விளங்கின என்று எ. சுப்பராயலு, நொபொருகராஷிமா, பர்டன்ஸ்டெயின் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். இவை "நாட்டார்" என்றழைக்கப்பட்ட நாட்டவை மூலமாக நிர்வகிக்கப்பட்டு வந்தன. திருவாரூர் மாவட்டத்தில் "கூற்றம்" என்ற பின்னொட்டினைக் கொண்ட நாடுகள் எட்டும் "நாடு" என்ற பின்னொட்டினைக் கொண்ட நாடுகள் 14ம் ஆக 22 நாடுகள் சோழர் காலத்தில் இருந்துள்ளன. வேளாண் சமூக ஊர்களைச் சோழ அரசர்கள் முதலில் இதன் மூலமாக நிர்வாகம் செய்து வந்தனர்.

காலப்போக்கில் சோழப் பேரரசு வளர்ச்சி அடைந்தபோது இந்நாடுகளின் மீது தனது ஆதிக்கத்தினைச் செலுத்துகின்ற வகையில் பல முயற்சிகளை மேற்கொண்டது. கி.பி. பதினோராம் நூற்றாண்டில் முதல் இராசராசசோழன் காலத்தில் இம்முயற்சி தொடங்கப்பட்டது. வேளாண் சமூக நாடுகள் வளநாடு என் றழைக்கப்பட்ட பெரிய நிலப்பிரிவின் கீழ் கொண்டு வரப்பட்டன. வளநாடுகள் சோழ அரசர்களின் பெயர்களைக் கொண்டு விளங்கின. இரண்டு ஆறுகளுக்கிடையே அமைந்த நிலப்பரப்பு

வளநாடு என்றழைக்கப்பட்டது. திருவாரூர் மாவட்டத்தில் சோழ அரசர்களால் ஏற்படுத்தப்பட்ட எட்டு வளநாடுகள் இருந்துள்ளன.

விசயநகர, நாயக்கர் காலத்தில் நாடுகள் படிப்படியே தமது சமூகத் தன்மையை இழக்கத் தொடங்கின. புதிதாக வந்த ஆட்சியாளர்கள் இராச்சியம், உசாவடி, சீமை, சுபா, மாகாணம் என்ற நிர்வாகப் பிரிவுகளை ஏற்படுத்தி அவற்றில் திருவாரூர் மாவட்டத்தில் இருந்த ஊர்களைக் கொண்டு வந்தனர். அதன் பின்னர் ஆங்கிலேயர், இசுலாமியர் காலங்களில் மாவட்டம், தாலுக்கா, பிர்க்கா என்ற பிரிவுகள் தோன்றின. சுதந்திர இந்தியாவில் இவை மறைந்து மாவட்டம், கோட்டம், வட்டம், குறுவட்டம், பேரூராட்சி, ஊராட்சி ஒன்றியம், ஊராட்சி என்ற பிரிவுகளின் கீழே இம்மாவட்டத்து ஊர்கள் கொண்டு வரப்பட்டன.

**வளநாடுகள் - (8)**

| | |
|---|---|
| இராசேந்திரசோழ வளநாடு | - திருத்துறைப்பூண்டி வட்டம் |
| அருமொழிதேவ வளநாடு | - திருத்துறைப்பூண்டி வட்டம்<br>திருவாரூர் வட்டம்<br>மன்னார்குடி வட்டம் |
| சுத்தவல்லி வளநாடு | - மன்னார்குடி வட்டம் |
| நித்தவிநோத வளநாடு | - மன்னார்குடி வட்டம்<br>வலங்கைமான் வட்டம் |
| வீரசோழ வளநாடு | - வலங்கைமான் வட்டம் |
| சத்திரியசிகாமணி வளநாடு<br>(கேயமாணிக்க வளநாடு) | - திருவாரூர் வட்டம் |
| குலோத்துங்கசோழ வளநாடு | - திருவாரூர் வட்டம் |
| உய்யக்கொண்டார் வளநாடு | - குடவாசல் வட்டம்<br>நன்னிலம் வட்டம் |

**நாடுகள் - (22)**

| | |
|---|---|
| திருவாரூர்க் கூற்றம் | - திருவாரூர் வட்டம் |
| வேளாநாடு | - திருவாரூர் வட்டம் |
| புலியூர் நாடு | - திருவாரூர் வட்டம் |

| | | |
|---|---|---|
| வலிவலக்கூற்றம் | - | திருவாரூர், மன்னார்குடி வட்டங்கள் |
| வேளூர்க்கூற்றம் | - | திருத்துறைப்பூண்டி வட்டம் |
| புறங்கரம்பை நாடு | - | திருத்துறைப்பூண்டி, மன்னார்குடி, வட்டங்கள் |
| ஆர்வலக்கூற்றம் | - | திருத்துறைப்பூண்டி வட்டம் |
| திருநறையூர் நாடு | - | திருவாரூர், குடவாசல் வட்டங்கள் |
| பாம்புணிக்கூற்றம் | - | மன்னார்குடி, நீடாமங்கலம் வட்டங்கள் |
| தென்கரம்பை நாடு | - | மன்னார்குடி வட்டம் |
| நென்மலி நாடு | - | குடவாசல், மன்னார்குடி வட்டங்கள் |
| முடிச்சோழ நாடு | - | மன்னார்குடி, வலங்கைமான் வட்டங்கள் |
| மங்கல நாடு | - | மன்னார்குடி, குடவாசல் வட்டங்கள் |
| வெண்ணிக்கூற்றம் | - | மன்னார்குடி, நீடாமங்கலம் வட்டங்கள் |
| ஆவூர்க்கூற்றம் | - | வலங்கைமான் வட்டம் |
| வெண்ணாடு | - | குடவாசல் வட்டம் |
| இங்க நாடு | - | குடவாசல் வட்டம் |
| பாம்பூர் நாடு | - | குடவாசல் வட்டம் |
| சேற்றூர்க்கூற்றம் | - | குடவாசல் வட்டம் |
| மருகல் நாடு | - | குடவாசல், நன்னிலம் வட்டங்கள் |

பனையூர் நாடு - நன்னிலம் வட்டம்

அம்பர்நாடு - நன்னிலம் வட்டம்

**ஊர்களின் அமைப்பு**

திருவாரூர் மாவட்டம் ஐநூற்று எழுபத்து மூன்று ஊர்களைக் கொண்ட மாவட்டமாக இன்று விளங்குகிறது. இவ்வூர்களின் வளர்ச்சி ஒவ்வொரு காலகட்டத்திலும் காலத்திற்கு ஏற்ப மாறி வந்துள்ளது. இடைக்காலத்தில் சோழர் ஆட்சிக் காலத்தில் நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் இவற்றின் பண்டைய பெயர்கள், சமூகத்தன்மை, நிர்வாகம் பற்றித் தெரிவிக்கின்றன. இவற்றில் பிராமணர்களுக்கு உரிமையுடைய ஊர்கள் பிரமதேயம், சதுர்வேதி மங்கலம் என்ற பின்னொட்டினைப் பெற்று விளங்கின. சபை என்ற பிராமண நிலவுடமையாளர்களின் கிராம அவை இதனை நிருவாகம் செய்து வந்துள்ளது. வணிகர் சமூக ஊர்கள் "புரம்" என்ற பின்னொட்டினைப் (எ.கா. விக்கிரமசோழபுரம்) பெற்று நகரம் என்றழைக்கப்பட்டன. நகரம் எனப்பட்ட வணிக சமூகத் தினர் அடங்கிய கிராம அவை இவற்றினை நிருவாகம் செய்துள்ளது. வேளாண் சமூக ஊர்கள் "ஊர்" என்ற பின்னொட்டினைப் பெற்று விளங்கின. வேளாண் சமூக நிலவுடமையாளர்கள் அடங்கிய "ஊர்" என்ற கிராமஅவை இதனை நிருவாகம் செய்து வந்தது. இம்மூன்று வகை ஊர்கள் சோழநாட்டில் இருந்துள்ளதைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. தேவதான ஊர்கள் "நல்லூர்" என்றழைக்கப்பட்டன. "பண்டாரவாடை" என்பது மடங்களுக்கு அளிக்கப்பட்ட ஊர்களுக்குப் பெயராக அமைந்தது. தஞ்சை மராட்டியர் காலத்தில் பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட நிலமும் ஊரும் சுரோத்திரியம் எனப்பட்டன. தற்போது இது சோத்திரியம் என வழங்கப் பெறுகிறது. (ஊர்பெயர்கள் பட்டியல் பிற்சேர்க்கை யில் காண்க)

## திருவாரூர் மாவட்டம்

அடியக்கமங்கலம்

எருக்காட்டூர்

காட்டூர் ஐயன்பேட்டை

குன்றியூர்

சோத்திரியம்

தளிச்சாத்தங்குடி

திருக்காறாயில்

திருப்பள்ளிமுக்கூடல்

திருவாரூர்

பழையவலம்

வலிவலம்

விளமல்

வேலங்குடி

## அடியக்கமங்கலம் (அடியப்பிமங்கலம்)

திருவாரூருக்கு அருகில் அமைந்துள்ளது இவ்வூர். முதலாம் இராசராசசோழனது ஆட்சிக் காலத்தில் இவ்வூர் சத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துக்கு உட்பட்ட கிராமமாக இருந்திருக்கிறது. இவ்வூரின் பெயர் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அடியப்பிமங்கலம் என்றும், அடியப்பியச் சதுர்வேதி மங்கலம் என்றும் வழங்கியிருக்கிறது, முதலாம் இராசராசசோழன் தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் திருமெய்க்காப்பாளர்களை நியமித்தபோது, 'அடியப்பி மங்கலத்துச் சபையாரும் திருமெய்க்காப்பொன்றினை இடக்கடவர் என்று திருவாய்மொழிந்தருளியிருப்பதால்,' இவ்வூரில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சபை சிறப்பாகச் செயல்பட்டிருக்கிற தென்பதனையும், இவ்வூர்ச் சபையார் தஞ்சைப் பெருங்கோயிலுக்குரிய திருமெய்க்காப்பொன்றின் பொறுப்பினை ஏற்றுச் செயல்பட்டிருக்கின்றனர் என்பதனையும் தெரிந்துகொள்ள முடிகிறது. செம்பியன் மாதேவியார் திருவாரூரில், தான் கற்றளியாக்கிய திருவறனெறிஆழ்வார் கோயிலில் அமரசுந்தரதேவரையும், உமாபட்டாரகியாரையும் எழுந்தருளிவித்து திருவமுதுக்கும், திருவிளக்கெண்ணைக்கும், திருக்கற்றளிக்கும் திருச்சுற்றுமாளிகைக்கும், திருப்பள்ளிக்கட்டில் மண்டபத்துக்குப் புதுக்குப்புறமாகவும், 200 கழஞ்சுப் பொன்னுக்கிணையான 234 காசுகளை வழங்கிய போது, அதனை ஏற்று இவ்வறக் கட்டளையைச் செயல்படுத்தும் பொறுப்பினை அடியப்பியச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் திறம்படச் செயல்படுத்தியிருக்கின்றனர்.

## எருக்காட்டூர்

இவ்வூர் திருவாரூருக்குத் தென்மேற்கில் உள்ளது. எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்ற சங்கப்புலவர் பாடிய பாடல்கள், அகநானூற்றிலும் (149, 319, 357) புறநானூற்றிலும் (397) இடம் பெற்றுள்ளன. எனவே, இவ்வூர் சங்ககாலத்திலிருந்து இருந்து வருகிறது எனலாம். ஆனால் பாண்டிய நாட்டில் கி.மு 2-ம் நூற்றாண்டு பிராமி கல்வெட்டுகளில் எருக்காட்டூர் குறிப்பிடப்படுகிறது. எனவே சங்ககால எருக்காட்டூர் பாண்டிய நாட்டிலேயே இருந்துள்ளது எனக் கருதலாம்.

## காட்டூர் ஐயன்பேட்டை (திருப்பெருவேளூர்)

இவ்வூர் திருவாரூருக்கு மேற்கில், கரைவீரத்திற்கு வடமேற்கில் உள்ளது. இவ்வூரிலுள்ள ஏலவார்குழலி உடனுறை பிரியநாதர் கோயில் ஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடப் பட்டுள்ளதால், இவ்வூரில் சிவாலயம் ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இருந்து வருவது தெளிவாகிறது.

## காட்டூர்

காட்டூர் என்ற பெயரில் பல ஊர்கள் உள்ள போதும் திருவாரூர் அருகில் உள்ள காட்டூரே தேவார வைப்புத்தலமாகக் கருதப்படுகிறது. இவ்வூர் ஞானசம்பந்தராலும் சுந்தரமூர்த்தி நாயனாராலும் வைப்புத்தலமாகப் போற்றப்பட்டுள்ளதால் இவ்வூர் கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து இருந்து வருகிறது எனலாம்.

## குன்றியூர் (குன்னியூர்)

இவ்வூர் ஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் வைப்புத் தலமாகக் குறிப்பிட்டுப் பாடப்பட்டுள்ளதால் கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் இருந்து வருவது தெளிவாகிறது.

குன்னியூரில் புதையலாகக் கிடைத்த பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழர் கலைப்பாணியிலான நடராசர் செப்புத்திருமேனி ஒன்று சென்னை அருங்காட்சியகத்திலுள்ளது. இவ்வூருக்குக் "குன்றி" மரம் காரணமாகக் குன்றியூர் என்ற பெயர் ஏற்பட்டு, அப்பெயரே காலப்போக்கில் குன்னியூர் என்று மருவி இருக்க வேண்டும்.

## சோத்திரியம்

இப்பெயரில் திருவாரூர் மாவட்டத்தில் சில ஊர்கள் காணப் படுகின்றன. சுரோத்திரியம் என்ற பெயரே காலப்போக்கில் சோத்திரியம் என மருவியிருக்கிறது. வேதம்வல்ல பிராமணர் கட்கு வழங்கப்பட்ட நிலமே சுரோத்திரியம் எனப்படும். தஞ்சை மராட்டிய மன்னர்கள் மகாராட்டிரத்திலிருந்து பிராமணர்களை அழைத்து வந்து குடியேற்றினர். அவர்களைத் தேசஸ்த பிராம ணர்கள் என்று குறிப்பர். அவர்களைத் தஞ்சை மராட்டிய

மன்னர்கள் சுரோத்திரியம், இனாம் முதலியன கொடுத்து ஆதரித்தனர். சில சமயங்களில் அரசு ஊழியம் செய்தவர்கட்கு வழங்கப்பட்ட நிலமும் சுரோத்திரியம் எனப்பட்டது. கோயிலுக்கு அனாதி தரிசு நிலத்தைச் சுரோத்திரியம் செய்து கொடுக்கும் மரபும் இருந்திருக்கிறது. இங்ஙனம் தஞ்சை மராட்டிய மன்னராட்சிக் காலத்தில் சுரோத்திரியமாக வழங்கப்பட்ட பகுதிகளில் சிலவே இன்றளவும் "சோத்திரியம்" என்ற பெயரில் வழங்கி வருகின்றன எனலாம். தஞ்சை மராட்டிய மன்னராட்சிக் காலத்தில் சோத்திரியங்களாகவும் தானமாகவும் வழங்கப்பட்ட இனாம் நிலங்கள் சற்றேறக்குறைய 612085 ஏக்கரளவில் இருந்தன என்பதும் ஈண்டு கவனத்திற்குரியது.

சோத்திரியம் என்ற பெயரில் முத்துப்பேட்டை ஊராட்சி ஒன்றியத்தில் எடையூர் ஊராட்சியிலும், திருத்துறைப்பூண்டி ஊராட்சி ஒன்றியத்தில் கச்சனம் ஊராட்சியிலும் கோட்டூர் ஊராட்சி ஒன்றியத்தில் இருள்நீக்கி ஊராட்சியிலும், எளவனூர் ஊராட்சியிலும், கெழுவத்தூர் ஊராட்சியிலும், ரெங்கநாதபுரம் ஊராட்சியிலும் செருகளத்தூர் ஊராட்சியிலும், மன்னார்குடி ஊராட்சி ஒன்றியத்தில் சித்திரையூர் ஊராட்சியிலும், அரிச்சந்திர புரம் ஊராட்சியிலும், வலங்கைமான் ஊராட்சி ஒன்றியத்தில் மாத்தூர் ஊராட்சியிலும், நீடாமங்கலம் ஊராட்சி ஒன்றியத்தில் காளாச்சேரி ஊராட்சியிலும் (சோத்தரை), கானூர் அன்னவாசல் ஊராட்சியிலும்; இராயபுரம் ஊராட்சியிலும் (சோத்தரை) இன்றளவும் இருந்துவரும் கிராமங்கள் மேற்சுட்டிய அடிப்படையில் அமைந்தவையே எனலாம். வலங்கைமான் ஊராட்சி ஒன்றியத்தில் மணலூர் ஊராட்சியிலுள்ள சேர்த்தமங்கலம் என்பது சோத்திரிய மங்கலம் என்பதன் திரிபாக இருக்கலாம்.

### தளிசாத்தங்குடி

பெருவேளூருக்குத் தெற்கிலும், மணக்காலுக்கு வடக்கிலும் அமைந்துள்ள இவ்வூர் அப்பரால் தேவார வைப்புத்தலமாக வைத்துப் போற்றப்பட்டிருப்பதால் இவ்வூர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து இருந்து வருவது தெளிவாகிறது.

''சாத்தர்'' என்ற சொல் சங்க காலத்திலிருந்தே வணிகரைக் குறிக்கப் பயன்பட்டிருப்பதால், சாத்தங்குடி என்பதற்கு வணிகர்கள் சேர்ந்து வாழ்ந்த ஊர் எனப் பொருள் கொள்ளலாம். தளி என்பது கோயிலைக் குறிக்கும்.

### திருக்காறாயில்

திருவாரூரிலிருந்து திருத்துறைப்பூண்டி செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது. காவிரியின் தென்கரையில் அமைந்த பாடல் பெற்ற சிறப்புடைய தேவாரத் தலமாகும். இங்குள்ள சிவன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் 'திருக்காறாயிலுடையார்' என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறார். இவ்வூர் காரகில் காடாக இருந்தமையால் இப்பெயர் பெற்றது என்று கருதுகின்றனர். இது சப்தவிடங்கத் தலங்களில் ஒன்றாகும். இத்தலத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி தேவேந்திரனிடம் பெற்று வந்த தியாகராசர் திருமேனிகள் ஏழனுள் ஒன்றினை எழுந்தருளு வித்ததாகப் புராணம் கூறுகிறது.

இங்குள்ள சிவன்கோயிலில் நான்கு கல்வெட்டுகள் உள்ளன. இங்குள்ள இராசராசன் கல்வெட்டு இவ்வூரைப் புலியூர்நாட்டுப் பிரம்மதேயம் திருக்காறாயில் என்று குறிப்பிடுகிறது. இக்கோயிலி லுள்ள திருவோலக்க மண்டபம் முதல் இராசராசசோழன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டுள்ளது. முதல் இராசராசன் காலத்தில் இக்கோயிலுக்கு ஏழு மாநிலம் அளிக்கப்பட்டுள்ளது.

### திருப்பள்ளி முக்கூடல்

சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களுள் 86-வது தலமான இவ்வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர் திருவாரூருக்கருகில் விற்குடி, கொடிக்கால்பாளையம் புகைவண்டி நிலையங்களிலிருந்து 3 கி.மீ. தூரத்திலுள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூருக்கு வந்து திருத்தாண்டகத் திருப் பதிகம் அருளியிருப்பதால், இவ்வூரும், இவ்வூர்ச்சிவாலயமும் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் சிறப்புடன் விளங்கி வருவது தெளிவாகிறது. திருநாவுக்கரசர் தமது பதிகத்தில் இவ்வூரில் குடிகொண்டுள்ள இறைவனைப் ''பள்ளியின் முக்கூடலான்'' என்று

குறிப்பிட்டுள்ளார். இப்பெயரே பிற்காலச்சோழர் காலத்தில் ''திருப்பள்ளியில் முக்கூடலுடையார்'' என்றும், தற்காலத்தே ''முக்கூடல்நாதர்'' ''முக்கோணநாதர்'' என்றும் வழங்கி வருகிறது.

மூன்றாம் இராசராசனது ஆட்சிக்காலத்தில், இவ்வூரில் மடம் ஒன்றிருந்ததையும், அம்மடத்தில் நரசிங்கதேவர் சந்தானத்துத் திருமேனிகள் இருந்ததையும் இவ்வூர்க் கல்வெட்டால் அறிய முடிகிறது. கிழக்குநோக்கி அமைந்துள்ள இத்திருக்கோயில் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் திருப்பணியால் பொலிவுடன் விளங்குகிறது.

## திருவாரூர்

மாவட்டத் தலைநகராக விளங்கும் திருவாரூர், வரலாற்றிலும் தொடர்ந்து தலைமையிடத்தைப் பெற்று வந்திருக்கிறது. அரசியல் சிறப்பும் சமயச்சிறப்பும் ஒருங்கே பெற்ற திருத்தலம் இதுவாகும். ஆடகேசுவரம், சக்திபுரம், முசுகுந்தபுரம், மூலாதாரநகரம், ஸ்ரீநகரம் கந்தபுரம் என்று பல பெயர்கள் இதற்குண்டு. திருவாரூரைப் பற்றிய பல தலபுராணங்களும் இலக்கியங்களும் தோன்றி இவ்வூரின் வரலாற்றை எடுத்துக்கூறுகின்றன.

அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர், சேரமான்பெருமாள் போன்ற சைவசமயச் சான்றோர்கள் திருவாரூரைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். சேக்கிழார் பெரியபுராணத்தில் இந்நகரத்தின் பெருமையை விரிவாக எடுத்துக் கூறியுள்ளார். கழற்சிங்க நாயனார், செருத்துணைநாயனார், சோமாசிமாறர், தண்டியடிகள் திருநீலகண்டயாழ்ப்பாணர், நமிநந்தியடிகள், விறல்மிண்ட நாயனார் போன்ற சைவ அடியார்கள் இத்திருத்தலத்தை வழிபட்டுப் பேறுபெற்றுள்ளனர். சுந்தரமூர்த்தி நாயனார் சைவ அடியார்களின் பெயரையும் சிறப்பையும் தொகுத்து 'திருத்தொண்டத் தொகை' என்ற அரிய சைவ வரலாற்று இலக்கியத்தைப் படைத்த இடம் திருவாரூர் ஆகும், திருவாரூர் மும்மணிக்கோவை, திருவாரூர் நான்மணிமாலை, தியாகராசர் பள்ளு, தியாகராசர் குறவஞ்சி, போன்ற பல்வேறு சிற்றிலக்கியங்கள் இவ்வூர் இறைவனை அடிப்படையாகக் கொண்டு தோன்றியுள்ளன. திருவாரூர்ப் புராணம், தேரூர்ந்தசோழன் புராணம் முதலிய புராணங்கள் இவ்வூரின் பெருமையை எடுத்துக் கூறும் புராணங்களாகும்.

வடமொழியிலும் திருவாரூரைப் பற்றிய இருபதுக்கும் மேற்பட்ட இலக்கியங்கள் புராணங்கள். கீர்த்தனைகள் உள்ளன. சியாமா சாஸ்திரி, தியாகையர், முத்துச்சாமி தீட்சிதர் போன்ற கருநாடக இசைவல்லார்கள் திருவாரூரில் பிறந்தவர்கள் ஆவார்கள். இயல் இசை, நாடகம் முதலிய மூன்று துறைகளிலும் திருவாரூர் பற்றிய பல இலக்கியங்கள் தோன்றியுள்ளன. இவையே இவ்வூரின் பெருமையைப் பறைசாற்றும் சான்றுகளாக உள்ளன.

திருமகள் இவ்வூரில் குடிகொண்டிருந்தமையால் இவ்வூருக்குத் திருவாரூர் என்று பெயர் வந்ததாக ஒருசாரார் கருதுகின்றனர். ஆத்தி மரங்கள் நிறைந்திருந்தமையால் இது ஆரூர் என்று பெயர் பெற்றதாக மற்றொரு சாரார் கூறுகின்றனர். இடைக்கால சமய இலக்கியங்கள் மூலம் இதன் அருமையையும் பெருமையையும் அறியமுடிகிறது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞான சம்பந்தரும் அப்பரும் திருவாரூரைப் பல பாடல்கள் மூலமாக விரித்துக் கூறுகின்றனர். திருஞானசம்பந்தர் திருவாரூர் வளம் நிறைந்த வயல்களும் சோலைகளும் கரும்பு ஆலைகளும் நிறைந்து பாலும் நெய்யும் மலிந்து கிடக்கும் ஊர் என்று பல பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

> ''சோலையில் வண்டினங்கள் சுரும்போ டிசைமுரலச் சூழ்ந்த
> ஆலையின் வெம்புகைபோய் முகிறோயு மாரூரில்
> பாலொடு நெய்தயிரும் பயின்றாகும்''

(என்பது சம்பந்தரின் வாக்கு)

செல்வம் மலிந்து, மாடங்கள் நிறைந்த பெரியமதில் சூழ்ந்த ஊராக இது விளங்கிற்று. அந்தணர்களும், சமணர்களும் பௌத்தர்களும் இங்கு வாழ்ந்தார்கள் என்று ஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

திருநாவுக்கரசர் பாடல்கள் பலவற்றிலும் திருவாரூர், திருவாரூர்க் கோயில் பற்றிய பல குறிப்புகள் வருகின்றன. ஏழாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வாழ்ந்த பல்வேறு சைவ சமய உட்பிரிவினர் திருவாரூரில் இருந்ததாக அப்பர் குறிப்பிடு ன்கிறார். விரிசடையுடைய மாவிரதிகள், சைவர், பாசுபதர்,

காபாலிகர், சைவர் அந்தணர் முதலியோர் திருவாரூர் வீதிகளில் நடமாடியதாகக் கூறுகின்றார். மேலும் அப்பர் திருவாரூர்க் கோயிலில் மார்கழி திருவாதிரைத் திருநாளும் பங்குனி உத்திரத் திருநாளும் கொண்டாடப்பட்டதாகத் தெரிவிக்கின்றார். சுந்தரர் காலத்தில் வாழ்ந்த சேரமான் பெருமாள் தாமியற்றிய திருவாரூர் மும்மணிக்கோவையில் திருவாரூரில் விழா ஒலிகள் நிறைந்திருந்தன என்று குறிப்பிடுகின்றார். சுந்தரர் தனது திருவாரூர்ப் பதிகத்தில் ஆரூர் இறைவனின் சிறப்பையும் குணத்தையும் பலவாறாக எடுத்துக் கூறியுள்ளார்.

சேக்கிழாரின் பெரியபுராணத்திலேயே சோழர் காலத்துத் திருவாரூர் அமைப்பும் சிறப்பும் விரிவாக, அங்கு வாழ்ந்த சைவ அடியார்களின் சிறப்போடு எடுத்துக் கூறப்பட்டுள்ளது. திருவாரூர் மனுநீதிசோழன் வாழ்ந்த ஊர்; சோழர் அரசு புரியும் நகரம்; உயிர்களின் இதயம்போல இது இருந்தது; இவ்வூர் கடைவீதிகளின் ஒலிகள், நாற்படைகளின் ஒலிகள் கடல்போல் ஒலித்தன; அந்நகரில் சைவர், தபோதனர், முனிவர், மறையவர், இல்லறத்தார் வாழ்ந்தனர்; வேதம், தோத்திரம், வீணை, முழவு, ஆடல், பாடல் ஆகியவற்றின் ஒலிகள் இந்நகரில் நிறைந்திருந்தன. மாடம், மாளிகை, கூடம், கோபுரம், சாளரம் அரங்குகள் நிறைந்த ஊர் என்று இவ்வூரின் சிறப்பைச் சேக்கிழார் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

சேக்கிழார் திருவாரூரில், சுந்தரர் பரவையாரை மணந்து நடத்திய இல்லற வாழ்வையும், ஆன்மீக வாழ்வையும் விரிவாக எடுத்துக் கூறியுள்ளார். பெரியபுராணத்தில் திருவாரூர் நகரத்தோடு தொடர்புடைய அடியார்களின் வரலாறு எடுத்துக் கூறப்பட்டுள்ளது. திருவாரூர்க்கு அருகில் அமைந்த ஏமப்பேரூரில் தோன்றிய நமிநந்தியடிகள் திருவாரூரை அடைந்து அறநெறி ஈஸ்வரரை வணங்கித் திருப்பணிகள் செய்து வாழ்ந்து வந்தவர் ஆவார். ஒரு சமயம் இவரது திருப்பணியைத் திருவாரூரில் இருந்த சமணர்கள் கேலி செய்த போது இறைவனுக்குத் தண்ணீராலேயே விளக்கெரித்துச் சைவத்தின் பெருமையை நிலைநாட்டியதாகப் பெரிய புராணம் கூறுகிறது. திருவாரூர் இறைவனை வழிபட்டு வாழ்ந்த நமிநந்தியடிகளும், தண்டியடிகளும் அங்கு வாழ்ந்த சமணர்களை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றதாகச் சேக்கிழார் கூறு

கின்றார். தண்டியடிகள் கண்பார்வையற்ற நிலையிலும் திருவாரூர்க் குளத்தை விரிவுபடுத்தும் பணியில் ஈடுபட்டு அதனருகில் வாழ்ந்த சமணர்களைத் துரத்தினார் என்றும் திருவாரூர் ஈசன் அருளால் கண்பெற்றார் என்றும் சேக்கிழார் கூறுகின்றார்.

பல்லவ குலத்தில் தோன்றிய கழற்சிங்கன் என்ற *அரசன் ஒருமுறை தனது பட்டத்தரசியோடு வழிபாடு செய்ய திருவாரூர்க் கோயிலுக்கு வந்திருந்தார். அவர் கோயிலை வலம் வந்தபோது அவரது தேவியார் இறைவனுக்குரிய நறும்பூவை எடுத்து முகர்ந்தார். இதனைக் கண்ட செருத்துணையார் என்ற அடியார் அவரை அரசி என்றும் பாராது தனது வாளால் அவரது மூக்கை அரிந்தார். அருகில் இருந்த சைவ அடியாராக விளங்கிய கழற்சிங்கரும் தனது பங்கிற்குத் தேவியென்றும் பாராது மலரை எடுத்து முகர்ந்த அவளது கையையும் வாளால் வெட்டினார். பின்னர் இரு அடியார்களின் இன்னல் தீர இறைவன் அருள் புரிந்ததாகப் பெரியபுராணம் கூறுகிறது. மலைநாட்டைச் சார்ந்த விறல்மிண்ட நாயனாரும் திருவாரூர் வந்து தங்கி அடியாரின் பெருமையை நிலைநாட்டினார். நடுநாட்டைச் சார்ந்த தாழ்த்தப் ப்ட்ட குலத்தில் பிறந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் சம்பந்தருடன் யாழ் வாசித்து வழிபட்ட தலங்களுள் திருவாரூரும் ஒன்றாகும்.

சோழர்கள் முடிசூடிக் கொண்ட முக்கிய நகரங்கள் ஐந்தில் இதுவும் ஒன்றாகும். மகன் ஓட்டிச் சென்ற தேர்க்காலில் அடிபட்டு இறந்த பசுவின் கன்றிற்காக தனது மகனையும் தேர்க் காலில் இட்டு அவனது உயிரைப்போக்கி நியாயம் வழங்கிய மனுநீதிச்சோழன் வாழ்ந்த ஊர் திருவாரூராகும். மனுநீதிச்சோழனின் வரலாறு திருவாரூர் கோயிலிலுள்ள விக்கிரமசோழனின் கல்வெட்டிலும் கூறப்படுகிறது. பிற்காலச்சோழர் காலத்தில் மனுநீதிச்சோழனின் வரலாற்றை விளக்கும் கலைச்சிறப்பு வாய்ந்த கல்தேர் மற்றும் சிற்பங்கள் திருவாரூர்க் கோயிலின் அருகில் செய்து வைக்கப்பட்டுள்ளன.

விக்கிரமசோழன் காலத்தில் மனுவின் அமைச்சன் பாலையூ ருடையான் உபயகுலாமலன் வழியினனான பாலையூர் உடையான் சந்திரசேகரன் குலோத்துங்கசோழ மகாபலிவாணாதிராஜனுக்கு மாளிகை, மனை ஆகியவற்றிற்காக நிலம் அளிக்கப்பட்டுள்ளது.

நீதி என்பது அனைத்துயிர்க்கும் ஒன்றுதான் என்பதை உலகிற்கு காட்டிய மனுநீதிச்சோழனின் வரலாறு இன்றும் 'மக்கள் மனதில் அழியாது இடம் பெற்று வருகிறது. தென்னிந்தியாவில் முக்கிய மான பண்பாட்டுப் பாரம்பரியம் மிக்க நகரமாக திருவாரூர் திகழ்கிறது.

•

திருவாரூர் நகரின் நடுநாயகமாக தியாகராசசுவாமி திருக்கோயில் விளங்குகிறது. இது சுமார் இருபது ஏக்கர் பரப்பளவில் அமைந்த பெருங்கோயில். வன்மீகநாதசுவாமி, தியாகராசசுவாமி அறநெறி ஆழ்வார், பரவையுண்மண்டளி என்று பல சன்னதிகளைக் கொண்ட பெருங்கோயிலாக இது காட்சியளிக்கிறது. இதனைச் சூழ்ந்து மூன்று பெருந்திருச்சுற்றுகள் உள்ளன. இவற்றில் அம்மன்கோயிலும் மண்டபங்களும் சிற்றாலயங்களும் காணப் படுகின்றன. கோயிலின் நான்கு வாயில்களிலும் பெருங் கோபுரங்கள் எடுப்பாகத் தோற்றமளிக்கின்றன.

வன்மீகநாதசுவாமி கோயிலே இவற்றில் பழமையானது. இது திருவாரூர் பூங்கோயில் என்று அப்பரால் பாடப்பெற்றது. இங்குள்ள இறைவன் புற்றிடங்கொண்ட பெருமான் என்றும் அழைக் கப்படுகின்றார். இது திருமூலட்டானம் என்றும் கூறப்படுகிறது. கருவறை, அர்த்தமண்டபத்துடன் விளங்கும் இதுவே திருவாரூர்க் கோயிலில் பழமையான பகுதியாகும். இதனையடுத்துள்ள வீதி விடங்கர்கோயில் முதல் இராசேந்திரசோழன் காலத்தில் திருத்திக்கட்டப்பட்டிருக்கிறது, இதில் வரலாற்றுச் சிறப்புமிக்க அரிய கல்வெட்டுகள் உள்ளன. இரண்டாம் பிரகாரத்தில் உள்ள அசலேச்சுரம் என்று அழைக்கப்படும் அறநெறி ஆழ்வார்கோயில் செம்பியன்மாதேவியாரால் கற்றளியாக்கப்பட்டுள்ளது. இதுவும் தேவாரப்பாடல் பெற்ற கோயிலாகும். சோழர்காலத்துக் கட்டடக் கலைக்குச் சிறந்த சான்றாக இது விளங்குகிறது. பரவையுண் மண்டளி என்னும் பழங்கோயில் கீழவீதியில் பெரிய திருத்தேரினை அடுத்து அமைந்துள்ளது. தியாகராசர் கோயிலில் கமலாம்பிகை, அல்லியங்கோதை என்றழைக்கப்படும் இரு அம்மன்களுக்குத் தனித் தனியாக இருகோயில்கள் உள்ளன. இவை தவிர அனந்தேசுவரர், சித்தேசுவரர், ஆடகேசுவரர் என்று பல சிவாலயங்கள் இக்கோயில் திருச்சுற்றில் காணப்படுகின்றன.

முதலாம் குலோத்துங்கன் பெயரால், பெயர் பெற்ற "இராச நாராயணன் திருமண்டபம்" என்ற மண்டபம் இரண்டாம் திருச்சுற்றில் காணப்படுகிறது. மூன்றாம் திருச்சுற்றின் கிழக்குப்புற வாயிலுக்கு அருகில் "தேவாசிரிய மண்டபம்" என்று அழைக்கப்படும் பெரியமண்டபம் அமைந்துள்ளது. இதனை ஆயிரங்கால் மண்டபம் என்றும் அழைக்கின்றனர். சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடக்காரணமாக அடியார்கள் அமர்ந்திருந்த இடம் இதுவாகும். இது பிற்காலச் சோழர் காலத்தில் திருத்திக் கட்டப்பட்டு மீண்டும் நாயக்கர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. இதன் விதானத்தில் அக்காலத்தினைச் சார்ந்த ஓவியங்கள் காணப்படுகின்றன. மேற்குக் கோபுரத்தின் அருகில் நடராசர் மண்டபம் என்றழைக்கப் படும் மற்றொரு பெரிய மண்டபம் உள்ளது. மூன்றாம் திருச் சுற்றிலுள்ள நான்கு வாயில்களையும் பெருங்கோபுரங்கள் அணி செய்கின்றன. இவற்றில் கிழக்குக் கோபுரம் பழமையானதும் கலைச்சிறப்பு வாய்ந்ததும் ஆகும். இது மூன்றாம் குலோத் துங்கசோழன் காலத்தில் கட்டப்பட்டதாகும் இதன் அடித்தளத்தில் தேவகோட்டங்களில் பிற்காலச்சோழர் காலத் தினைச் சார்ந்த அழகிய தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன. மேலும் நடனமாடும் அழகிய பெண்களின் நாட்டியக் கோலங்கள் காட்சியளிக்கின்றன. மூன்றாம் குலோத்துங்க சோழனின் உருவச்சிலையும் இங்கு காணப்படுகிறது. மேற்குக் கோபுரத் தினை கி.பி. 1440-ல் சித்தராசரின் மகன் நாகராசன் லக்கண தண்டநாயக்கருக்குப் புண்ணியமாகக் கட்டியுள்ளார். மேற்குக் கோபுரத்திற்கு வெளியே மிகப்பெரிய மையமண்டபத்துடன் கூடிய அழகிய தெப்பக்குளம் ஒன்று காணப்படுகிறது.

கமலாலயம் என்று அழைக்கப்படும் இப்பகுதி இருபத்தைந்து ஏக்கர் பரப்பளவு கொண்ட நீராழி மண்டபமாக விளங்குகிறது. திருவாரூர்க் கோயிலில் ஆடகேஸ்வரம், ஆனந்தேஸ்வரம், சித்தேசு வரம் என்றழைக்கப்படும் சிற்றாலயங்கள் சோழர் கல்வெட்டு களில் அருள்மொழிஈஸ்வரம், உலகீஸ்வரம், பிரம்மீஸ்வரம் என்று அழைக்கப்படுகின்றன. இக்கோயிலில் இருந்த கொங்கவாளர் திருமண்டபம், அத்தாணிமண்டபம் என்ற மண்டபங்களும் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றன.

தஞ்சையில் முதலாம் இராசராசன் கட்டிய பெருங்கோயில் கல்வெட்டுகள் மூலம் அவனது காலத்தில் திருவாரூர்க் கோயில் எத்துணையளவு சிறப்புப்பெற்ற கோயிலாக விளங்கியது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. திருவாரூர்க் கோயிலில் ஆடற் கலையில் சிறந்து விளங்கிய பெண்கள் இருந்துள்ளனர். இதனால் தஞ்சைக் கோயிலுக்கு நானூறு ஆடல் மகளிர் (தளிச்சேரி பெண்டுகள்) தமிழ்நாட்டுக் கோயில்களிலிருந்து தேர்வு செய்யப் பட்டபோது திருவாரூர்க் கோயிலில் இருந்து நாற்பத்து நான்கு ஆடல் மகளிர் தேர்வு செய்யப்பட்டிருக்கின்றனர். திருவாரூர்க் கோயிலுக்குச் சோழ அரசர்கள் வந்தபோது அங்கிருந்த திறமை வாய்ந்த ஆடல் மகளிரின் நாட்டியத்தைக் கண்டு போற்றுவது வழக்கமாக இருந்துள்ளது. திருவாரூர்க் கோயிலுக்கு ஒரு சமயம் விக்கிரமசோழன் சித்திரைத் திங்கள் சதயநாளில் வந்திருந்தபோது தேவாசிரிய மண்டபத்தின் முன்பாக ஆடல்மகள் ஒருத்தியின் அரங்கேற்றம் நடைபெற்றது. ஆட்டத்தின் முடிவில் அவளது திறமையைப் போற்றி அவளுக்குத் 'தியாகவிநோதத் தலைக்கோலி' என்ற பட்டம் வழங்கப்பட்டிருக்கிறது. இதனை விக்கிரம சோழனின் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

திருவாரூர்க் கோயிலில் அறுபதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றில் நாற்பத்தெட்டு கல்வெட்டுகள் சோழப்பெருவேந்தர் காலத்தவை. காலந்தோறும் திருவாரூர்ப் பகுதியின் சமயம் சமுதாயம், கலை, அரசியல் ஆகியவற்றை அறிந்துகொள்ள துணை நிற்கும் அரிய சான்றுகளாக இவை விளங்குகின்றன.

ஆரூர் என்றும் திருவாரூர் என்றும் அழைக்கப்பட்ட இவ்வூர் திருவாரூர்க் கூற்றம் என்றழைக்கப்பட்ட உள்நாட்டுப்பிரிவின் தலைநகராக தொன்றுதொட்டு இருந்துள்ளது. காவிரியின் தென் கரையில் இருந்ததாக கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றது. முதலாம் இராசராசன் காலத்திலிருந்து புதியதாகத் தோற்றுவிக்கப் பட்ட சத்திரியசிகாமணி வளநாட்டில் இது இருந்துள்ளது. இப்பிரிவு முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் கெயமாணிக்க வளநாடு என்று அழைக்கப்பட்டுள்ளது. திருவாரூர்க் கல்வெட்டு

களில் திருவாரூரைப்பற்றியும், அதனைச் சூழ்ந்த ஊர்களின் கிராம சபையினரின் நிருவாகம் பற்றியும் குறிப்புகள் காணப் படுகின்றன.

திருவாரூர்க் கோயில் கல்வெட்டுகள் அக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட பெருங்கொடைகள், கோயிலில் செய்யப்பட்ட திருப்பணிகள் பற்றித் தெரிவிக்கின்றன. இவற்றில் பழமையானவை முதல் ஆதித்தசோழன், முதற்பராந்தகசோழன் காலத்தவையாகும். முதல் ஆதித்தசோழன் காலத்தில் மூன்று வேலி நிலம் இரண்டு நந்தாவிளக்கு எரிப்பதற்காக திருவறநெறி ஈஸ்வரர் கோயிலுக்கு வழங்கப்பட்டுள்ளது. முதற்பராந்தகசோழன் காலத்தில் ஆரூர் திருவறநெறி மகாதேவர்க்கு முப்பது கழஞ்சு பொன் நந்தாவிளக்கு எரிப்பதற்காக அளிக்கப்பட்டுள்ளது. கண்டராதித்த சோழனின் மனைவியாகிய செம்பியன்மாதேவியார் கி.பி. பத்தாம் நூற்றாண் டின் பிற்பகுதியில் செங்கல் தளியாக இருந்த அசலேச்சுரம் என்றழைக்கப்பட்ட திருவறநெறி ஆழ்வார் கோயிலைக் கருங் கல்லால் மாற்றிக் கட்டினார். கல்வெட்டில் "திருவறநெறி ஆழ்வார் கோயில் திருக்கற்றளி எழுந்தருளுவிச்ச உடையபிராட்டியார் ஸ்ரீ செம்பியன் மாதேவியார்" என்று குறிப்பிடப்படுகிறது. செம்பியன் மாதேவியார் காலத்தில் இக்கோயில் பல அரிய கொடை களைப் பெற்றுள்ளது. உத்தமசோழனுக்குப் புண்ணியமாகச் செம்பியன் மாதேவியாரால் திருவறநெறி ஆழ்வார் கோவிலுக்கு வெள்ளி பாத்திரங்கள் கொடையளிக்கப்பட்டன. அமரசுந்தரதேவர், உமாபட்டாரகி என்ற பெயரில் இரண்டு செப்புத் திருமேனிகள் செம்பியன் மாதேவியாரால் செய்து வைக்கப்பட்டன. அவற்றின் வழிபாட்டிற்காக இருநூற்று முப்பத்து நான்கு கழஞ்சு பொன்னும் அவரால் தானமாகத் தரப்பட்டுள்ளது. செம்பியன் மாதேவியார், சோழர் காலத்தில் செங்கல் தளிகளாக இருந்த பல கோயில்களைக் கற்றளியாக மாற்றி அவற்றிற்கு அளவிறந்த கொடைகளை அளித்து சைவ சமய வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றிய பெருந்தேவி யாவார். திருவாரூர்க் கோயிலும் அவரது காலத்தில் பல கொடை களைப் பெற்று வளர்ச்சி கண்டுள்ளது.

முதல் இராசேந்திர சோழன் காலத்தில் வீதிவிடங்கதேவர் கோயில் என்றழைக்கப்பட்ட தியாகராசர் கோயில் பகுதி அதிக வளர்ச்சி கண்டது. இதில் பெரும் பங்காற்றியவர் இராசேந்திர

சோழனுக்கு அணுக்கியாகவும் நெருங்கிய உறவாகவும் விளங்கிய பரவைநங்கை என்றழைக்கப்பட்ட ஆடல்நங்கை ஆவாள். வீதி விடங்கர் கோயிலின் கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய பகுதிகள் இவளால் கற்றளியாக்கப்பட்டன. இவள் விமானத்தின் மேற்பகுதி களைச் செம்புத் தகட்டால் வேய்ந்து பொன் முலாம் பூசுவதற்கு ஏராளமான தங்கமும் செம்பும் தானமாகத் தந்துள்ளாள். இது கோயில் கதவிற்கும் மண்டபத் தூண்களுக்கும் தகடு போர்த்து வதற்குப் பயன்படுத்தப்பட்டது. விமானத்தின் சிகரத்தினைத் தகடு போர்த்திப் பொன்முலாம் பூசுவதற்கு 20643 கழஞ்சு பொன்னும், கோயில் கருவறை, தூண்களில் செம்புத்தகடு போர்த்து வதற்கு 42000 பலம் செம்பும் அளித்துள்ளாள் என்று முதல் இராசேந்திர சோழனின் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. தற்கால மதிப்பில் இதன் அளவு எவ்வளவு என்று எண்ணிப் பார்த்தால் இப்பெண்ணின் கொடையளவு மலைக்க வைக்கிறது. அதே வேளையில் இவளது செல்வாக்கும் மதிப்பும் வியப்பில் ஆழ்த்துகிறது. முதல் இராசேந்திர சோழனின் அணுக்கி என்று கல்வெட்டுக் கூறினாலும் இவளை இராசேந்திர சோழன் தனது தேவியரில் ஒருத்தியாக வைத்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. இதனைத் திருவாரூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்று புலப்படுத்துகிறது. திருவாரூர் வீதிவிடங்கர் கோயில் திருப்பணிகள் முடிந்த பின்னர் பரவைநங்கை இராசேந்திர சோழனுடன் ஒரே தேரில் உடனமர்ந்து இக்கோயிலுக்கு வந்தாள். வீதிவிடங்கர் கருவறைக்கு முன்புள்ள மண்டபத்தில் இராசேந்திர சோழனுடன் சேர்ந்து நின்று தியாகேசரை வழிபட்டாள். இந்த அரிய நினைவையும் இராசேந்திர சோழனிடம் அவள் கொண்ட பற்றினை யும் வெளிப்படுத்தும் முறையில், அந்த நினைவைப் போற்றும் வகையில் அவர்கள் கோயிலில் சேர்ந்து நின்று வழிபட்ட இடத்தில் அனைவரும் அறியும் முறையில் குத்துவிளக்குகள் இரண்டு செய்து வைத்தாள். இதனைக் கல்வெட்டு "உடையார் ஸ்ரீராசேந்திர சோழதேவரும் அணுக்கியார் பரவைநங்கையாரும் நிற்குமிடந் தெரியும் குத்துவிளக்கு" என்று கூறுகிறது.

பரவைநங்கை வீதிவிடங்கர் கோயில் திருப்பணிக்குப் பின்னரும் பல அரிய தானங்களை அளித்துள்ளாள். விலைமதிப்பற்ற பதிமூன்று வகையான ஆபரணங்களைக் கோயிலுக்குத் தந்துள் ளாள். கற்கள் பதிந்த அவற்றின் அளவும் அமைப்பும் விரிவாகக்

கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. அவள் அளித்த ஆபரணங் களாக முத்துவடம்,, சிகாமணி, தாழி இரட்டைமுத்துவாளி, விளாசப்பட்டிகை, முத்துப்பட்டிகை, கொழுந்து, பாகுவளையம். கைமோதிரம், கள்ளிப்பூ, குருந்தம்பூ, பொற்பூ, தாழியம்பம், கொக்குவாய், தாழ்க்கூடு, ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. இவற்றில் முத்து, மாணிக்கம், மரகதம் முதலிய விலைமதிப்பற்ற கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. பரவைநங்கை "இராசேந்திர சோழன் திருமண்டபம்" என்ற பெயரில் மண்டபம் ஒன்றினையும் இக்கோயிலில் கட்டுவித்துள்ளாள். இக்கோயிலுக்குப் பல ஊர் களைத் தானமாக அளித்ததோடு இருபத்தெட்டு பெரிய குத்து விளக்குகளையும் தந்துள்ளாள். கி.பி. பதினோராம் நூற்றாண்டில் முதலாம் இராசேந்திரனின் மகன் இராசாதிராசன் காலத்தில் பரவைநங்கை மற்றும் இராசேந்திரசோழனின் உருவச்சிலைகள் இக்கோயிலில் செய்து வைக்கப்பட்டு வழிபடப்பட்டுள்ளன.

முதலாம் இராசேந்திரசோழனின் காலத்தில் மன்னர்களின் பிறந்த நாட்களான ஐப்பசி சதயம், ஆடித்திருவாதிரை நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற திருவாரூர் கோயிலில் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. விதிவிடங்கதேவர்க்குத் தங்கத்தாலான சிறு மண்டபம் ஒன்று அமைக்கப்பட்டது. வன்மீகநாதர் கோயிலின் கருவறை அர்த்தமண்டபத்துப் பகுதிகள் அரசன் ஆணையின் பேரில் செம்பியன் மூவேந்தவேளான் என்ற அதிகாரியால் பொன் வேயப்பட்டிருக்கிறது. முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் திருமஞ்சனம் செய்வதற்கும் திருவிளக்கு எரிப்பதற்கும் கொடைகள் தரப்பட்டுள்ளன. இவன் காலத்துக் கல்வெட்டுகளில் தேவாசிரிய மண்டபம், உலகுய்யகொண்ட காமக்கோட்டம் (அம்மன்கோயில்) முதலியவைக் குறிப்பிடப்படுகின்றன. முதல் குலோத்துங்கனின் அதிகாரியாக விளங்கிய வீரஅணுக்கன் மீது "வீரஅணுக்கன் விசயம்" என்ற பெயரில் நாடக நூல் ஒன்று இயற்றப்பட்டது. இதனை இயற்றியவன் பூங்கோயில்நம்பி ஆவான். திருவாரூர் வீதிவிடங்கப்பெருமான் தேவாசிரியமண்டபத்திலிருந்து இந்த நாடகத்தைக் கண்டதாகக் கல்வெட்டுக் கூறுகிறது. பூங்கோயில் நாயகத்தலைக்கோலி என்ற நடனமங்கையும் புக்கத்துறை வல்லவத்தலைக்கோலி என்பவளும் திருவாரூர் கோயிலில் நடன மாடியதாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இரண்டாம் குலோத்துங்கசோழன் காலத்தில் இக்கோயிலில் திருவிழா,

திருவமுது முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்யப்பட்டு இக்கோயிலில் அப்பர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்திநாயனார், பரவை நாச்சியார் திருமேனிகள் செய்து வைக்கப்பட்டுள்ளன. அனபாயன் என்ற இரண்டாம் குலோத்துங்கசோழனின் பெயரால் அனபாய நல்லூர் என்ற ஊர் இக்கோயிலுக்குத் தானமாகத் தரப்பட்டுள்ளது, இக்கோயிலில் படைக்கப்பட்ட திருவமுது பற்றி விரிவாக கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. சோழர் காலத்தில் இருந்த உயர் தர உணவு வகைகள் பற்றி இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. இரண்டாம் குலோத்துங்கன் கல்வெட்டில் பூரி, அவல் அமுது, அப்பமுது, கறியமுது, தயிரமுது, பாலமுது, மாங்காய் வற்றல், உப்பிஞ்சி, மிளகமுது, நெய்யமுது, பொறிகறியமுது, போனகம் முதலிய உணவு வகைகள் குறிப்பிடப்படுகின்றன.

இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் கோயில் பணியாளர்கள் குடியிருப்பை ஆக்கிரமித்துக் குடியிருந்த வணிகச் செட்டிகள் சிலர் வெளியேற்றப்பட்டனர். திருவாரூருக்கு அருகில் இருந்த சிறுகூற்ற நல்லூர் என்ற ஊர் இராசராசப்போத்துரான அம்மையப்ப நல்லூர் என்ற பெயரில் மாற்றம் செய்யப்பட்டு திருவாரூர்க் கோயிலுக்கு அளிக்கப்பட்டது. இவ்வூர் தற்போது கொரடாச்சேரி ஊராட்சி ஒன்றியத்தில் உள்ளது.

மாறவர்மன் குலசேகரபாண்டியன், ஸ்ரீவல்லபபாண்டியன் காலங்களிலும் விசயநகர, நாயக்க, மராட்டிய மன்னர் காலங்களிலும் இக்கோயில் பல தானங்களைப் பெற்று வளர்ச்சி கண்டுள்ளது. தஞ்சைநாயக்க மன்னர்களான அச்சுதப்பநாயக்கர் கல்வெட்டும் இரகுநாதநாயக்கர் செப்பேடும் இக்கோயிலில் உள்ளன. இதேபோன்று சரபோஜி மன்னர் செப்பேடுகளும் கல்வெட்டும் இக்கோயிலில் காணப்படுகின்றன.

திருவாரூர் சைவத்தலமாக விளங்கியமையால் இப்பகுதியில் சைவமடங்கள் தோன்றியுள்ளன. கோயிலுக்கும் மடத்திற்கும் சைவசமய அடியார்களும் சிவயோகிகளும் வருவது வழக்கமாக இருந்துள்ளது. இவற்றைச் சோழர்காலக் கல்வெட்டுகளும் புலப் படுத்துகின்றன. செம்பியன்மாதேவியின் காலத்தில் தினமும் பன்னிரெண்டு துறவிகளுக்கு உணவு வழங்க செம்பியன்மூவேந்த வேளான் என்ற அதிகாரியால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

அமாவாசை நாட்களில் அபூர்விகளாக வரும் பிராமணர்களுக்கும்; வேதம் ஓதும் பிராமணர்களுக்கும் நாள்தோறும் உணவு வழங்கப் பட்டுள்ளது.

திருவாரூரில் பல சைவமடங்கள் இருந்துள்ளன. முதலாம் குலோத்துங்கச்சோழன் காலத்தில் ''சண்டிகேசுவரன் மடம்'' என்ற பெயரில் இருந்த மடத்தில் சிவனடியார்களுக்கு உணவு வழங்க பழையாற்றுக்கிழான் அருள்மொழி இராசேந்திரசோழன் என்பவனால் கோயில் கருவூலத்தில் பொன் அளிக்கப்பட்டது. விக்கிரம சோழன் காலத்தில் ''தியாகவிநோதன்சாலை'' என்ற மடம் ஒன்று திருவாரூரில் இருந்துள்ளது. மூன்றாம் இராசேந்திரசோழன் காலத்தில் பேரம்பர் விசயபாலர் என்பவர் மடம் ஒன்றை ஏற்படுத்தி தவசிகளுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்துள்ளார்.

திருவாரூர்க் கோயில் சோழர்காலத்துச் சிற்பக்கலை மரபையும் கட்டடக்கலைப் பெருமையும் வெளிப்படுத்தும் அரிய கலைக் கருவூலமாக விளங்குகிறது. சோழர் காலத்துப் பாணியில் விளங்கும் இக்கோயிலின் அசலேசுவரர், வன்மீகநாதர், தியாகராசர் கோயில் விமானங்கள் வேலைப்பாடு மிக்க சோழர் காலத்துக் கட்டடப்பாணியில் விளங்குகின்றன. இவற்றிலுள்ள தேவகோட்டங்களில் சோழர் காலத்துச் சிற்பங்கள் காட்சியளிக்கின்றன. வன்மீக நாதர் கோயிலில் தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர், பிரம்மா, ஆகியோரது உருவங்கள் தேவகோட்டங்களில் காணப்படுகின்றன. அசலேசுவரர் கோயிலில் தேவகோட்டங்களில் செம்பியன் மாதேவியார் கலைப்பாணியில் விளங்கும் மிக அழகிய அர்த்த நாரீசுவரர், துர்க்கை, கங்காளமூர்த்தி, பிரம்மா, அகத்தியர், கணேசர், நடராசர், தட்சிணாமூர்த்தி சிற்பங்கள் காணப்படு கின்றன. முற்காலச் சோழர் காலத்துக் கோயில்களின் கலைப் பாணியில் விளங்கும் மிகச்சிறிய கண்ட சிற்பங்கள் வன்மீகநாதர் கோயிலின் அதிட்டானத்தில் காணப்படுகின்றன. இவற்றில் மகிசாசுரமர்த்தினி, துர்க்கை, கசசம்காரமூர்த்தி வடிவங்கள் அளவில் சிறிய சிற்பங்களாக விளங்கினாலும் சிற்பியின் கைவண்ணத்தை வெளிப்படுத்தும் முறையில் உயிரோட்டமுள்ளவையாகத் திகழ் கின்றன. பிற்காலச் சோழர் சிற்பக்கலைக்குச் சான்றாக கிழக்கு வாயிலில் காணப்படும் பெருங்கோபுரம் காட்சியளிக்கிறது.

தில்லைக் கோபுரம் போன்று காட்சியளிக்கும் இதன் அடித்தளங்களில் இரண்டு வரிசைகளில் தெய்வவுருவங்கள் அணிவகுத்து நிற்கின்றன. இக்கோபுரத்தில் சோழர் காலத்து உருவச்சிலைகளையும், ஆடல் அணங்குகளின் நாட்டிய கரணங்களையும் காண முடிகிறது. பல்லவர் காலத்திலிருந்தே சிறப்புப் பெற்றுவந்த இக்கோயிலில் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த தனித்தன்மை வாய்ந்த சப்தமாதர் உருவங்கள் ஒரு சிற்றாலயத்தில் காணப்படுகின்றன. இதே காலத்தினைச் சார்ந்த சேட்டை தேவியின் உருவம் அக்கினிமாதா, கோமுகன் ஆகியோருடன் இக்கோயிலில் உள்ளது. சோழர், நாயக்கர் காலத்தினைச் சார்ந்த அழகிய செப்புத் திருமேனிகளும் இங்கு உள்ளன.

விசயநகரவேந்தர், நாயக்கர், மராத்தியர் கலைக்குச் சான்றாக விளங்கும் சுவரோவியங்களும் திருவாரூர்க் கோயிலில் காணப்படுகின்றன. தேவாசிரிய மண்டபத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தியின் வரலாறு வண்ண ஓவியமாக விதானத்தில் தீட்டப்பட்டுள்ளது. அதிக அளவில் இருந்த இவ்வோவியம் தற்போது ஓரளவு பார்க்கின்ற நிலையில் ஆங்காங்கே புலப்படுமாறு உள்ளது. ஒருமுறை இந்திரன் அசுரர்களோடு போரிட்டான். அவனுக்கு முசுகுந்தச் சக்கரவர்த்தி உதவி செய்தான். முசுகுந்தச் சக்கரவர்த்தியின் உதவியால் வெற்றி பெற்ற இந்திரன் அவரை தனது மாளிகைக்கு அழைத்துச் சென்று அவருக்குப் பரிசாகத் தரவிருந்த ஆறு விடங்கர் திருமேனிகளைக் காட்டினான். அவற்றில் தியாகராசர் திருமேனியை அடையாளம் காட்டி அதனை இந்திரனிடமிருந்து பெற்று திருவாரூரில் பிரதிட்டை செய்து முசுகுந்த சக்கரவர்த்தி வழிபட்டான். இக்காட்சிகள் ஓவியத்தில் காட்டப்பட்டுள்ளன. இவ்வோவியத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி குரங்கு முகத்துடன் காட்சியளிக்கிறான். முதல் திருச்சுற்றிலுள்ள கோபுர நுழைவாயிலில் மராட்டிய சரபோஜியின் வண்ணவோவியம் அழகுற வரையப்பட்டுள்ளது. காண்பவரைக் கவர்ந்து இழுக்கும் வண்ணவோவியமாக இது திகழ்கிறது.

விசயநகர வேந்தர் காலத்தில் 'திருவாரூர் உசாவடி' என்ற நாட்டுப்பிரிவு திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு செயல்பட்டது. உசாவடி என்பது பின்னர் ராஜ்ஜியம் என்று மாற்றம்

பெற்றது. மராத்தியர் காலத்தில் திருவாரூரில் சிறிய அரண்மனை கட்டப்பட்டது. அது மகால் என்ற பெயரில் அழைக்கப்பட்டது.

திருவாரூரில் ஆண்டுதோறும் நடைபெறும் "ஆழித்தேர்த்" திருவிழா தமிழ்நாட்டில் புகழ்பெற்ற திருவிழாக்களில் ஒன்றாகும். தமிழ்நாட்டிலுள்ள மிகப்பெரிய வேலைப்பாடு கொண்ட தேர்களில் திருவாரூர் ஆழித்தேரும் ஒன்றாகும். திருவாரூரில் பழமை வாய்ந்த பிடாரியம்மன் கோயில் ஒன்றும் உள்ளது. அன்றும், இன்றும் திருவாரூர், இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் வளர்க்கின்ற தலைநகரமாக வரலாற்றில் விளங்கி வருகிறது எனலாம்.

### பழையவலம் (பழைய வல்லம்)

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்திலிருந்தே "பழைய வல்லம்" என்ற பெயரில் வழங்கி வருகிறது. சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூர் திருவாரூர் கூற்றத்திலிருந்திருக்கிறது. சோழமன்னன் இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிக் காலத்தில் பழைய வல்லத்திற்கு உட்கிராமமாக இருந்தது வல்லம் இக்கிராமத்தின் தலைவராக இருந்த பொன்னம்பலக் கூத்தன் நாடுடையான் என்பவர் நாகைக் காரோணசுவாமி திருக்கோயிலில் விளக்கெரிக்க 85 காசுகள் வழங்கியுள்ளார்.

### வலிவலம்

இவ்வூர் திருவாரூர் வட்டத்தில் குன்னியூர் குறுவட்டத்தில் திருவாரூருக்குத் தென்கிழக்கில் உள்ளது. இவ்வூரிலுள்ள மாழையங்கண்ணி உடனுறை மனத்துணை நாதர் கோயிலைத் திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் போன்றோர் பதிகம்பாடிப் போற்றியிருப்பதால் கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள சிவாலயமும் சிறப்புடன் விளங்கி வருவது தெளிவாகிறது. இவ்வூர் இறைவனை "வலிவனம் மேயவனே" என ஞான சம்பந்தர் அழைத்துப் பாடியுள்ளார். பிற்காலச் சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூரின் பெயரில் வலிவலக்கூற்றம் என்ற கூற்றப்பிரிவு செயல்பட்டிருக்கிறது. இக்கூற்றப்பிரிவு அருள்மொழி தேவ வளநாடு என்ற நாட்டுப்பிரிவிற்கு உட்பட்டிருந்திருக்கிறது.

பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இறைவன் பெயர் மனத்துள் நாயனார் எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கோயிலுக்குத் தெற்கில் சோழப் பெருவேந்தர் காலத்தில்

"தவப்பெருமாள் திருமடம்" என்ற மடமொன்றிருந்திருக்கிறது. இம்மடத்துத் தலைவராக எதிரொப்பிலாதார் சோமநாததேவ முதலியார் என்பர் இருந்திருக்கிறார். இச்சிவாலயத்திற்குத் தேவ தானக் கிராமமாக இருந்த குலோத்துங்கச்சோழநல்லூரில் "இராசாதிராசன் பெருங்குளம்" என்ற பெருங்குளம் சோழப் பெருவேந்தன் இராசாதிராசன் பெயரில் தோண்டப்பட்டிருக்கிறது. பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியன் காலத்தில் பாண்டி மண்டலத்து மதுரோதய வளநாட்டு ஆலத்தூர் நாட்டு பாலைக் குறிச்சியைச் சேர்ந்த வயிராதராயன் என்பவர் குலோத்துங்க சோழநல்லூரைச் சேர்ந்த நிலம் ஒன்றினை இக்கோயிலுக்கு விற்றிருக்கிறார். இவருடைய துணைவியார், கூற்றுராகிய பொன் மேய்ந்த நல்லூரைச் சேர்ந்த ஒரு நிலத்தினை இக்கோயிலுக்கு அளித்திருக்கிறார்.

### விளமல் (திருவிளமர்)

திருவாரூரிலிருந்து ஓடம்போக்கியாற்றின் கரை வழியே தஞ்சை செல்லும், பேருந்துத் தடத்தில் திருவாரூருக்குத் தென் மேற்கில் இவ்வூர் உள்ளது. காவிரித் தென்கரைத் தலங்களுள் 90-வது தலமாகப் போற்றப்படும் இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியுள்ளதால், இவ்வூர் ஏறத்தாழ 1300 ஆண்டு காலப் பழமை மிக்கதென்பது தெளிவாகிறது. மேலும் ஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் தங்கள் பாடல்களில் இவ்வூரைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். இங்கு யாழினும் மென் மொழியம்மை உடன் உரை பதஞ்சலி மனோகர் கோயில் ஓடம் போக்கி ஆற்றின் தென்கரையில் உள்ளது.

### வேலங்குடி

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் திருவாரூர் கூற்றத்தில் பிரம்மதேயமாகத் திகழ்ந்திருக்கிறது. இவ்வூரில் சோழர் கிராமசபை திறம்பட செயல்பட்டிருக்கிறது. இவ்வூர் சோழர்காலம் தொடங்கி இன்று வரை பெயர் மாற்றமின்றி வேலங்குடி என்ற பெயரிலேயே வழங்கி வருவது குறிப்பிடத் தக்கது. சோழர்காலத்தில் இவ்வூரில் அபிமானமேரு வாய்க்கால், வானவாய் நீரோடுகால், ஊர் வாய்க்கால், திருநாராயண வாய்க்கால், போன்ற பல வாய்க்கால்கள் இருந்திருக்கின்றன என்பதைக் கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது. ○

## திருத்துறைப்பூண்டி வட்டம்

அலிவலம்

இடும்பாவனம்

கச்சனம்

களந்தை (களப்பால்)

கீரக்களூர்

கொருக்கை

கோயில் சிங்களாந்தி

சிற்றாமூர்

சேகல்

திருத்தெங்கூர்

திருத்துறைப்பூண்டி

நெடும்பலம்

பன்னத்தெரு

பனையூர்

மருதவனம்

வங்கநகர்

வடகாடு கோயிலூர்

## அலிவலம்

சோழப்பெருவேந்தர் காலத்தில் இவ்வூருக்கு ஆர்வலம் என்ற பெயர் வழங்கி வந்திருக்கிறது. ஆர்வலம் என்ற பெயரே காலப் போக்கில் மருவி அலிவலம் ஆகியிருக்கிறது. சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூரை மையமாகக் கொண்டு ஆர்வலக் கூற்றம் என்ற கூற்றப்பிரிவு இருந்துள்ளது. கச்சனம், கொள்ளிக்காடு, பூசலாங்குடி, புலியூர், தளிக்கொற்றங்குடி, திருநெல்லிக்காவல், திருத்தெங்கூர், உத்தரங்குடி, வடவிறையான்பள்ளம் போன்ற ஊர்கள் இக்கூற்றத்திலிருந்திருக்கின்றன. சோழப்பெருவேந்தர் காலத்தில் இவ்வூரில் கிராம சபை நன்கு செயல்பட்டிருக்கிறது இச்சபையார் தஞ்சைப் பெருங்கோயிலுச்குத் திருப்பரிசாரகஞ் செய்யும் மாணி ஒருவருக்கான பொறுப்பினை ஏற்றுச் செயல் செயல்படுத்தியிருக்கிறார்கள்.

## இடும்பாவனம்

சம்பந்தர் இவ்வூருக்கு வந்து பதிகம் பாடியிருப்பதால் இவ்வூர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இருந்து வருவது தெளிவாகிறது. "பொழில் சூழ்தரும் இடும்பாவனம்" என்றும் "வயல் புடைசூழ்தரும் இடும்பாவனம்" என்றும், இவ்வூரின் வளத்தை ஞானசம்பந்தர் பாடியுள்ளார். இவ்வூரிலுள்ள சிவ பெருமானுக்கு மங்களநாயகி உடனுறை சற்குணநாதர் என்ற பெயர் வழங்கி வருகிறது.

தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக்காலத்தில் "இடும்பாவன மாகாணம்" என்ற மாகாணப் பிரிவு ஒன்று இருந்திருக்கிறது. தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் இராமேசுவரத்தில் செயல்பட்டு வந்த அன்னசத்திரத்திற்கு இடும்பாவனம் மாகாணத்தி லிருந்து நெல் அனுப்பப்பட்டு வந்திருக்கிறது.

திருத்துறைப்பூண்டி அருகிலுள்ள இவ்வூர், காவிரித் தென் கரைத் தலங்களில் 110ஆவது தலமாகப் போற்றப்படுகிறது. இவ்வூரிலுள்ள ஞானாம்பிகை உடனுறை நீள்நெறிநாதர் கோயில் திருஞானசம்பந்தரால் பாடப்பட்ட சிறப்புடையது. அரிவாட்ட நாயனார் இவ்வூரில்தான் வீடுபேறடைந்தார்.

ஞானசம்பந்தரின் "செம்பியன் கோச்செங்கன் நிருபர் தண்டலை நீயொறி', என்ற தொடரால், இக்கோயில் கோச்செங்கட்சோழனால் கட்டப்பட்ட மாடக் கோயில்களுள் ஒன்று என்பதை அறியலாம்.

கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தர் சிற்பம் ஒன்று இவ்வூரில் கிடைத்துள்ளது. சோழநாட்டில் பௌத்தம் சிறப்புற்றிருந்தமைக்கு இது சான்றாக அமைகிறது.

**கச்சனம்**

இவ்வூர் காவிரித் தென்கரைத் தலங்களில் 122-ஆவதாக வைத்துப் போற்றப்படுகிறது. இவ்வூருக்குக் கோங்குவனம், கர்ணிகாரவனம் போன்ற பிற பெயர்களும் உண்டு. இவ்வூருக்கு கைச்சினம் என்ற பெயர் ஏறத்தாழ கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே வழங்கி வருகிறது. திருஞானசம்பந்தரின் தேவாரப் பாடலில் இவ்வூரின் பெயர் கைச்சினம் என்றே குறிக்கப் பட்டுள்ளது. பிற்காலச் சோழர் காலத்தில் இவ்வூர் திருக்கச்சினம் என்றழைக்கப்பட்டிருக்கிறது. இப்பெயர் காலப்போக்கில் மருவி தற்போது கச்சனம் என வழங்கிவருகிறது.

இவ்வூருக்கு இப்பெயர் ஏற்பட்டதற்கு புராண ரீதியாக ஒரு காரணம் கூறப்படுகிறது. இந்திரன் கௌதம முனிவரின் மனைவி அகலிகையை மருவ, அதனால் கோபமுற்ற முனிவர் இந்திரனைச் சபித்தார். இச்சாபம் நீங்குவதற்காக இந்திரன் இவ்வூரில் மணல் லிங்கத்தைத் தோற்றுவித்துப் பூசித்தான். இம் மணல் லிங்கத்தை தீர்த்தத்தில் சேர்ப்பிக்க எண்ணி தன் கைகளால் பற்றி எடுத்தான். அப்போது இந்திரனின் கைவிரல்கள் லிங்கத்தில் பதிந்ததால் இறைவனுக்குத் திருக் கைச்சின்னமுடையார் என்றும், இவ்வூருக்கு கைச்சி(ன்)னம் என்றும் பெயர் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. இதனால் மகிழ்ந்த இறைவன் இந்திரனின் உடலில் தோன்றிய குறிகளைக் கண்களாக மாற்றி அருள, இந்திரனும் ஆயிரங் கண்ணுடையான் ஆயினன்.

இவ்வூர் பிற்காலச்சோழர் காலத்தில் இன்றைய ஆலிவலத் (அலிவலம்) தினை மையமாகக் கொண்டமைந்திருந்த ஆர்வலக்

கூற்றத்தின் ஒரு பகுதியாக இருந்திருக்கிறது. விசயநகர மன்னர் கல்வெட்டுகளில் இவ்வூர்ப் பகுதி வேளூர்க் கூற்றத்தார் கச்சினப் பற்றாகக் குறிக்கப்பட்டுள்ளது.

இவ்வூர் கச்சனேசுவரர் என்ற சிவன் கோயிலில் 11 கல்வெட்டுகள் உள்ளன. இராசராசன் கல்வெட்டு, முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசாதிராசன் கல்வெட்டு, விக்கிரம சோழன் கல்வெட்டு, மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசேந்திரன், சடையவர்மன் சுந்தரபாண்டியன், விருப்பண்ண உடையார், வீரபூபதி உடையார் ஆகியோரின் கல்வெட்டுகள் இங்குள்ளன. பாலைக்குறிச்சி உடையார் அரையன் திருமறைக்காடுடையான் கச்சனம் கோயிலுக்கு விளக்கெரிக்கவும், திருப்பள்ளி எழுச்சி, வைகாசித் திருநாள் ஆகியவற்றுக்காகவும் நிலம் அளித்த செய்தியை இக்கோயில் மூன்றாம் இராசேந்திரனின் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

### களந்தை (களப்பால்)

சுந்தரரால் வைப்புத் தலமாகக் குறிக்கப்பட்டுள்ள இவ்வூர், கூற்றுவ நாயனாரின் அவதாரத் தலமுமாகும். கல்வெட்டுகளில் இவ்வூர் அருமொழிதேவ வளநாட்டுக் களப்பால் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் பெயரில் களப்பாள் மாகாணம் என்ற மாகாணப் பிரிவு ஒன்று இருந்திருக்கிறது.

### கீரக்களூர்

இவ்வூரில் உள்ள அகஸ்தீசுவரர் என்ற சிவன் கோயிலில் இருபத்தி மூன்று கல்வெட்டுகள் உள்ளன. கோப்பரகேசரி, இராசகேசரிபன்மர், முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன் ஆகியோர்களின் கல்வெட்டுகள் இங்குள்ளன. இக்கோயிலில் உள்ள முதலாம் குலோத்துங்கனின் கல்வெட்டு இவ்வூரை இராசேந்திரசோழ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்துப் பிரம்மதேயம் குலதீபமங்கலம் என்று குறிக்கின்றது. இரண்டாம் இராசேந்திரன் காலத்தில் களப்பாழ் சபையார் கீரக்களூர் புருசோத்தமதேவர் மாடத்தே கூட்டம் குறைவறக் கூடியிருந்து வைத்தியக் காணியாக நிலத்தை அனுபவித்து வந்த காஸ்யபன் அரையன் அரைசனான ராஜகேசரி

மங்கலப் பேரரையனின் காணி நிலமும், மனையும் செல்லாது என்று சபையோர் அபகரித்துக் கொண்டபின், அந்த வைத்தியன் சமூக வழக்கப்படி சபையோர்க்கு விண்ணப்பம் செய்தான். அப்போது பரசுராமன் என்பவன் வைத்தியனுக்கு பயிர் செய்ய நிலம் கொடுக்கப்பட்டிருந்தது என சாட்சி கூறினான். அதனால் அபகரித்துக்கொண்ட நிலத்திற்குத் தலைமாறாக அவனுக்கு நிலம் வழங்கப்பட்டது.

### கொருக்கை

இங்குள்ள வீரட்டேசுவரர் என்ற சிவன் கோயிலில் கி.பி. 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு உள்ளது. சொக்கநாயக்கன் பட்டன் என்ற பெயர் இரண்டு துண்டு கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன. நுந்தாவிளக்கு எரிக்கக் கொடுக்கப்பட்ட கொடைகளை இக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

### கோயில் சிங்களாந்தி

இவ்வூரில் உள்ள கைலாசநாதர் என்ற சிவன் கோயிலில் ஐந்து கல்வெட்டுகள் உள்ளன. ஒரு கல்வெட்டு மூன்றாம் குலோத்துங்கன் காலத்தது. மற்ற நான்கு கல்வெட்டுகளில் அரசர் பெயர் தெரியவில்லை. கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் சோழகுலசுந்தரிவதி, சோழவாய்க்கால் முதலியவை குறிக்கப்படுகின்றன. இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் அருமொழி தேவ வளநாட்டுப் பிரிவிற்குட்பட்ட புறங்கரம்பை நாட்டிற்குள் இருந்தது. சோழர் காலத்தில் இவ்வூர் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலம் என்று பெயர் பெற்றிருந்தது. இச்சதுர்வேதிமங்கலத்துச் சபையார் மாமன்னன் முதலாம் இராசராசசோழன் கட்டிய தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் திருப்பரிசாரகஞ்செய்யும் மாணி ஒருவனுக்கான பொறுப்பேற்றுச் செயல்பட்டு வந்திருக்கின்றனர்.

### சிற்றாமூர் (சிற்றாய்மூர்)

பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூரின் பெயர் சிற்றாமூர் என்றும், இவ்வூரிலுள்ள இறைவனின் பெயர் திருவாதீசுவரமுடைய நாயனார், திருவாதித்த ஈசுவரமுடைய நாயனார்

என்றும், ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகட்டு முன்னர் வழங்கியிருக்கிறது. சிற்றாமூர் என்ற பெயரே காலப்போக்கில் சித்தாய்மூர் என்று மருவி இருக்கிறது. திருஆதித்தஈசுவரம் உடையார் என்று சோழர் காலத்தில் வழங்கிய இவ்வூர் இறைவனின் பெயர் இன்றைய தினம் சொர்ண ஸ்தாபனேசுவரர் என்று வழங்கி வருகிறது. தஞ்சை நாயக்க மன்னர்களில் செவ்வப்ப நாயக்கர் காலத்தில் செவ்வப்ப நாயக்கர் மற்றும் நல்லம நாயக்கர் ஆகியோரின் நன்மைக்காக இக்கோயிலில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

திருஞானசம்பந்தரால் தேவாரப் பாடல் பெற்ற சிவத்தலமான சிற்றேமம், சித்தாய்மூரே என்ற கருத்துமுண்டு. தஞ்சைமாவட்டம் பட்டுக்கோட்டை வட்டத்திலுள்ள திருச்சிற்றம்பலம் திருத்துறைப் பூண்டிக்கருகில் உள்ள எழிலூர் நேமம் இவற்றிலொன்று சிற்றேமமாக இருக்கக்கூடும் என்ற கருத்துமுள்ளது. திருஞான சம்பந்தரால் பாடப்பட்ட சிற்றேமம் சித்தாய்மூரே என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்படும்பட்சத்தில், இவ்வூரின் பழமை கி.பி. ஏழாம் நூற்றாண்டு வரை செல்லும்.

இங்குள்ள சிவன் கோயிலில் ஏழு கல்வெட்டுகள் உள்ளன. இவை மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசேந்திரன். தஞ்சை நாயக்கர் காலத்தைச் சார்ந்தவை. மூன்றாம் குலோத்துங் கனின் கல்வெட்டில், கோயிலின் இறைவன் பெயர் திருவாதித்த ஈஸ்வரமுடையார் என்று குறிக்கப்படுகின்றது. இவனது மற்றொரு கல்வெட்டு, சிற்றாமூர் திருவாதித்தீசுவரமுடையார் கோயிலில் 30 வட்டத்துப் பிராமணர்கள் செய்த நிவந்தத்தை குறிக்கின்றது. மூன்றாம் இராசேந்திரனின் கல்வெட்டு கோயிலுக்கு சந்திவிளக்கு எரிப்பதற்குக் கோயிலில் பணிபுரியும் சிலர் பொன்னை பெற்றுக் கொண்ட செய்தியைக் குறிக்கின்றது. 150 காசினைப் பெற்றுக் கொண்டு, அதற்கு பொலியூட்டாக தினம் சந்தி விளக்கு ஒன்று எரிப்பதற்கு சிவப்பிராமணர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை ஒரு கல்வெட்டு குறிக்கின்றது. இக்கல்வெட்டில் செவ்வப்ப நாயக் கனுக்கும் நல்லம நாயக்கனுக்கும், நன்மை வரும் பொருட்டு உபயம் செய்தது குறிப்பிடப்படுகிறது.

### சேகல் (திருக்குறிப்பு சேல்கல்)

இவ்வூரில் உள்ள வர்த்தமானேசுவரர் திருக்கோயிலில் இருபது கல்வெட்டுகள் உள்ளன. இவற்றிலிருந்து இவ்வூரும்

இவ்வூரிலுள்ள சிவாலயமும் ஏறக்குறைய பன்னிரெண்டாம் நூற்றாண்டிலிருந்து தனிச்சிறப்புடன் விளங்கி வருகின்றன என்பது தெளிவாகிறது. பிற்காலச்சோழர் கல்வெட்டுகளில இவ்வூரின் பெயர் திருக்குறிப்பு சேல்கல் என்று காணப்படுகிறது. இப்பெயரே காலப்போக்கில் மருவி இன்றைய தினம் சேகல் என வழங்கி வருகிறது. இதேபோல பிற்காலச்சோழர் காலத்தில் திருவாண்டளந்த நாயனார் என வழங்கிவந்த இறைவனின் பெயர் இன்றைய தினம் வர்த்தமானேசுவரர் என்று வழங்கி வருகிறது. இக்கோயிலுக்குப் பிற்காலச் சோழர் காலத்தில் எண்ணற்ற கொடைகள் வழங்கப் பட்டிருக்கின்றன. ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வூர் சிவாலயத்தில் சித்திரை விசு திருநாளும், ஆனி மூலத் திருநாளும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டதை இக்கோயில் கல்வெட்டொன்று தெரிவிக்கிறது.

சேகல் வர்த்தமானேசுவரர் கோயிலுக்குரிய, சோழப்பெரு வேந்தர் கலைப்பாணியிலமைந்துள்ள திரிபுராந்தகர், சூரியன், விநாயகர் செப்புத் திருமேனிகள், இக்கோயில் பிற்காலச்சோழர் காலத்தில் மிகச்சிறப்பான நிலையில் இருந்தமையை எடுத்தியம்பிக் கொண்டிருக்கின்றன.

தஞ்சை மராட்டிய மன்னர் காலத்தில், சேகல், மன்னார்குடி சுபாவுக்குட்பட்ட கச்சனம் மாகாணத்திலிருந்தது. சேகல் மாகாணத்திலிருந்து, இரண்டாம் துளசா காலத்தில் (கி.பி 1778-இல்) கோனேரி நரசிம்மன் என்பவருக்கு $44\frac{1}{2}$ வேலி நிலம் சுரோத்திரிய மாக வழங்கப்பட்டிருக்கிறது.

### திருத்தெங்கூர்

தஞ்சை மாவட்டத்தில் காவிரித் தென்கரைத் தலங்களுள் 116-ஆவது தலமான இவ்வூர், திருஞானசம்பந்தரால் பாடப்பட்ட சிறப்புடையது. எனவே, கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர் தனிச்சிறப்புடன் விளங்கியது என்பதில் ஐயமில்லை. சம்பந்தர் பதிகத்திலேயே இவ்வூர் தெங்கூர் என்றும் இறைவன் வெள்ளியங்குன்றமர்ந்தார் என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதால், ஏறத்தாழ 1300 ஆண்டுகளாக இவ்வூருக்கும் இக்கோயிலுக்கும் இப்பெயர் வழங்கி வருகிறதெனலாம். வெள்ளியங்குன்றமர்ந்தார்

என்ற பெயரே வடமொழியாக்கம் பெற்று இன்றைய தினம் இறைவனுக்கு இரசதகிரீசுவரர் என்று வழங்கி வருகிறது. இவ்வூர் தென்னை மரங்கள் மிகுந்த ஊராக இருந்த காரணத்தினால் இவ்வூருக்குத் தெங்கூர் என்ற பெயரேற்பட்டிருத்தல் கூடும்.

இவ்வூர் சிவாலயத்தில் மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன், குலசேகரபாண்டியன் ஆகிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுகள் உள்ளன. மூன்றாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் சிவபாத சேகர நல்லூர் என்ற கிராமம் இச்சிவாலயத்தின் தேவதான ஊராக இருந்ததைக் கல்வெட்டொன்றின் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் முப்பதாம் ஆட்சி யாண்டில் இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காக 200 பலம் எடையுள்ள குத்துவிளக்கும் 4000 காசுகளும் வழங்கப்பட்டிருக் கின்றன. இச்சிவாலயத்தின் தேவதான, திருவிளக்குப்புற நிலம் ஒரு மாவினைத் திருத்தெங்கூர் வியாபாரிகள் விலைக்கு வாங்கி, திருத்தெங்கூர் காவற்காணி உடைய போயனுக்கு வேட்டைப் பேறாக வழங்கியிருந்தனர். மூன்றாம் இராசராச சோழனின் ஆட்சிக்காலத்தில் போயனுக்கு வேறு நிலம் வழங்க எண்ணிய வியாபாரிகள், முதலில் தாம் கோயிலிடமிருந்து வாங்கிய ஒரு மா நிலத்தினையும், அதற்கென தாம் கொடுத்திருந்த விலைப்பணம் ஐம்பது காசினையும் கோயிலுக்கே திருநாமத்துக் காணியாகக் கொடுத்து விடுகின்றனர். வியாபாரிகள் இக்கொடையினைக் கோயிலுக்கு வழங்கியதை முன்னிட்டு, அவர்களுக்கு எண்ணெய் வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டதாக மூன்றாம் இராசராசன் காலக் கல்வெட்டொன்று தெரிவிக்கிறது.

திருத்தெங்கர் பகுதியிலேயே 'வெள்ளியிடு நகரம்' என்ற பகுதி சோழர் காலத்தில் வணிகர் வாழ்ந்த பகுதியாக இருந் திருக்க வேண்டும். இவ்வெள்ளியிடு நகரத்து ஊரவர்கள் வெள்ளியங்குன்றமுடையாற்கு உபயமாக திருநொந்தாவிளக் கினுக்கு ஆண்டொன்றுக்கு முப்பது நாழி உழக்கு ஆழாக்கு எண்ணெய் அளக்க வேண்டி ஒரு மா நிலத்தினை வழங்கியிருக் கின்றனர்.

குலசேகர பாண்டியனது ஆட்சிக் காலத்தில் வெள்ளியங்குன்ற முடைய நாயனாருக்கு அலைவாயுகந்த பெருமாளான மாளவச் சக்கரவர்த்திகள் என்பவர் தம் பெயரால் 'மாளவன் சந்தி' என்ற சிறப்பு வழிபாட்டினை ஏற்படுத்தியிருக்கிறார். இதற்காக 200 கலம் நெல்லும் 30 பணமும் வழங்கப்பட்டிருக்கிறது.

முதலாம் இராசராசசோழன் தஞ்சையில் பெருங்கோயிலைக் கட்டி, அக் கோயில் இறைவனுக்கு வேண்டும் நிவந்தங்களுக்காக பல ஊர்களைக் கொடுத்த பொழுது திருத்தெங்கூரையும் வழங்கி யிருக்கிறான். அவனது ஆட்சி காலத்தில் திருத்தெங்கூரின் நில அளவு முப்பத்து நாலே காலே முக்காணி முந்திரிகைக் கீழ் முக்காலே ஒருமா முக்காணி முந்திரிகைக் கீழ் இரண்டு மா ஆகும். இதில் ஊர் நத்தம், குளங்கள், தீண்டாச்சேரி, பறைச்சேரி, சுடுகாடு ஆகியவை அடங்கிய வரியில்லா நில அளவு நான்கரையே முக்காணி அரைக்காணிக்கீழ் முக்காலே அரைமா அரைக்காணி முந்திரிகைக்கீழ் நான்கு மா ஆகும். மேற்குறிப்பிட்ட வரியில்லா நிலம் போக வரி செலுத்த வேண்டிய நிலத்தின் அளவு இருபத் தொன்பதரையே நான்கு மா முக்காணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் முக்காலே மூன்று மா. இந்நிலத்திற்குரிய வரியாக செலுத்த வேண்டிய பொன்னின் அளவு இருநூற்றுத் தொண்ணூற்று ஏழு கழஞ்சேய் நாலு மஞ்சாடி மூன்று மா முக்காணி. இன்றைய மதிப்பில் ஏறக்குறைய அறுநூற்று நாற்பது கிராம் தங்கத்தினை திருத்தெங்கூர், தஞ்சைப்பெருங்கோயில் நிவந்தங்களுக்காக வழங்கி வந்திருக்கிறது.

திருத்தெங்கூர் பிற்காலச் சோழர் காலத்தில் ஆர்வலக்கூற்றம் என்ற நாட்டுப்பிரிவிற்குட்பட்ட நகரமாக விளங்கியிருக்கிறது.

இவ்வூருக்குப் புராண ரீதியாக தேங்கூர் என்ற பெயர் வழங்கி வருகிறது. ஊழிக்காலத்தில் உலகம் முழுவதும் அழிவுற்ற தாகவும், அங்ஙனம் அழிவு நேர்ந்தபோது இவ்வூர் மட்டும் அழியாது, கடல்நீர் தேங்கி நின்றதால், இவ்வூருக்குத் தேங்கூர் என்ற பெயரேற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

### திருத்துறைப்பூண்டி

திருத்துறைப்பூண்டியைத் தலைமையிடமாகக் கொண்டு தனி வட்டம் செயல்பட்டு வருகிறது. இங்குள்ள பிறவி மருந்தீசுவரர்

கோயில் சிறப்பு வாய்ந்த கோயிலாகும். இக்கோயிலில் இருந்து முப்பத்தெட்டு கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன. மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் கல்வெட்டுகள், மூன்றாம் இராசேந்திரன், சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன், ஸ்ரீவல்லபபாண்டியன் தேவராயமகாராயர் ஆகியோரின் கல்வெட்டுகள் இங்கு காணப்படுகின்றன.

குலசேகர பாண்டியன் கல்வெட்டு இவ்வூரை இராசேந்திர சோழ வளநாட்டு வண்டாழை வேளூர்க் கூற்றத்து திருத்துறைப் பூண்டி என்று குறிப்பிடுகிறது. மூன்றாம் இராசராசனின் கல்வெட்டு திருச்சிற்றம்பலமுடைய நாயனார் என்னும் சிவாச்சாரியாருக்காக மடம் ஒன்று தோற்றுவித்ததைக் குறிக்கிறது. திருத்துறைப் பூண்டிக்கு வந்த அவர், மக்கள் விருப்பத்தின்படி அங்கேயே தங்கினார் என்றும், அம்மடத்தைக் காண வருவோர்க்கு உணவளிக்க நிலம் அளிக்கப்பட்டது என்றும் தெரிவிக்கின்றது. இம்மன்னனின் மற்றொரு கல்வெட்டு, சாத்தமங்கலத்தில் வாழும் மக்கள் முடுக்கன் குளம் என்ற குளத்தையும், சில நிலங்களையும் தானமாகக் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது. இவ்வூரின் ஒரு பகுதி பள்ளிச் சந்த நிலமாகவும் குறிக்கப்படுகிறது. இச்கல்வெட்டு மூலம் சாத்தமங்கலத்தில் குலோத்துங்க சோழீச்சுரம் உடையார் கோயில் இருந்ததை அறிந்து கொள்ள முடிகின்றது. திருத்துறைப் பூண்டியைச் சேர்ந்த பாலறாவாயர் என்பார் செல்வத் திருவாரூரில் ஒரு மடம் கட்டுவதற்கு ஆர்வலக் கூற்றத்துப் பூசலாங்குடியில் நிலம் வாங்கி தானமாக அளித்தார். நேத்ரதேவர் என்பவரின் தலைமையில் இம்மடம் இயங்கி வந்தது.

இராசேந்திர சோழவளநாட்டுப் புறங்கரம்பை நாட்டு, பிரம்மதேயம் சுத்தவல்லிச் சதுர்வேதிமங்கலத்து சோழமாருதி நல்லூரில் குலோத்துங்கசோழ பட்டணத்து வணிகன் ஒருவன் திருத்துறைப்பூண்டி உடையார் கோயிலுக்கு ஒரு குளம் வெட்டினான்.

மூன்றாம் இராசேந்திரனின் கல்வெட்டு மூன்றாம் திருச் சுற்றிலுள்ள தென்னந்தோப்பைப் பராமரிக்க நிலம் அளித்ததைக் குறிக்கிறது. மற்றொரு கல்வெட்டு வடகரை விருதராசபயங்கர

வளநாட்டுத் தனியூர் வீரநாராயண சதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்த ஒருவன் வடக்குத் திருச்சுற்று மாளிகையில் தான் எழுந்தருளிவித்த சிவனுக்கு நிலத்தை தானமாக அளித்துள்ளதைக் குறிப்பிடுகின்றது. இம்மன்னன் காலத்தில் இக்கோயிலில் எழுந்தருளியுள்ள தேவிக்கு ஆடிப்பூரத் திருவிழா நடத்தப்பட்டுள்ளது. இக்கோயிலில் உள்ள கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்று இக்கோயிலில் உள்ள குடமுழாவை அளித்தவர் சிகார் என்ற ஊரைச் சேர்ந்த மல்லாண்டார் ஆன சோழகோனார் என்று தெரிவிக்கின்றது. இக்குடமுழாவின் நிறை 2330 பலம் என்ற செய்தியும் அக்குடமுழாவிலேயே பொறிக்கப்பட்டுள்ளது.

பாண்டியனின் கல்வெட்டில் வீதிவிடங்கப்பெருமாளான வல்லவராயன் தம் பேரால் "வல்லவராயன் சந்தி" என்ற பூசை நடைபெறுவதற்கும் தன் பேரில் அமைந்த திருநந்தவனத்திற்கும் திருநந்தவனக் குடிகளுக்கும், சுப்பிரமணியப் பிள்ளையார்க்குப் பூசை நடைபெறுவதற்கும் இறையிலியாக நிலம் அளித்த செய்தி காணப்படுகிறது. இம்மன்னன் காலத்தில் மூன்றாம் பிரகாரத்தில் திருப்பணி நடந்தது. இதற்காக இறையிலியாக அவ்வூர் கைக்கோளர்களில் ஒருவன் நிலம் கொடுத்தான். இம்மன்னனின் 40-வது ஆட்சியாண்டு கல்வெட்டு கோயில் நிர்வாகிகள் கணக்கெழுதுவோர் ஆகியோர் கோயிலின் சொத்தை தவறாகவும், அதிகமாகவும், செலவு செய்ததைத் தடுத்து, அவ்வாறு செய்வார்க்குரிய தண்டனையையும் கூறுகிறது. திருத்துறைப்பூண்டிக்கு அருகிலுள்ள சாந்தமங்கலத்தில் சமணக்கோயிலுக்குரிய தானநிலங்கள் இருந்த செய்தி மருந்தீசர் கோயிலின் மண்டபத்திலுள்ள மூன்றாம் இராசராசன் கல்வெட்டொன்றில் (கி.பி. 1227) காணப்படுகிறது. திருத்துறைப்பூண்டியில் சைவசமயத்தின் இருபிரிவினருக்கிடையே பூசல் ஏற்பட்டுள்ளது. துறவிகள் தங்கியிருந்த குகையை இடித்துள்ளனர். இது 'குகையிடிக்கலகம்' எனப்பட்டது.

### நெடும்பலம்

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் இராசேந்திரசோழ வளநாட்டுப் பிரிவிற்குட்பட்ட புறங்கரம்பைநாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஊராக இருந்திருக்கிறது, ஊரின் பெயர் "நெடும்புலம்" என வழங்கியிருக்கிறது, இவ்வூரைச் சேர்ந்த

ஒருவர் விக்கிரமசோழன் காலத்தில் திருநறையூரிலுள்ள சித்தநாத சுவாமி கோயிலில் விளக்கெரிப்பதற்குப் பணக்கொடை வழங்கி யிருக்கிறார்.

### பன்னத்தெரு

இவ்வூர் சோழர் காலத்திலேயே சிறப்புடன் திகழ்ந்திருக்கிறது. இவ்வூரிலிருக்கும் பன்னகாபரமேசுவரர் கோயிலில் சோழர் காலக் கல்வெட்டுகளும், பிற்காலக் கல்வெட்டுகளும் உள்ளன. சோழர் காலத்தில் இவ்வூர் "முகத்தலை" என்றும், இங்குள்ள சிவா லயத்தின் பெயர் "பன்னகாபரணதேவர் கோயில்" என்றும் வழங்கியிருக்கிறது. கி.பி. 19-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் ஊரின் பெயர் "பன்னத்தெரு" என்றும், இறைவன் பெயர் "பன்ன காமுடைய தம்பிரானார்" என்றும் காணப்படுகிறது. மூன்றாம் குலோத்துங்கசோழனின் ஆட்சிக்காலத்தில் இக்கோயிலில் நந்தா விளக்கெரிப்பதற்காக சே(ல்)கல் என்ற ஊரில் வாழ்ந்து வந்த பீமநாயகன் என்ற வணிகன், நாநூறு காசுகளை வழங்கியிருக் கிறான். அதேபோல கங்கைகொண்ட வேளார் என்பவர் ஆயிரத்து மூன்று காசுகளை வழங்கியிருக்கிறார்.

### பனையூர்

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் அருமொழிதேவ வளநாட்டிற்குட்பட்ட புறங்கரம்பைநாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந் திருக்கிறது. சோழர்காலம் தொடங்கி இன்று வரையிலும் பனையூர் என்ற பெயர் இவ்வூருக்கு மாற்றமின்றி வழங்கி வருவது குறிப்பிடத்தக்கது. பனைமரங்கள் மிக்கிருந்த பகுதியிலமைந்த ஊர் என்ற பொருளில் இவ்வூருக்குப் பனையூர் என்ற பெயரேற் பட்டிருக்கலாம். மாமன்னன் முதலாம் இராசராசசோழன் காலத்தில் இவ்வூர்ச் சபையார் தஞ்சைப் பெரியகோயிலில் திருப் பரிசாரகஞ் செய்யும் மாணி ஒருவருக்கான பொறுப்பினை ஏற்றுச் செயல்படுத்தி வந்துள்ளனர்.

### மருதவனம்

இவ்வூர் தியாகராசர் தோப்பில் உள்ள கி.பி. 16-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு குறிப்பிட்ட அளவு நிலத்தில்'

இலுப்பை மரக்கன்றுகள் நட்டு, பயிர்செய்து, அந்நிலத்தை அனு பவிக்க வழி செய்த செய்தியைக் குறிக்கின்றது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மற்றொரு கல்வெட்டு தியாகராச சுவாமிகள் கட்டளை என்ற பெயரில் சிவன் கோயிலுக்கு மூன்றுவேலி புன் செய்யும் இரண்டுவேலி நன்செய்யும் இலட்சுமதேவர்த்திதேவர் என்பவர் கொடுத்தைக் குறிக்கிறது.

### வங்கநகர்

இவ்வூர் முத்துப்பேட்டை ஊராட்சி ஒன்றியத்திலுள்ளது. இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் புறங்கரம்பை நாட்டுப் பிரிவிற்குட்பட்டு, ''வங்கநகர்'' என்ற பெயரிலேயே இருந்திருக் கிறது. எனவே இவ்வூருக்கு இப்பெயர் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக மாற்றமின்றி வழங்கி வருகிறதெனலாம். சோழப் பெருவேந்தன் முதலாம் இராசராசசோழன் தஞ்சைப் பெருங் கோயிலுக்குத் திருப்பரிசாரகஞ் செய்யும் மாணிகளை நியமித்த போது வங்கநகர் சபையார் தங்கள் பங்கிற்குத் திருப்பரிசாரகஞ் செய்யும் மாணி ஒன்றை சந்திராதித்தவரை இட்டுவர ஆணை பிறப்பித்துள்ள செய்தி தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டில் உள்ளது.

### வடகாடு கோயிலூர் (திருவுசாத்தானம்)

காவிரித் தென்கரைத் தலங்களுள் 107-ஆவது தலமாகப் போற்றப்படும் இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியுள்ளார். இவ்வூருக்கு சூதவனம் (மாமரக்காடு) என்ற பெயருமுண்டு. எனவே இப்பகுதியில் தொடக்க காலத்தில் மாமரங்கள் மிகுந்திருந்தன எனலாம். இவ்வூருக்கு 'சூதவனப் புராணம்'' என்ற பெயரில் தலபுராணமும் உண்டு. கோயில் என்ற சொல் தில்லையாகிய சிதம்பரத்தைக் குறிக்கும். தில்லை இறைவன் உறைகின்ற இடம் இவ்வூர்க் கோயில் என்பதைத் ''தில்லையா னுறைவிடந் திருவுசாத்தானமே'' என ஞானசம்பந்தர் சுட்டிப் பாடியிருப்பதன் அடிப்படையில் இவ்வூருக்குக் கோயிலூர் என்ற பெயரேற்பட்டதெனலாம்.

இவ்வூரில் உள்ள மந்திரபுரீசுவரர் என்ற சிவன் கோயிலில் ஐம்பது கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை விக்கிரம சோழன், இரண்டாம் இராசராசன், மூன்றாம் குலோத்துங்கன்,

மூன்றாம் இராசராசன், மூன்றாம் இராசேந்திரன், சுந்தர பாண்டியன் ஆகியோர் காலத்தவையாகும். விக்கிரமசோழனின் கல்வெட்டு, இராசேந்திர சோழ வளநாட்டு, புறங்கரம்பை நாட்டுப் பிரம்மதேசம் சாக்கானமான கேரளகுலாசனிச் சருப்பேதிமங்கலம் என்று குறிக்கின்றது. மேலும் இவ்வூரின் பெயர் விக்கிரமசோழ நல்லூர் என்று மாற்றப்பட்டதைத் தெரிவிக்கிறது. மூன்றாம் இராசராசன் கல்வெட்டு இக்கோயிலை திருஉசாத்தானமுடையார் கோயில் என்று குறிக்கின்றது.

மூன்றாம் இராசராசனின் பத்தாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் சில நிலவரிகளைக் கோயில் திருப்பணிகளுக்குக் கொடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது. பையூர் நாட்டுப் பையூரைச் சேர்ந்த பிச்சன் பல்லவராயன் ஆன சோழவரையன் இக்கோயிலில் எழுந்தருளுவித்த பல்லவரீசுவரமுடைய நாயனார்க்கு வழிப்பாட்டுக் காக நிலம் கொடையாக அளிக்கப்பட்டது. பெருவாழ்வுதந்த பெருமாள் சதுர்வேதிமங்கலத்து மகாசபையாரும், ஊரில் சிலரும் சேர்ந்து பெருமாள் திருமேனியைக் கல்லியாண திருமேனியாக எழுந்தருளுவித்தனர். சுத்தவல்லிச் சதுர்வேதிமங்கலத்து கிராம காரியம் செய்கின்ற கூட்டப்பெருமக்கள் அக்கோயிலிலுள்ள உலகுடையப்பெருமாளை "கல்யாணதிருமேனி"யாக எழுந்தருளி விக்கவும், பிள்ளை இருங்கோளார் என்பவர் வெற்றிக்காகவும் பிள்ளைபுரோசைக்குடையார் இக்கோயிலில் எழுந்தருளுவித்த காமக் கோட்டமுடைய நாச்சியாருக்கு திருவமுதுப்படிக்காகவும் தானம் அளிக்கப்பட்டது. கோ மடம் ஒன்று இவ்வூரில் சோழர் காலத்தில் இருந்துள்ளது.

விக்கிரமசோழபுரத்து நகரத்தார்கள் இவ்வூர் கோயிலில் கிழக்கு திருச்சுற்று மாளிகையில் உள்ள சூரிய தேவர்க்கு வழிபாட்டுக் காக 'கொம்மடிச் செய்" என்ற பெயருடைய இருமாவரை நிலத்தை இறையிலியாக அளித்துள்ளனர். மூன்றாம் இராசேந் திரனின் கல்வெட்டு, கோயில் தேவதான குடிமக்கள் தாங்கள் உழுகின்ற நிலத்தில் காணி வீதம் இன்னாயனார் கோயில் திருப் பணிக்கு கொடுக்கவேண்டும் என்றும் அவ்வாறு கொடாது போனால் கட்டாயப்படுத்திப் பெற்றுக் கொள்ளுமாறும் இசைந்து எழுதிக் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது. இக்கோயிலிலுள்ள ஆதி சண்டேசுவர தேவகன்மிகளுக்கு இக்கோயில் தேவரடியார்

பெண்டுகள் 14 பேர் விளக்கெரிக்க காசு தானமாகக் கொடுத்துள்ளார்கள். கேரள குலாசனிச் சதுர்வேதி மங்கலத்து மகா சபையார் திருவுசாத்தானமுடைய நாயனார்கோயிலில் தெற்குத் திருநடை மாளிகையில் எழுந்தருளியுள்ள சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி ஆகியோர்க்கு அமுதுபடிக்கு உடலாக இறையிலியாக நிலம் அளித்துள்ளனர். இக்கோயில் திருப்பள்ளித் தாமத்திற்கும், திருநந்தவனம் செய்வதற்கும், வேலி அடைக்கவும், திருநந்தவனம் செய்கிறவர்கள் சீவனத்துக்காகவும் இட்டநிலமும் அந்நிலத்திலிருந்து வருகிற நெல், அதற்கு வட்டியாக கிடைக்கிற நெல் ஆகியவை கல்வெட்டில் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வூரில் உள்ள ஜனநாதன் பாதை வழியாகச் செல்லும் நெல், அரிசி ஏற்றப் பட்ட ஒவ்வொரு வண்டியும் வரிகட்டுதல் வேண்டும் என்றும் அவ்வரி கோயிலுக்கு அளிக்கப்பட்டது என்றும் இக்கோயிலிலுள்ள சோழர் கல்வெட்டொன்று கூறுகிறது.

## மன்னார்குடி வட்டம்

இலட்சுமி நரசிம்மபுரம்

ஒவர்ச்சேரி

கீரங்குடி

கோட்டூர்

சித்தன்வாழூர்

தண்ணீர்க்குன்னம்

தளிக்கோட்டை

திருக்களர்

திருமக்கோட்டை

திருவெண்டுறை

பாமணி

பெரம்பூர்

பூதமங்கலம்

மகாதேவப்பட்டினம்

மன்னார்குடி

மூர்த்தியம்மாள்புரம்

## இலட்சுமி நரசிம்மபுரம்

இவ்வூர் கோட்டூர் அருகில் உள்ளது. தஞ்சை மராட்டிய மன்னர் காலத்தில் "கோட்டூர் மாகாணம்" என்ற பிரிவிற்குட் பட்டிருந்தது. தஞ்சை மராட்டிய மன்னன் ஏகோசியின் மூன்றாவது மகனாகிய துக்கோசியாகிய துளசாவால், மாதவா சாரியர், ஐவாசாரியர், சீனிவாசாசாரியர் ஆகிய மூன்று வேதம் வல்ல அந்தணர்களுக்கு சுரோத்திரியமாக வழங்கப்பட்டது. ஐந்து வேலி நிலப்பரப்புடையதாக இருந்தது. எனவே, இவ்வூர் தஞ்சை மராட்டிய மன்னர் காலத்திலிருந்து இருந்து வருகிறது எனலாம்.

## ஓவர்ச்சேரி

தஞ்சை மராட்டிய மன்னர் முதலாம் சரபோசி ஆட்சிக் காலத்தில் 15-7-1722 அன்று, கோட்டூர் கொழுந்தீரசுவர சுவாமிக்கு அபிடேகக் கட்டளையாக பெருமாத்தேவர், திருமலைத்தேவர் என்னும் இருவர் உவரிச்சேரி என்னும் இடத்தில் முக்கால்வேலி நிலத்தைக் கொடையாக அளித்த செய்தி கோட்டூர் கொழுந்தீசு வரர் கோயிலில் உள்ள கல்வெட்டொன்றில் காணப்படுகிறது. இந்த உவரிச்சேரி என்ற பெயரே இன்று ஓவர்ச்சேரி என மருவி வழங்கி வருகிறதெனலாம்.

## கீரங்குடி

இவ்வூர், திருக்காரவாசலிலுள்ள முதலாம் இராசராசனின் கல்வெட்டில் வலிவலக்கூற்றத்தில் இருந்ததாகக் குறிக்கப்படும் (ஏ.ஆர்.இ. 453/1908) கீரங்குடியாக இருக்கலாம். எனவே, ஏறத்தாழ ஆயிரம் ஆண்டு காலமாக இவ்வூர் இதே பெயரில் வழங்கி வருகிறதெனலாம்.

## கோட்டூர்

திருத்துறைப்பூண்டிக்கும், மன்னார்குடிக்கும் நடுவில் அமைந் துள்ள இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியிருக் கிறார். எனவே. கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர் சிறப்புமிக்க ஊராகத் திகழ்ந்திருப்பது தெளிவாகிறது. திருஞான சம்பந்தரின் பதிகத்தில் இவ்வூர் இறைவன் "கோட்டூர் நற்கொழுந்தே" என்றழைக்கப்படுகிறார். இன்றும் இவ்வூர் இறைவனுக்குக் கொழுந்தீசர் என்றும் கொழுந்துநாதர் என்றும்

பெயர் வழங்குகிறது. எனவே கோட்டூர் என்ற இவ்வூர்ப் பெயரும் கொழுந்து என்ற இவ்வூர் இறைவனின் பெயரும் ஏறத்தாழ 1300 ஆண்டுகாலப் பழமைமிக்கவை என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. இவ்வூர் 1300 ஆண்டுகளுக்கு முன்னர் எழிலோடும். வளத்தோடும், மாடமாளிகைகள் நிறைந்த ஊராகவும் இருந் துள்ளதைத் தேவாரத் தொடர்கள் தெளிவுபடுத்துகின்றன.

பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் நென்மலி நாடு (இன்று இப்பகுதியில் நெம்மேலி என்றழைக்கப்படும் ஊரை மையமாகக் கொண்டமைக்கப்பட்டிருந்தது) என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஊராக இருந்திருக்கிறது. முதலாம் இராச ராசசோழன் தஞ்சைப் பெருங்கோயில் திருவிளக்குகளுக்கு நெய் யூற்றி வருவதற்காகப் பற்பல ஊர்களைச் சேர்ந்த இடையர் களிடம் கால்நடைகளை ஒப்படைத்து அவற்றின் மூலம் நாள் தோறும் தஞ்சைப்பெருங்கோயிலுக்கு நெய்யூற்றி வரச் செய்தான், அங்ஙனம் அவன் கால்நடைகளை வழங்கியபோது. முடிச்சோழ நாட்டு சிற்றினவாழ் (தற்போது மன்னார்குடி வட்டத்தில் உள்ள சித்தன்வாளூர்) ஊரைச்சேர்ந்த இடையன் புஞ்சைசாத்தனிடம் 48 பசுக்களை ஒப்படைத்தான். இவனது தலைமைப் பொறுப்பில் இவன் மகன் சாத்தன் ராமன். சாத்தன்ஏறன், கோட்டூர் இடையன், அரங்கன் மனத்தான், ஆலூர்க்கூற்றத்துப் பட்டம் என்ற ஊரைச் சேர்ந்த இடையன் விளவன். கலியன் ஆகியோர் தஞ்சைப் பெருங்கோயில் விளக்குக்காக நாள் ஒன்றுக்கு உழக்கு நெய் அளந்து வந்திருக்கிறார்கள்.

இவ்வூரிலுள்ள கல்வெட்டுகளில் முதலாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டில் பூதிவிண்ணகர் ஆழ்வார் என்ற கோட்டூர் பெருமாள் கோயில் குறிப்பிடப்படுகிறது.

**சித்தன்வாழூர்**

பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூர் நித்தவினோத வளநாட்டில் முடிச்சோழ நாட்டிற்குட்பட்ட ஊராக இருந் திருக்கிறது. சோழப் பெருவேந்தர் காலத்தில் ஊரின் பெயர் "சிற்றினவாழ்" என்று வழங்கியிருக்கிறது. இப்பெயரே காலப் போக்கில் "சித்தன் வாழூர்" என மருவியிருக்கிறது. இவ்வூரைச் சேர்ந்த இடையர்கள், புஞ்சை சாத்தன் இவன் மகன் சாத்தன்

இராமன், சாத்தன் ஏறன எனப்பார் சோழபம்பெருவேந்தன் முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில், தஞ்சைப் பெருங் கோயிலின் திருவிளக்குக்கு நெய்யளந்த செய்தி தஞ்சைப் பெருங் கோயில் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.

**தண்ணீர் குன்னம்**

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் மதனமஞ்சரிச் சதுர்வேதிமங்கலம் என அழைக்கப்பட்டிருக்கிறது. இவ்வூர் நென்மலி நாட்டுப் பிரிவுக்குட்பட்டிருந்திருக்கிறது. இவ்வூர் இறை வனுக்கு உருத்திரகோடீசுவரர் என்ற பெயர் வழங்கி வந்திருக்கிறது தற்போது இறைவனுக்கு ஜலகிரிநாதர் என்ற பெயர் வழங்கி வருகிறது. இக்கோயிலிலுள்ள அம்மன் சன்னதி கி.பி. 1839-இல் கேசவப்பெருமாள் என்பவரால் கட்டப்பட்டது என்பதை இங்குள்ள கல்வெட்டிலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது.

**தளிக்கோட்டை**

சோழநாட்டிற்கும் சீனாவிற்கும் இடையிலான வணிக உறவுகள் சீன அரச மரபினர்களான சோங் (1127-1279) யுவான், (1271-1368) ஆகியோர் காலங்களில் சீரோடு நடைபெற்றன. இதை உறுதிப்படுத்தும் வகையில் பட்டுக்கோட்டை, மன்னார்குடி வட்டங்களில் 2165 சீன நாணயங்கள் கிடைத்துள்ளன. இக் காசுகள் புதையலாகக் கிடைத்த இடங்களில் தளிக்கோட்டையும் ஒன்று.

**திருக்களர்**

கி. பி. ஏழாம் நூற்றாண்டிலேயே திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற திருத்தலம் இதுவாகும். பிற்காலச் சோழர் காலத்தில் வாழ்ந்த சேக்கிழாரும் இதன் வளத்தை தனது பெரிய புராணத்தில் சிறப்பித்துக் கூறுகின்றார்.

"கோங்குலா மலர்ச்சோலை வண்டினங்
கிண்டி மாமதுவண்டிசை செயத்
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களர்"

என்று இதன் இயற்கை வளத்தை ஞானசம்பந்தர் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இவ்வூரிலுள்ள சோழர் கல்வெட்டுகளில் "வெங்குருகால திருக்களர்" என்று இவ்வூர் குறிப்பிடப்படுகிறது. இது அருமொழிதேவ வளநாட்டில் அமைந்த புறங்கரம்பை நாட்டுப் பிரிவில் இருந்திருக்கிறது. தலபுராணம் இவ்வூரைப் பாரிஜாதவனம் என்றும் இவ்வூர் இறைவனை பாரிஜாதவனேசுவரர் என்றும் குறிப்பிடுகின்றது. களர் முல்லைநாதேசுவரர் என்று தமிழில் அழைக்கப்பட்டுள்ளார்.

இவ்வூரில் சோழர் காலத்தினைச் சார்ந்த செப்பேடுகள் கிடைத்துள்ளன. இவை இவ்வூர் கோயிலுக்கு நிலங்கள், பாத்திரங்கள், தங்க வெள்ளி ஆபரணங்கள் அளித்ததைத் தெரிவிக்கின்றன. கி.பி. 1902-ல் மத்திய தொல்லியல் துறையினரால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் பிற்காலத் திருப்பணியின் போது இடம்மாறிவிட்டன. இவை துண்டுக் கல்வெட்டுகளாகத் தற்போது காட்சியளிக்கின்றன. முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசராசன், மூன்றாம் குலோத்துங்கன், சடையவர்மன் ஸ்ரீவல்லப பாண்டியன், மாறவர்மன் குலசேகர பாண்டியன், விசய நகரவேந்தர் விருப்பண்ணர் ஆகியோர் கல்வெட்டுகள் பாரிஜாதேசுவரர் கோயிலில் படியெடுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் கலைச் சிறப்பு வாய்ந்த பல அரிய செப்புத்திருமேனிகள் உள்ளன.

### திருமக்கோட்டை

மன்னார்குடியிலிருந்தும் திருத்துறைப்பூண்டியிலிருந்தும் முத்துப்பேட்டை செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது. இவ்வூரிலுள்ள சோழர் கல்வெட்டுகளில் இராசேந்திர சோழவளநாட்டு தென் கரம்பை நாட்டுப் பிரமதேயம் குலோத்துங்கச் சோழச் சதுர்வேதி மங்கலத்தினைச் சார்ந்த சிற்றூராக இது விளங்கியிருக்கிறது. மூன்றாம் இராசராசனின் கல்வெட்டு இவ்வூரை "திருமையான மும்முடிச்சோழநல்லூர்" என்று குறிப்பிடுகிறது. விசயநகரவேந்தர் காலத்தில் இது திருமேற்கோட்டை என்று அழைக்கப்பட்டுள்ளது. இதுவே இன்று திருமக்கோட்டை என்று வழங்குகிறது.

இவ்வூரில் ஞானபுரீசுவரர் கோயில் என்ற கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் முதல் இராசராசன் காலத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில் ஒன்று உள்ளது. இதில் முதல் இராசராசசோழன்,

முதலாம் குலோத்துங்கசோழன், மூன்றாம் இராசராசன், மாறவாமன் புவனேகவீரன் குலசேகரபாண்டியன், அச்சுததேவராயர் ஆகியோரது கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகளில் இச்சிவன்கோயில் திருமெய்ஞானமுடையார் கோயில் என்று அழைக்கப்படுகிறது. இங்குள்ள கல்வெட்டுகள் இக்கோயிலுக்கு நிலக்கொடை மற்றும் நந்தாவிளக்கு எரிப்பதற்குப் பலர் கொடையளித்தமைப் பற்றித் தெரிவிக்கின்றன. இங்குள்ள அம்மன் கோயிலைக் கட்டியவன் மல்லுராவுத்தன் புத்திரன் திம்மப்பன் என்று கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

இவ்வூரில் இரண்டு செப்பேடுகள் கிடைத்துள்ளன. கி.பி. 1549-ம் ஆண்டைச் சார்ந்த செப்பேடு திருமெய்க்குஞான சுவாமிக்காக ஆவிக்கோட்டை, கழிஞ்சாங்கோட்டை, உலையக்கொன்றல், கணியாகுறிச்சி, சொக்கநாதநல்லூர் என்ற ஐந்து ஊர்கள் தானமாக அளிக்கப்பட்டதைக் கூறுகிறது. இரண்டாவது செப்பேடு இச்சுவாமிக்கு உச்சிகட்டளைக்கும் கயிலாசவாகன மண்டகப்படிக்கும் தானம் அளித்ததைத் தெரிவிக்கிறது.

இவ்வூர் பகுதியில் கிடந்தகோலத்தில் விளங்கும் ரெங்கனாதப் பெருமாள் கோயில் என்றழைக்கப்படும் கோயில் ஒன்றும் உள்ளது. இக்கோயில் பழம்பெருமை படைத்தது. இக்கோயிலில் ஏழு கல்வெட்டுகள் உள்ளன.

### திருவெண்டுறை

சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களுள் 112-ஆவது தலமான திருவெண்டுறை, மன்னார்குடி வடபாதிமங்கலம் சாலையில் மன்னார்குடியிலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. பிரம்மேசுவரர், பிரமபுரீசர், மதுவனேசர் என்றழைக்கப்படும் திருவெண்டுறைநாதர் திருக்கோயிலைத் திருஞானசம்பந்தர் பதிகம் பாடிப் போற்றியிருப்பதால், இவ்வாலயம் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே சிறப்புடன் விளங்கி வருவதை அறியலாம். ‘‘வேலன் கண்ணி’’ என ஞானசம்பந்தர் இவ்வூர் இறைவியைக் குறிப்பிட்டுப் பாடியிருப்பது போலவே, இன்றளவும் இறைவியின் பெயர் வேனெடுங்கண்ணி (வடமொழியில் சத்தியாயதாட்சி, பிரகதாம்பாள்) என்றழைக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

### பாமணி

இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியிருப்ப தால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள சிவாலயமும் இருந்து வருவது தெளிவாகிறது. சோழநாட்டுக் காவிரித் தென்கரையில் 104-வது தலமாகப் போற்றப்படும் இத்தலம் மன்னார்குடி புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே இரண்டு கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பாமணி, பாம்பணி, சர்ப்பபுரம் எனப் போற்றப்படும் இவ்வூரிலுள்ள சிவாலயம் பாதாளீச்சரம் என்ற பெயரில் வழங்கி வருகிறது.

''பங்கயம் நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாள்''
''பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாள்''

என ஞானசம்பந்தர் இவ்வூரின் வளத்தைப் பாடியுள்ளார். பிற்காலச் சோழர் கல்வெட்டுகளிலும் பாண்டியர் கல்வெட்டு களிலும் இவ்வூர் சுத்தவல்லி வளநாட்டில் பாம்புணிக்கூற்றத்தி லிருந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளதால், இவ்வூரின் பெயரில் ஒரு கூற்றம் இருந்தமை புலனாகிறது. ஊரின் பெயர் ''திருப்பாம்புணி'' என்றும், சிவாலயம் திரு''பாதளீச்சரம்'' என்றும் அழைக்கப் பட்டிருக்கிறது. ''பாம்புணி'' என்று சோழர் காலத்தில் வழங்கி வந்த இவ்வூர்ப் பெயர் காலப்போக்கில் மருவி இன்று ''பாமணி'' என்ற பெயரில் வழங்கி வருகிறது.

திருப்பாதாளீச்சரம் இன்றைய தினம் நாகநாதசுவாமி திருக் கோயில் என்ற பெயரில் வழங்கி வருகிறது. நாட்டுக்கோட்டை நகரத்தாருள் ஒக்கூர் திருஇலட்சுமணஞ்செட்டியார் இக்கோயிலைத் திருப்பணி செய்துள்ளார். விழுப்பரையர் மகள் கங்காண்டார் என்பவர் இக்கோயிலில் தாம் எழுந்தருளுவித்த இறைவன் திருமேனியின் வழிபாட்டிற்காக நிலக்கொடை வழங்கியுள்ள செய்தி சடையவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டில் காணப் படுகிறது. இங்குள்ள இரண்டு கல்வெட்டுகளில் ''ஸ்ரீபூதி விண்ணகராழ்வார்'' என்ற பெருமாள் கோயிலில் விளக்கெரிக்க 96 ஆடுகள் வழங்கப்பட்ட செய்தியும், தினமும் ஒருவருக்கு உணவளிக்க கொடை வழங்கப்பட்டிருந்த செய்தியும் காணப் படுவதால் முதலாம் இராசராசசோழனின் ஆட்சிக்காலத்தில் ''பூதி

விண்ணகராழ்வார்'' என்ற பெயரில் இப்பகுதியில் பெருமாள் கோயில் ஒன்றிருந்தமை புலப்படுகிறது.

## பெரம்பூர் (பெருமூர்)

இவ்வூர் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் சிறப்புடன் விளங்கியிருக்கிறது. இவ்வூரில் இன்று ஐம்புநாதசுவாமி என்றழைக்கப்படும் இறைவன், மூன்றாம் குலோத்துங்க சோழன்து ஆட்சிக்காலத்தில் திருவானைக்காவுடையார் என்றழைக்கப் பட்டதை இவ்வூர்ச் சிவாலயத்திலுள்ள கல்வெட்டுகள் புலப் படுத்துகின்றன. இக்கோயிலை ஏற்படுத்தியவன் இவ்வூரைச் சேர்ந்த திருவானைக்காவுடையான், மலையப்பியராயன் என்பவ ராவார். எனவே இக்கோயிலை ஏற்படுத்தியவரின் பெயரிலேயே இக்கோயிலுக்கு இப்பெயரேற்பட்டது எனக் கொள்ளலாம். திருக் கதவுடையார் ஸ்ரீபாகுதேவர் என்பவர் இக்கோயிலின் வழிபாட்டிற் காகத் தன் மனைவி சீதனமாகக் கொண்டு வந்த நிலத்தினைக் கோயிலுக்குக் கொடையாக அளித்திருக்கிறார். மூன்றாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக்காலத்தில் சீர்காழியிலுள்ள திருத்தோணிபுரமுடைய நாயனார்க்கு, தங்கள் பர்த்தாக்களுக்கும், தங்களுக்கும் தங்கள் வம்சத்திற்கும் நன்றாக வேண்டி எதிரிலாப் பெருமாள், உமையாழ்வி என்ற இருமகளிர் நிலக்கொடை அளித் துள்ளனர். இவர்களுள் உமையாழ்வி என்பவர் எதிரிலாப் பெருமாளின் மகள் என்றும், வெண்ணிக்கூற்றத்துப் பெருமூருடை யான் நாயன். திருவேகம்பமுடையானின் மனைவி என்றும் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

இவ்வூரிலுள்ள சிவாலயத்தை ஏற்படுத்திய திருவானைக் காவுடையானாகிய மலையப்பியராயன் என்பவர் களத்தூர் கிழவனான தில்லையுள்வில்லி பெரியாழ்வாரான குலோத்துங்க சோழ வாணகோவரையன் என்பவரின் மகள் ஆளவந்தான் என்பவரை மணந்தவர், இந்த ஆளவந்தான் தன்னுடைய தந்தை யிடமிருந்து ஏழுவேலி நிலத்தினைச் சீதனமாக பெற்றுவந்தார். இந்த நிலம் பாம்புணிக் கூற்றத்துப் பிழிசூரில் (தற்போது தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டிப் பகுதியிலுள்ள ரிசி யூரில்) இருந்தது. இதில் 4 வேலி நிலத்தினைப் பெருமூரி லிருக்கும் திருவானைக்காவுடையாருக்கு பூசைக்காக மலையப்

பியராயன் தந்தார். எஞ்சியதில் இரண்டு வேலிக்கும் சற்று கூடுதலான நிலத்தினைத் தன்னுடைய மனைவியின் நினைவாக அந்தணர்களுக்கு சிரார்த்த தானமாக வழங்கினார். தன்னுடைய மாமியார் பிழிசூரில் (ரிசியூரில்) உள்ள திருவகத்தீசுவரமுடையார் கோயிலில் எழுந்தருளுவித்த பெரிய நாயனாரின் பூசைக்காக அரைவேலி நிலத்தினை அளித்தார். இவை போக எஞ்சிய மூன்று மாவுக்கும் சற்றுக் கூடுதலான நிலம், இவரது மாமனார் வாணகோவரையரால் எழுந்தருளுவிக்கப்பட்ட சரசுவதியின் பூசைக்காக வழங்கப்பட்டிருக்கிறது. மூன்றாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில், பெருமுருடையான் அரையன் வீர சோழனான தென்னவன் விழுப்பரையன் என்பவரும் சில கல்வெட்டு களில் குறிக்கப்படுகிறார்.

தேவார வைப்புத் தலங்களுள் ஒன்றாகப் "பெருமூர்" என்ற ஊர் குறிப்பிடப்படுகிறது. இவ்வூரின் பெயர் பிற்காலச்சோழர் ஆட்சிக்காலத்தில் பெருமூர் என்றே அழைக்கப்பட்டிருப்பதால், தேவார காலத்திலும் பெருமூர் என்றே அழைக்கப்பட்டிருக்கலாம், எனக் கருத இடமுள்ளது. இக்கருத்து ஏற்றுக்கொள்ளப்படும் பட்சத்தில் இவ்வூர் ஏழாம் நூற்றாண்டிலிருந்தே சிறப்புடன் விளங்கிவருகிறது எனக் கொள்ளலாம்.

### பூதமங்கலம்

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் நித்தவினோத வளநாட்டுப் பிரிவிற்குட்பட்ட வெண்ணிக்கூற்றத்தில் இருந் திருக்கிறது. ஊரின் பெயர் ஆயிரம் ஆண்டுகளாகப் பூதமங்கலம் என்றே மாற்றமின்றி வழங்கி வருகிறது. முதலாம் இராசராசன் தஞ்சைப் பெருங்கோயிலுக்குக் கொடுத்த ஊர்களுள் இதுவும் ஒன்று.

### மகாதேவப்பட்டினம்

மன்னார்குடிக்குத் தென்மேற்கே இவ்வூர் உள்ளது. இவ்வூரில் ஐந்து வேலி நிலப்பரப்பில் கோட்டை ஒன்று உள்ளது. இக்கோட்டைக்குள் பெரிய அரண்மனை, சிறிய அரண்மனை எனப்படும் பகுதிகள் முற்றிலும் அழிந்த நிலையில்

உள்ளன. இக்கோட்டையும், அரண்மனையும் தஞ்சை மராட்டிய மன்னன் துக்கோசியாகிய முதலாம் துளசாவால் (1728-1736) கட்டப்பட்டவையாகும். இக்கோட்டைக்குள் ஆதிவராகசுவாமி கோயில் ஒன்றுள்ளது. இவ்வூரின் வடக்கே உள்ள சம்போ மகாதேவர் கோயிலால்தான் இவ்வூருக்கு மகாதேவபட்டணம் என்ற பெயரேற்பட்டிருக்கிறது. இவ்வூரில்தான் துக்கோசியால் "சிவகாமசுந்தரி பரிணயம்" என்ற தெலுங்கு நாடகநூல் எழுதப் பட்டது. சிவபெருமான் பார்வதியை மணந்த வரலாற்றைக் கூறும் இந்நாடகம் ஆதிவராகசுவாமி கோயில் திருவிழாவில் நடிக்கப் பட்டதாகக் கருதப்படுகிறது. இவ்வூரில் தஞ்சை மராட்டிய மன்னராட்சிக் காலத்தில் சத்திரம் ஒன்றும் செயல்பட்டுள்ளது. இச்சத்திரம் உமாபாயிசாகேப் சத்திரம் என்றழைக்கப்பட்டுள்ளது.

தஞ்சை சரபோஜி மன்னர் தம்பியான துக்கோஜியுடன் ஆட்சி நடத்தி வந்தபோது இருவருக்குள் மனவேறுபாடு ஏற்பட, அதன் காரணமாக துக்கோசி தன் மூத்த சகோதரரிடமிருந்து ஆட்சிப் பரப்பில் ஒரு பகுதியைத் தனக்கெனப் பெற்று குடும்பத்தோடு மகாதேவபட்டணத்தில் இருந்து வந்ததாக போன்சே வம்ச சரித்திரம் கூறுகிறது. இங்குள்ள ஆதிவராகசுவாமி கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டு (கி.பி. 1728) இறைவனின் பல பெயர் களையும் கூறி வழிபாட்டுச் செய்தியையும் வளம் வேண்டும் வழிபாட்டையும் கூறுவதாக அமைந்துள்ளது.

### மன்னார்குடி

இவ்வூருக்குச் செண்பகாரண்ய சேத்திரம், வாசுதேவபுரி, தட்சிணதுவாரகா, வண்டுவராபதி, சுயம்புத்தலம், மன்னவர்குடி, ராஜமன்னார்குடி, மன்னை எனப் பல பெயர்களுண்டு. இவ்வூரி லுள்ள திருக்கோயில்களுள் இராசகோபாலசுவாமி திருக்கோயில், செயங்கொண்டநாதர் கோயில், அருள்மிகு அண்ணாமலைநாதர் கோயில் ஆகியவை சிறப்புடையவை.

சோழப் பெருவேந்தர்களில் முதலாம் இராசாதிராசன் காலத்தில் இவ்வூர் தனிச்சிறப்புடன் வளர்ந்திருக்கிறது. பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூர் சுத்தவல்லி வளநாட்டுத் 'தனியூர் இராஜாதிராஜச்சதுர்வேதி மங்கலம்' என்ற பெயரில்

குறிப்பிடப்பட்டுள்ளது. இராசகோபாலசுவாமி திருக்கோயில் இராசாதிராச விண்ணகரம் என்ற பெயரிலும், செயங்கொண்ட நாதர் கோயில் முதலாம் இராசாதிராசனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்றான ஜெயங்கொண்ட சோழன் என்ற சிறப்புப் பெயரால் 'ஜெயங்கொண்ட சோழீசுவரம்' என்ற பெயரிலும், கைலாசநாதர் கோயில் 'ஸ்ரீ கயிலாசமுடையாரான ராஜாதிராஜீசுவரமுடையார்'' என்ற பெயரிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. முதலாம் இராசாதி ராசன் காலத்தில் இவ்வூர்த் தனிசிறப்புடன் விளங்கியுள்ளது. மேலும் இவ்வூர்ப் பிடாகையான சோழநல்லூரில் இராஜாதி ராஜவதி என்ற வாய்க்காலும், ஜெயங்கொண்ட சோழ வாய்க் காலும் இருந்திருக்கின்றன.

செயங்கொண்டநாதர் கோயிலுக்குப் போசள மன்னன் வீரராமநாதன் தம் பெயரில் சந்தி ஏற்படுத்தி, சிறப்பு வழிபாட்டுக்கும், திருப்பணிக்குமாக, தனது மூன்றாவது ஆட்சி ஆண்டு முதல் தேவதான இறையிலியாக நிலம் வழங்கியிருக் கிறார். இராசாதிராசச் சருப்பேதிமங்கலம், முடித்தலைகொண்ட சோழச் சருப்பேதிமங்கலம், பிரமதேயம், ஆலத்தூர் ஆகிய இடங் களில் இக்கோயிலுக்கு முந்நூறு மாவுக்கும் கூடுதலான நிலங்கள் இருந்துள்ளன. அவற்றிலிருந்து ஆயிரத்து நூற்று முப்பத்திரண்டு கலம் நெல் இக்கோயிலுக்கு கிடைத்து வந்திருக் கிறது. இராசாதிராசச் சருப்பேதிமங்கலம், திருஞானசம்பந்தச் சருப்பேதி மங்கலம், திருஞானசம்பந்தன் மடப்புறம் ஆகிய பகுதி களிலிருந்த நூற்றைம்பத்தொன்பது மா முக்காணி இறையிலி நிலத்திலிருந்து பெறப்பட்ட தண்டு வர்க்கங்கள் அனைத்தும் இக்கோயிலின் சிறப்பு வழிபாட்டிற்கு வழங்கப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் அத்தியயனம் பண்ணும் பட்டர்கள் ஆறு பேருக்கு இவ்வூரின் பிடாகையான காறைகற்பக நல்லூரில், இறைவனின் திருநாமத்துக் காணி நிலத்திலிருந்து 12 மா நிலம் ஒதுக்கீடு செய்யப்பட்டதை இக்கோயிலில் உள்ள பராக்கிரமபாண்டியன் கல்வெட்டொன்று புலப்படுத்துகிறது. செயங்கொண்ட சோழீசுவர முடையார் கோயில் திருமுன் மண்டபம் ''விக்கிரம பாண்டியன் திருமண்டபம்'' என்ற பெயர் பெற்றிருந்திருக்கிறது. விக்கிரம பாண்டியன், செயங்கொண்டசோழீசுவரர் கோயிலில் தன் பெயரால் சந்தி ஏற்படுத்தி தன் பிறந்த நட்சத்திர நாளை இறைவன் தீர்த்தமாடும் நாளாகக் கொண்டு விழா ஏற்படுத்தி,

அமுதுபடி, சாத்துப்படி உள்ளிட்ட செலவினங்களுக்காக ஊளத்தா மங்கலத்திலிருந்து வந்த நிலத்தின் வரி வருமானத்தை வழங்கி யிருக்கிறான். விக்கிரமபாண்டியன் காலத்தில் மன்னார்குடியில் வணிகக் குழுவினர் பாதுகாப்பாகத் தங்கிச் செயல்பட்ட சாரிகைக் கோட்டை இருந்ததைப் பாண்டியர் கல்வெட்டுகள் தெளிவு படுத்துகின்றன. இவர்கள் சாரிகைக் கோட்டையில் தங்கியிருந்த இடம் "புவனேகவீரன் மடிகை" என்றும் "விக்கிரமபாண்டியன் மடிகை" என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. வணிகக் குழுவினரான "பதினெண் விஷயம்" என்ற குழுவினரும், நகரத்தாரும் செயங் கொண்டநாதர் கோயில் திருப்பணிக்குப் பெரிதும் பொருள் சேர்த்து உதவியுள்ளனர். சாரிகைக்கோட்டைக்குள் புகுந்தோ அல்லது புகாமலோ செல்லும் பாக்குப் பொதிகள் ஒவ்வொன்றிற்கும் ஒரு உழக்குப் பாக்கும், மிளகுப் பொதி ஒன்றுக்கு மிளகு உழக்கும், துணிக்கட்டு ஒன்றுக்கு மாகாணி பணமும் வசூலிக்கப் பட்டு அவை இறைவனுக்குக் கறியமுது படைக்கவும், திருப் பணிக்கும் என செலவிடப்பட்டமையை இக்கோயில் முன்மண்டப வாயில் நிலையிலுள்ள பாண்டியர் கல்வெட்டுகள் புலப்படுத்து கின்றன.

தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் காலத்திய (11-5-1757) செப்பேடு "இராசராசவளனாடு ராசேந்திரசோழ வளனாடு, பொய்யூர்க் கூற்றத்துப் பாப்பாகுடினாடு, செறுநல்லிக்கோட்டை நென்மேலி வாடியிலிருக்கும் நல்லவன் விசையதேவரவர்கள் குமாரர் ராமலிங்க விசையா தேவரவர்கள் பாப்பானாட்டவர் களுக்குக் காணியாக இருக்கிற செயங்கொண்டனாத சுவாமி" என்று குறிப்பிடுகிறது. செயங்கொண்டநாதர் கோயிலில் பாப்பா நாடு சமீன்தார் ஒருவரின் சிற்பம் வழிபாட்டிலிருந்து வருவதும் ஈண்டு கவனத்திற்குரியது. இராமலிங்க விசையாத்தேவர் அவர்கள் செயங்கொண்டநாத சுவாமியின் அர்த்தசாம பூசைக்காக 46 பொன் இராசகோபாலச் சக்கரத்தை மூலப்பொருளாக வழங்கி யிருக்கிறார். பிரதாபசிங் காலத்திய மற்றொரு செப்பேடு (12-5-1758) பாப்பாக்குடி நாட்டில் (வெண்ணாற்றுக்கு மேற்கே உள்ள) மேல்கரை (வெண்ணாற்றுக் கிழக்கே உள்ள) கீழ்கரையி லிருக்கும் பதினாறு கரைக்குள்பட்ட பேர்கள் சகலரும் சேர்ந்து செயங்கொண்டநாதரின் உச்சிக்கால பூசைக்காக 45 பொன்

இராசகோபாலச் சக்கரம் அளித்தமையைக் குறிக்கிறது. பிரதாபசிங் காலத்திய பிறிதொரு செப்பேடு (26-6-1758) செயங்கொண்டநாத சுவாமிக்குக் காலைச் சந்திக்கும், சுக்கிரவாரக் கட்டளைக்கும், சிங்கவனம் சமீனைச் சேர்ந்த ஸ்ரீ சவ்வாயி விசைய ரெகுநாத வாளோசி மெய்க்கன் கோபாலர் அவர்கள் கொடையளித்திருந்த விபரத்தைத் தெரியப்படுத்துகிறது. செயங்கொண்டநாதர் காலைச் சந்திக்கு நாள் ஒன்றுக்கு இரண்டு பணம் வீதம் ஆண்டொன்றுக்கு 720 பணம் என்ற கணக்கில் ஆண்டொன்றுக்கு 72 பொன் இராசகோபாலச் சக்கரம் வழங்கப்பட்டிருக்கிறது. சுக்கிரவாரக் கட்டளைக்கு மாதம் ஒன்றுக்கு பொன் 1, பணம் 6, ஆக வருடம் ஒன்றுக்கு 19 பொன் இரண்டு பணம் வழங்கப் பட்டிருக்கிறது. 31-1-1760க்குரிய பிரதாபசிங்கின் மற்றுமொரு செப்பேடு சிங்கவனம் சமீன்தார் சவாயி விசையரெகுநாத மெய்க்கன் கோபாலர் செயங்கொண்டநாதருக்கு சாயரட்சைக் (மாலை வழிபாட்டிற்)காக ஆண்டொன்றுக்கு 40 பொன் வழங்கிய செய்தியைப் புலப்படுத்துகிறது.

கைலாசநாதர் கோயிலில் விரத(ம்) முடித்த பெருமாள் என்ற பெயரில் திருமேனி இருந்ததையும், இத்திருமேனியை எழுந்தருளப் பண்ணுவதற்கு இறையிலியாக நிலம் வழங்கப்பட்டிருந்தமையையும் சுந்தரபாண்டியன் (கி.பி. 1226) கல்வெட்டு தெரிவிக்கின்றது. கைலாசநாதர் கோயிலில், இளான்குடி உடையான் நாராயண தேவனான பல்லவராயன் திருமண்டபம் என்ற பெயரில் நீராட்டு (ஸ்நபன)மண்டபம் ஒன்று ஏற்படுத்தப்பட்டமையை வீரபாண்டியன் கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ளமுடிகிறது. போசள மன்னன் வீரசோமேசுவரனின் மகாபிரதானிகளில் ஒருவரான சாத்தனுடையார் தேவன் திருவேகம்பமுடையான் கம்பய தண்டநாயக்கன் என்ற படைத்தளபதி, கைலாசநாதர் கோயிலிலுள்ள இராசராசேச்சுவர முடையார் கோயிலில் ஒரு அம்மன் சன்னதி ஏற்படுத்தினார். இவ்வம்மனுக்கு (காமக்கோட்டத்துப் பெரிய நாச்சியாருக்கு)க் கிராம சபையார் 10 மா நிலத்தினை வரி நீக்கி, வழங்கியமையை இக்கோயில் வடபுறச் சுவரிலுள்ள போசளர் கல்வெட்டால் அறிய முடிகிறது. பாண்டி நாட்டுத் திருப்புல்லாணியைச் சேர்ந்த ஓவாத பாண்டி தேவரடிகள் என்பவர், கைலாசநாதர் கோயில் இறைவன், இறைவி வழிபாட்டுச் செலவிற்காக நிலம் வாங்கி வழங்கியுள்ள

செய்தி பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டொன்றில் (கி.பி. 1343) காணப்படுகிறது. இந்நிலத்தின் அளவு 2 மா விலை 60 பணம். இந்நிலத்தை விற்றவர் இராசாதிராசர் கோயிலிலிருந்த ஆவிக் கொன்றை நம்பிரான் பட்டன் என்பருடைய மனைவி செல்வப் பெண்ஞானி என்பவர். இந்த இராசாதிராசச்சேரி, மன்னார் குடியில், அன்றைய நாளில் பட்டர்கள் (அந்தணர்கள்) வாழ்ந்த ஒரு பகுதியாக இருக்கலாம். இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள நிலம் இருந்த பகுதி தில்லைநாயக நல்லூர். இதுவும் மன்னார் குடியின் அன்றைய உட்கிராமங்களில் ஒன்றாக இருந்திருக்கலாம். நிலத்தின் எல்லைகளாக இராசராச வதி, வீரநாராயண வாய்க்கால் சோழகுலமாணிக்க வதி, கேரளாந்தக வாய்க்கால் எனப் பல நீரோடு வாய்க்கால்களும், வடிகால்களும் சோழ மன்னர்களின் பெயரில் காணப்படுவதால், இப்பகுதி சோழர் காலத்தில் வளப்படுத்தப் பட்டுள்ளதெனலாம். கைலாசநாதர் கோயிலிலுள்ள ஆலால சுந்தரப்பெருமாளுக்குப் பூசைக்கும் திருப்பணிக்கும் வேண்டி ஊரிலுள்ள வரியில்லாத நிலத்திலிருந்து நிலம் வழங்கப்பட்டு, அதிலிருந்து 448 கலம் நெல் வருவாய் கிடைக்க வழிவகை செய்யப் பட்டிருந்தமையை 13-ஆம் நூற்றாண்டுக் கல்வொட்டொன்று கூறுகிறது.

இன்று மன்னார்குடியில் அண்ணாமலைநாதர் கோயில் அமைந் துள்ள பகுதியே கி.பி. 13-ஆம் நூற்றாண்டளவில் சாரிகைக் கோட்டை என்றழைக்கப்பட்டிருக்கிறது. இந்த சாரிகைக்கோட்டை இராசாதிராசச் சதுர்வேதிமங்கலத்தின் மேற்குப் பிடாகையாக அமைந்திருக்கிறது. இந்த சாரிகைக்கோட்டையில் வல்லங் கிழையான் திருவிடைமருதுடையான் என்பவருடைய தாயார் அம்மை பெரியாச்சி என்பவர், இராசேந்திரசோழ திருஅண்ணாமலை உடையார் என்னும் திருப்பெயரால் எழுந்தருளுவித்த திருக் கோயிலே இன்றளவும் அண்ணாமலைநாதர் கோயில் என்ற பெயரில் இருந்துவருகிறது. இத்திருக்கோயிலின் திருமுற்றம், திருமடை விளாகம், தீர்த்தக்குளம், திருநந்தவனம் ஆகியவை உள்ளடங்க இரண்டு வேலி நிலப்பரப்பில் அமைக்கப்பட்டதாக அண்ணாமலை நாதர் கோயில் கருவறை வடக்குச் சுவரிலுள்ள மூன்றாம் இராசேந்திரசோழனின் கல்வெட்டொன்று மதரிவிக்கின்றது. மேலும் அம்மை பெரியாச்சி, இறைவனின் பெயரால் திருநாமத்துக்

காணியாக 155 வேலி நிலம் விலைக்குப் பெற்று வழங்கியிருக்கிறார். நான்குதிசை பதினெண்விஷயத்தார் என்ற வணிகக் குழுவினர் சாரிகைக்கோட்டை புவனேகவீரன் மடிகையில் கூடி இக்கோயில் இறைவன் திருவண்ணாமலை உடையாருக்குத் திருப்பணிக்கும், கறியமுதுக்கும், தங்களது வணிகப்பண்டங்களான மிளகு முதலிய வற்றின் மீது தீர்வை விதித்துக் கொடுக்க முடிவெடுத்த செய்தி அண்ணாமலைநாதர் கோயில் முன்மண்ட தெற்குச் சுவரிலுள்ள வீரபாண்டியனின் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.

பதினாறு கோபுரங்களுடனும் ஏழு திருச்சுற்றுக்களுடனும் 4 அடி உயர மேடை மீது 54 அடி உயரத்தில் கம்பீரமாகக் காட்சி தரும் கருடத் தூணுடனும், மன்னார்குடியில் மிகச்சிறப்பாக விளங்கி வரும் திருக்கோயில் இராசகோபாலசுவாமி திருக் கோயிலாகும். மன்னார்குடிக் கல்வெட்டுகளில் இக்கோயிலின் பெயர் "இராசாதிராச விண்ணகர்" என்று குறிக்கப்படுவதால், இக்கோயில் சோழப் பெருவேந்தன் இராசாதிராசன் பெயரால் ஏற்படுத்தப்பட்டவொன்று என்பது தெளிவானது. என்றாலும், முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் இக்கோயிலின் இன்றைய கருவறைப் பகுதி திருப்பணி செய்து கட்டப்பட்டதைத் தொடர்ந்து இம்மன்னனின் பெயரால் இக்கோயிலுக்கு "குலோத்துங்கசோழ விண்ணகரம்" என்று பெயர் மாற்றி வழங்கப்பட்டதையும் கல்வெட்டுகளிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது. திருநீற்றுச்சோழனாகப் போற்றப்படும் இச்சைவப் பற்றாளன் "திருமாலகத்துப் பிரியாதென்றும், திருமகளிருந்தென வீரசிம்மாசனத்து உலகமுழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய" வனாக மெய்க்கீர்த்தியில் தன்னைக் காட்டிக் கொள்வதற்கேற்பவும், சப்தம விஷ்ணுவர்த்தனன், இராசநாராயணன் என்று முறையே அபிடேகப்பெயராலும், சிறப்புப் பெயராலும் அழைக்கப்படுவதற் கேற்பவும், தன் வைணவப் பற்றை இக்கோயில் கட்டுமானப் பணியால் தெளிவுபடுத்தியுள்ளான் எனலாம். முதற் குலோத்துங்க சோழன் காலத்திலிருந்தே இக்கோயில் இறைவனுக்கு "வண்டு வராபதி ஆழ்வார்" என்ற பெயர் வழங்கி வந்திருக்கிறது. வண்டுவராபதி ஆழ்வார் திருமேனியை உலா எழுந்தருளும்போது திருப்போனகம் அமுதுபடி, தளிகை ஆகியன வழங்கப்படுவதற்கும் வண்டுவராபதி ஆழ்வாரின் சிறுகாலை சந்திக்கும் முதலாம்

குலோத்துங்கன் காலத்தில் காசு கொள்ளா இறையிலியாக நிலம் வழங்கப்பட்டிருந்திருக்கிறது. முதலாம் குலோத்துங்கசோழனின் ஆட்சிக்காலத்தில் இப்பெருமாள் கோயிலின் முன்னால் மாமரம் ஒன்றிருந்திருக்கிறது. இம்மாமரத்தின் கீழே கி.பி. 1018-இல் இராசாதிராசச் சதுர்வேதிமங்கலத்து சபையார் கூடி காடு, நாடு, நகரம், கள்ளப்பற்று ஆகியவற்றில் 30,000 காசுகள் வசூலித்துக் கோயிலுக்குக் கொடுக்க முடிவு செய்தனர்.

மூன்றாம் இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில் மன்னார்குடியில் 'வண்டுவராபதி மாமுனிகள் மடம்' என்ற மடம் இருந்திருக்கிறது. இம்மடத்தின் தலைவர் வண்டுவராபதி மகா முனிகளும் அவரது சிஷ்யையான பெரிய பிராட்டி என்பவரும் தங்களது செல்வத்தை இட்டுக்கொண்டு இராசாதிராசச் சருப்பேதி மங்கலத்துப் பிடாகையான சோழநல்லூரில் மடப்புற இறையிலி யாய் நிலத்தினை அனுபவித்து வந்தனர். இம்மகாமுனிகள் தாம் இறந்த பிறகு அந்நிலத்தினை தன் சிஷ்யை மடத்தினை நிர்வகிக்கவும், மடத்தின் பணிப்பெண்களின் (வெள்ளாட்டி) உணவுக்கும் உடைக்கும் இந்நிலத்தினைப் பயன்படுத்தி வரவும் வழிவகை செய்திருந்தார்.

மூன்றாம் இராசேந்திரசோழனின் 27வது ஆட்சியாண்டில் (கி.பி. 1267) இராசகோபாலசுவாமி கோயில் இறைவனுக்கு ஈச்சோப்பி (விசிறி?) ஆழி, சங்கு, பகல்விளக்கு, சின்னம் (எக்காளம்) போன்ற பல திருப்பரிகலன்கள் செய்து கொடுக்கப் பட்டிருக்கின்றன.

முதலாம் சடையவர்வன் சுந்தரபாண்டியனது ஆட்சிக் காலத்தில், அம்மன்னனின் பிறந்த நட்சத்திரமான புரட்டாசி மாதம் மூலத்திலே இறைவன் திருநாள் எழுந்தருளித் தீர்த்தம் பிரசாதிக்கவும், திங்கள்தோறும் திங்கள் திருநாள் எழுந்தருளவும், சர்வ வாகனங்களிலும் ஏறியருளி எழுந்தருளவும், வழிவகை செய்யப்பட்டது.

அச்சுதப்ப நாயக்கர் ஆட்சிக் காலத்தில் இறைவனின் அமுது படிக்காக $2\frac{1}{2}$ வேலி நிலம் கொடையளிக்கப்பட்டிருக்கிறது. கி.பி. 1577-இல் வண்டுவராயர் கட்டளை ஒன்றினை ஏற்படுத்தி

வேட்கோவனூர் திருவாய்மொழிப்பிள்ளை மூலமாக, நாள் ஒன்றுக்கு 12 தளிகை அமுதினை இறைவனுக்குப் படைத்துப் பின்னர் அத்தளிகையினை ஆள் ஒருவருக்கு 3 தளிகை வீதம் 4 பேருக்கு அளித்துவரத் திருவிடையாட்டமாக நிலம் வழங்கியிருக்கிறார்.

இராசகோபாலசுவாமி திருக்கோயிலின் முன்புள்ள 54 அடி உயர கருடத்தூண் நாயக்க மன்னர்களின் கம்பீரமான கலைப் படைப்பாகும். இத்தூணின் உச்சியில் கருடாழ்வார் அஞ்சலித்த நிலையில் காணப்படுகிறார். இக்கருடத்தூணின் பீடத்தில் அச்சுதப்ப நாயக்கரும், மூர்த்தியம்மாவும் அஞ்சலி ஹஸ்தத்தில் இராசகோபாலசுவாமியை வழிபட்டு நிற்கும் காட்சி சிற்பமாக்கப் பட்டுள்ளது. மகாமண்டபத்தின் முன்னுள்ள மண்டபத்திலும் அச்சுதப்பநாயக்கர், மூர்த்தியம்மாள் சிற்பமுள்ளது. ஊஞ்சல் மண்டபத்தில் உள்ள தூண்களில் இரகுநாதநாயக்கர் மற்றும் கோவிந்த திட்சிதர் சிற்பங்கள் உள்ளன. இத்திருக்கோயிலின் இராசகோபுரங்களையும், ஆயிரங்கால் மண்டபத்தையும், கருட வாகன மண்டபத்தையும், யானைவாகன மண்டபத்தையும், வெண்ணெய்த்தாழி மண்டபத்தையும் திருச்சுற்றுச் சுவரையும் அமைத்த பெருமைக்குரியவர் விசயராகவநாயக்கர். இவர் எடுப்பித்த ஆயிரங்கால் மண்டபத்தின் தூண் ஒன்றில் இவரது ஆளுயர சிற்ப முள்ளது. மன்னார்குடி பெருமாள் கோயிலின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை காட்டிய இவரின் திருவுருவங்கள் இக்கோயிலில் பல இடங்களிலும் இடம்பெற்றிருக்கக் காணலாம். இக்கோயிலின் கோபுரம் 11 நிலைகளுடனும் 11 கவசங்களுடனும் கம்பீரமாகக் காட்சியளித்து இவ்வூரின் பெருமையை வானுயரச் செய்து கொண்டிருக்கிறது.

தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் இராசகோபால சுவாமி தேர்த் திருவிழாவின்போது கூடவே பாகவதர்கள் பாட்டுப் பாடி வந்திருக்கிறார்கள். இவர்களுக்கு அங்கவஸ்திரம் ஜோடிகள் ஐம்பது சக்கரப்பணம் செலவில் வழங்க இனாம் வழங்கப்பட்டு வந்திருக்கிறது. மேலும் இராசகோபாலசுவாமிக்கு நடைபெறும் திருவிழாவின்போது சுவாமி புறப்பாட்டில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைச் சேவை செய்துவர அரண்மனையார் ஆண்டுதோறும் 50 சக்கரப்பணம் அளித்து வந்துள்ளனர். இராமசோகளா, பீமோ உபதேச, அவதூதகீதா, சிவானந்தலகிரி, ஆத்ம சாட்சாத்கார,

பூரணாம் ருதகர, சோடசகலா, பிரம்மசமவிதி, ஆனந்த வால்மீகி இராமாயணம் போன்ற நூல்களின் ஆசிரியரும், முதலாம் துளசா பாவா சாகேப் போன்ற தஞ்சை மராட்டிய மன்னர்களின் காலத்த வருமான மேருசுவாமிகள் மன்னார்குடியில் தங்கி சமயப்பணி ஆற்றியதோடு, இவ்வூரிலேயே சமாதியுடைந்தவராவார். இவரது குருநாதரான அனந்தமௌனியும் இம்மன்னார்குடியில்தான் சமாதி அடைந்துள்ளார்.

தஞ்சை மராட்டிய மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதியை ஐந்து பிரிவுகளாகப் பிரித்திருந்தனர். ஒவ்வொரு பிரிவும் "சுபா" எனப்பட்டது. இப்படி அமைக்கப்பட்ட சுபாக் களுள் மன்னார்குடியும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. (மற்றவை: பட்டுக்கோட்டை, கும்பகோணம், மயிலாடுதுறை திருவை யாறு) ஒவ்வொரு சுபாவும் சீமைகளாகவும், ஒவ்வொரு சீமையும் மாகாணங்களாகவும் பிரிக்கப்பட்டன. பின்னர் ஒன்பது தாலுகாக்கள் அமைக்கப்பட்டன. அப்படி அமைக்கப்பட்ட ஒன்பது தாலுகாக்களில் மன்னார்குடியும் ஒன்று (மற்றவை : திருவையாறு, கும்பகோணம், மயிலாடுதுறை, பாபநாசம், திருவாரூர், நன்னிலம், கீவளூர், பட்டுக்கோட்டை) மன்னார்குடியில் பாகவதமேளாவுக்குச் சுரோத்திரியம் கொடுக்கப்பட்டதாக ஓர் ஆவணச் செய்தி குறிப்பிடு வதிலிருந்து, மெலட்டூர் பாகவதமேளா போல, தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் மன்னார்குடியிலும் பாகவதமேளா சிறப்பாக இருந்ததை உணரமுடிகிறது. தஞ்சை மராட்டிய மன்னர் காலத்தில் மன்னார்குடியில் காகிதப் பட்டறை இருந்திருக்கிறது. (பிற காகிதப் பட்டறைகள் இருந்த இடங்கள் கும்பகோணம், பந்தநல்லூர், திருக்காட்டுப்பள்ளி, திருவாரூர்) இங்கு பலவிதமான காகிதங்கள் தயார் செய்யப்பட்டு சர்க்காருக்கும், கும்பினிக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் மன்னார்குடியில் மகால் இருந்திருக்கிறது. இம்மகாலிலிருந்து ஏழைகளுக்குத் தேவை யான அன்றாட உணவிற்குத் தேவைப்படும் உப்பிற்காக 10 பணமும் சுங்கம் செலுத்துவதற்காக 10 பணமும் நோயாளிகளுக்கு உணவு வழங்குவதற்காக 10 பணமும் என பிரமானந்த பைராகி என்பவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

## மூர்த்தியம்மாள்புரம்

இவ்வூர் மன்னார்குடி தஞ்சை சாலையில் வடுவூருக்கு அருகில் உள்ளது. மூர்த்தியம்மாள் தஞ்சை நாயக்க மன்னர் செவ்வப்ப நாயக்கரின் மனைவி, விசயநகரப் பேரரசர் அச்சுதராயரின் மனைவி யான திருமலாம்பாளின் தங்கை; எனவே இவ்வூர் இவ்வரசியாரின் பெயரில் 16-ஆம் நூற்றாண்டு முதல் வழங்கி வருகிறது எனலாம்.

இவ்வூரிலுள்ள உருத்திர கோடீசுவரர் கோயில் கல்வெட்டி லிருந்து இவ்வூரின் பெயர் மங்கலமான ஸ்ரீஇராசேந்திர சதுர்வேதி மங்கலமாக இருக்கலாம் எனக் கருத இடமுள்ளது. இவ்வூரின் பெயரால் மங்கலநாடு என்ற நாட்டுப்பிரிவும் சோழப்பெருவேந்தர் காலத்தில் இருந்து வந்திருக்கிறது. இந்த மங்கலநாடு, அருமொழி தேவ வளநாடு என்ற நாட்டுப் பிரிவுக்குட்பட்டிருந்திருக்கிறது. இவ்வூர் சிவாலயத்திற்குரிய தேவதான இறையிலி நிலங்கள் இருந்த பகுதி சோழப்பெருவேந்தர் காலத்தில் ''குலோத்துங்க சோழ மங்கலம்'' என்று பெயரிட்டழைக்கப்பட்டிருக்கிறது.

## குடவாசல் வட்டம்

அன்னியூர்
ஆரப்பாழ்
ஆலத்தூர்
உச்சிவாடிநத்தம்
எண்கண்
கடகக்குடி
கண்கொடுத்தவனிதம்
கருவிலி
கீரன்தேவன்குடி
குடவாசல்
கூந்தலூர்
சித்தாடி & ஆவணம்
சீதக்கமங்கலம்
சேங்காலிபுரம்
திருக்கண்ணமங்கை
திருக்கொள்ளம்புதூர்
திருச்சிறுகுடி
திருப்பாம்புரம்
திருமெய்ஞானம்
திருவிடைவாய்
திருவீழிமிழலை
பத்தூர்
பருத்தியூர்
பாலையூர்
புளியஞ்சேரி
வண்டுவாஞ்சேரி
வடமட்டம்
வயலூர்
வடுகக்குடி
விசுவநாதபுரம்
விஷ்ணுபுரம்

**அன்னியூர் (அன்னூர்)**

திருநாவுக்கரசர் பதிகம்பாடிச் சிறப்பித்துள்ள வன்னியூர் இவ்வன்னியூரே எனக் கருதுவர். நாவுக்கரசர் தம் பதிகத்தில், ''மணங்கமழ் மாட மாமதிழ் சூழ் வன்னியூர்'' என இவ்வூரின் வளத்தினைக் குறித்துள்ளார். எனவே, இவ்வூரும் இவ்வூரில் உள்ள சிவாலயமும் ஏறத்தாழ 1300 ஆண்டுகாலச் சிறப்பு மிக்கவை.

பிற்காலச்சோழராட்சிக் காலத்தில் இவ்வூர் உய்யக்கொண்டார் வளநாட்டிற்குட்பட்ட வெண்ணாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்திருக் கிறது. ஊரின் பெயர் வளவன் அன்னியூர் என்றும், சிவாலயம் திருவகத்தீஸ்வரம் என்றும் வழங்கியிருக்கின்றன.

இரண்டாம் குலோத்துங்க சோழனின் மூன்றாம் ஆட்சி யாண்டில் (கி.பி. 1136) அன்னியூர் ஊரைச்சேர்ந்த அன்னியூருடை யான் வேளான் தழுவக்குழைந்தான், அன்னியூர்க்காணி உடைய பெருமங்கலமுடையான் வடவாயில் நாகன், அன்னியூர்க்காணி உடைய விசலூர்க் கிழவன், கேசவன் ஆதி பட்டாலத்தை ஆகிய மூவர் திருவீழிமிழலை உடையார் கோயிலிற் திருமடைவிளாகத் திலிருக்கும் திருவீதி நாட்டியத்தாங்குடி கோட்புலியாண்டாற்குத் திருவீழிமிழலை உடையார் எழுந்தருளுந் திருநாள் இரண்டிலும் சேவிக்க வரும் ஆண்டார்களுக்கு அமுது செய்தருளுகைக்கு ஐந்நூறு குழி நிலத்தினை நாற்பது காசுகளுக்கு இறையிலி மடப் புறமாக வழங்கியிருக்கிறார்கள்.

விக்கிரம சோழனின் ஆறாம் ஆட்சியாண்டிலேயே இறையிலி மடப்புறம் செய்கைக்காக 40 காசுகள் வழங்கப்பட்டுவிட்ட போதும், அதை மேற்குறித்த மூவரும் நிறைவேற்றாதிருந்ததால், மாகேசுவரர் கூடும் திருக்கூட்டங்களில் அன்னியூருக்குப் பழியாகப் பல நாளும் பழியேற்றி இதனைக் கோட்புலியாண்டார் கூறி வந்தார். இதனைத் தொடர்ந்து இரண்டாம் குலோத்துங்க சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டில் அன்னியூர் ஊரார் கூடி ''நம்க்குப் பழிவரலாகாதென்று உடையார் திருவீழிமிழலை உடையார் திருவெல்லை வட்டத்து இரண்டு திருநாளுஞ் சேவிக்க வந்த நாயன்மார் அமுது செய்தருளுகைக்குக் கல்லிலும் செம்பிலும்

வெட்டி இத்தன்மம் அழியலாகாதென்று மடத்தால் ஊராய்க்கூடி நாட்டியத்தாங்குடிக் கோட்புலியாண்டார்க்கும், இவர் வம்சத் தாருக்கும் இறையிலி மடப்புறமாகச் செய்து கொடுத்தனர். அத்துடன் இந்நிலத்துக்குப் பத்துக்காசு அன்னியூரிலுள்ள திருவகத் தீசுவரமுடையார் கோயிலுக்குத் திருப்பணிக்குடலாக கோட்புலி யாண்டார் வழங்கவும் வழிவகை செய்தனர். இதிலிருந்து அன்னியூரிலுள்ள திருவகத்தீசுவரமுடையார் கோயில் பன்னிரண் டாம் நூற்றாண்டில் திருப்பணி செய்யப்பட்டமை தெரிய வருகிறது.

## ஆரப்பாழ்

இவ்வூர் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இங்கநாட்டுகுட் பட்ட கிராமமாக இருந்திருக்கிறது. முதலாம் இராசராசனால் தஞ்சைப் பெருங்கோயில் இறைவனின் நிவந்தங்களுக்காகப் பல கிராமங்கள் தேவதானமாக வழங்கப்பட்டபோது இவ்வூரும் வழங்கப்பட்டிருக்கிறது. முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்தில் இவ்வூரில் மருத்துவனுக்காக வழங்கப்பட்ட நிலம் (மருத்துவப்பேறு) இருந்திருப்பதால், இவ்வூரில் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் சிறப்புமிக்க மருத்துவர் ஒருவர் இருந்திருக்கிறார் எனக் கருத இடமுள்ளது. மேலும் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் இவ்வூரில் சமணப் பள்ளியும், ஐயனார் கோயிலும், பிடாரி கோயிலும் இருந்திருக்கின்றன.

## ஆலாத்தூர்

இவ்வூரில் உள்ள பிப்பிலிகாதீசுவரர் கோயிலில் உள்ள மூன்றாம் குலோத்துங்கனின் முப்பத்தொன்பதாவது ஆட்சியாண்டு கல்வெட்டு உய்யக்கொண்டார் வளநாட்டு ஆம்பூர் நாட்டு பிரம்மதேயம் ஆலாத்தூர் என்று இவ்வூரைக் குறிக்கின்றது. இக் கல்வெட்டில் நகரமாகிய உலகுய்யவந்த சோழபுரம் குறிக்கப் படுகின்றது. ஸ்ரீகயிலாயமான உடையார் திருவாசன்துறையுடைய நாயனார்க்குச் சிறுகாலைச் சந்தியில் திருமந்திரம் பாடப் பட்டிருத்தல் வேண்டும்.

## உச்சிவாடிநத்தம் (உச்சிவாடி)

குடவாசலருகில் அமைந்துள்ள இவ்வூர், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் உச்சிபாடி என்றழைக்கப்பட்டிருக்கிறது. இவ்வூரில்

குளங்களும், கோயில்களும், ஈழச்சேரியும், முதலாம் இராசராசன் காலத்திலிருந்திருக்கின்றன. முதலாம் இராசராசனால் தஞ்சைப் பெருவுடையார் கோயில் இறைவனுக்கு வேண்டும் நிவந்தங்களுக்காகத் தேவதானமாக வழங்கப்பட்ட ஊர்களுள் இதுவும் ஒன்று. தஞ்சைப் பெருங்கோயிலுக்கு இவ்வூரில் இறை கட்டின நிலமாக ஐம்பத்தைஞ்சரையே மூன்று மாவின் கீழ் அரையே இரண்டு மாவரைக் காணிக் கீழ் எட்டுமா இருந்திருக்கிறது. இதிலிருந்து காணிக்கடனாகத் தஞ்சைப் பெருங்கோயிலுக்கு நெல் வழங்கிவரப்பட்டிருக்கிறது. இச்செய்தி தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டில் காணப்படுகிறது. இக்கல்வெட்டில் குறிக்கப் படும் உச்சிபாடி என்ற ஊர் குடவாசலருகில் உள்ள உச்சிவாடி நத்தமாக இருக்கலாமென்றும் தஞ்சை மாவட்டம், தரங்கம்பாடி வட்டம், செம்பனார் கோயில் ஒன்றியத்திலுள்ள உச்சிபாடியாக இருக்கலாம் என்றும் பல்வேறு கருத்துக்கள் நிலவி வருகின்றன. தண்ணீர்க் குன்றமும், உச்சிபாடியும் ஒரே நாட்டுப் பிரிவிற்குட் பட்ட ஊர்களாக, தஞ்சைக் கல்வெட்டில் குறிக்கப்படுவதால், குடவாசலருகிலுள்ள உச்சிவாடி நத்தமாக இவ்வூரைக் கொள்வதே பொறுத்தமாகத் தோன்றுகிறது.

**எண்கண்**

இவ்வூர் பிரம்மபுரீசுவரர் கோயிலில் இருபத்தேழு கல்வெட்டுகள் உள்ளன. முதலாம் குலோத்துங்கன், விக்கரமசோழன், இரண்டாம் இராசராசன், இராசாதிராசன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் ஆகியோர் கல்வெட்டுகள் இங்கு உள்ளன.

எண்கண் என்ற ஊர் குலோத்துங்கசோழவளநாட்டு, இங்க நாட்டு இங்கனான பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்று பெயர் பெற்று விளங்கியுள்ளது. இங்குள்ள இறைவன் திருவின் சாருடையார் என்று அழைக்கப்படுகின்றார்.

குலோத்துங்கசோழனின் ஐந்தாவது ஆட்சியாண்டில் நெற் குப்பை மகாசபையார் எண்கண்ணிலுள்ள விண்சாருடையார் கோயிலுக்கு, இக்கோயிலின் காணியுடைய சிவபிராமணர்களுக்கும் மாகேசுவரக்கண்காணி செய்வார்களுக்கும், இருபத்திரண்டு காசுக்கு நிலம் விற்று இறையிலி செய்து கொடுத்தனர். திருவின் சாருடைய மகாதேவர் கோயிலுக்கு மூன்று பேர் திருமடைப்பள்ளி

புறமாக ஐம்பத்தெட்டு காசுகள் பெற்றுக்கொண்டு நிலம் விற்று இறையிலி செய்து கொடுத்துள்ளனர். விக்கிரமசோழனின், பன்னிரெண்டாவது ஆட்சியாண்டு கல்வெட்டொன்று திருவின்சாருடைய மகாதேவர்க்கும், அக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார் வராகதேவர்க்கும் இறையிலியாக உள்ள நிலத்தின் அளவு பற்றிக் குறிக்கின்றது. வளவன்மழையூருடையான் அரையன் வீர சோழன், அரையன் உய்யவந்தான், உலகாண்டாநாந பரகேசரி விழுப்பரையன் ஆகிய மூவரும் திருவின்சாருடையார் கோயிலுக்கு நிலம் இறையிலியாகக் கொடுத்துள்ளனர். இந்நிலம் திருமடைப் பள்ளிப்புறமாகவும், திருவிளக்குப் புறமாகவும் கொடுக்கப்பட்டது. மேலும் பிள்ளையார் விக்னேசுவரதேவர்க்கு திருவிழாப் புறமாக் சில நிலங்கள் விற்கப்பட்டதென்றும், அப்பிள்ளையார் இவர் களுடைய பாட்டனாரால் எழுந்தருளுவிக்கப்பட்டதென்றும் கல்வெட்டு தெரிவிக்கிறது.

திருவின்சாருடையார் கோயிலுக்கு ஒரு சந்திவிளக்கு எரிப்ப தற்காக சிவபிராமணன் உய்ய நின்றாடினான் என்பவர் பதினொன்றறைக் காசுகள் பெற்றுள்ளார். இராசாதிராசனின் கல்வெட்டு திருவின்சாருடையார்க்குச் சந்திவிளக்கெரிக்க திருத் தொண்டத்தொகையர் மகன் பெரும்பற்றப்புலியூரார் எண்ணரிய திருநாமமுடையானான பொற்கோயில் பட்டனிடம் எட்டு காசுகள் உபயமாக கொடுத்த செய்தியை தெரிவிக்கின்றது. இவ்வூர் வெள்ளாளன் வேதவனமுடையான் நாகனான சேரமான் தோழ னிடமும், இவன் தங்கை சோறாண்டியான அன்னதான நங்கை என்பவரிடமும் காசுகள் பெற்றுக் கொண்டு இக்கோயிலில் காணி யுடைய சிவப்பிராமணன் பாரத்துவாசி வெண்காடுதேவன் உலகநாதபட்டன் என்பவன் ஒரு சந்தி விளக்கெரித்தான்.

மூன்றாம் குலோத்துங்கசோழனின் காலத்தில் பவித்திர மாணிக்கச் சதுர்வேதிமங்கலத்து சபையார்க்கு அந்தராயம் தவிர 300 காசும் கொடுக்கவேண்டும் என்று மன்னன் ஆணையிட்டான். பவித்திரமாணிக்க சதுர்வேதிமங்கலத்து சபையார்க்கு, தங்களூரில் காணியாளர்கள் இல்லாததால் நிலம் பயிர் செய்வதில் சில இடர்ப்பாடுகள் ஏற்பட்டன. அதனால் நிலம் விற்கப்பட்டதை கரிகால் சோழனின் (கி.பி. 12-13) பதினொன்றாவது ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.

## கடகக்குடி (கடையக்குடி)

திருப்பாம்புரம் அருகில் உள்ளது இந்த ஊர். முதலாம் இராசராச சோழன் தான் எடுப்பித்த தஞ்சைப் பெருங்கோயி லுக்குத் திருமெய்க்காப்பாளர்களை நியமித்தபோது, உய்யக் கொண்டார் வளநாட்டுப் பாம்பூர்நாட்டுக் கடையக்குடி சபை யாரும் திருமெய்காப்பொன்றினை இடக்கடவர் என்று திருவாய் மொழிந்தருளியிருப்பதால், இவ்வூர்ச் சபையார் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தங்கள் சபையின் சார்பாகத் தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் திருமெய்க்காப்பாளர் ஒருவரை நியமித்திருக்கின்றனர் என்பது புலனாகிறது. கடையக்குடி அல்லது கடையக்குடி என்ற பெயரே காலப் போக்கில் மருவி தற்சமயம் கடக்குடி என்ற பெயரில் வழங்கி வருகிறது.

## கண்கொடுத்தவனிதம்

இவ்வூரில் உள்ள நயனவரதேசுவரர் என்ற சிவன்கோயிலில் மூன்றாம் குலோத்துங்கன், முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் கல்வெட்டுகள் உள்ளன. மூன்றாம் குலோத்துங்கனின் ஏழாவது ஆட்சியாண்டில், நல்லூருடையார் இராமன் கயிலாசமுடையான் என்பவர் ஜயதுங்க சதுர்வேதிமங்கலத்தின் ஒரு பகுதியான ஆலத்தாங்குடியில் புகழாபரணீசுவரமுடையாரை எழுந்தருளி வித்தார். மேலும் இக்கோயில் ஆதிசண்டேசுவரதேவர் பெயரில் தேவதானமாக நிலம் கொடுத்த செய்தியும் தெரியவருகிறது. இந்நிலத்தை நல்லூருடையான் இராமன் ஸ்ரீ கைலாசமுடையான் சுமார் நாற்பத்தொருவரிடமிருந்து வாங்கியுள்ளான்.

முதல்மாறவர்மன் குலசேகரபாண்டியன் கல்வெட்டு ஆலத்தாங் குடியில் உள்ள புகழாபரணீசுவரமுடையார் கோயில் தேவ கன்மிகள் இக்கோயில் நாச்சியார் தேவத்தம்பிராட்டியார்க்குப் பலரிடம் நிலம் வாங்கி அளித்ததாகக் கூறுகிறது. யார் யாரிடம் எவ்வளவு நிலம் வாங்கப்பட்டது எனக்கூறும்போது, மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 36-வது ஆட்சியாண்டிலும், சுந்தரபாண்டி யனின் மூன்றாவது ஆட்சியாண்டிலும், அவனது எட்டாவது ஆட்சியாண்டிலும், விக்கிரமபாண்டியனின் மூன்றாவது ஆட்சி யாண்டிலும், வீரபாண்டியனின் 20-ஆம் ஆட்சியாண்டிலும் நிலம் வாங்கப்பட்டது என்று கூறுகிறது.

## கருவிலி

இவ்வூர் பூந்தோட்டம்- நாச்சியார் கோயில் சாலையில் அமைந்துள்ள கூந்தலூருக்கு வடக்கில் அமைந்துள்ளது. திருநாவுக்கரசர் இவ்வூருக்கு வந்து பதிகம் பாடியிருப்பதால், இவ்வூரும், இவ்வூரிலுள்ள சிவாலயமும் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் சிறப்புடன் விளங்கி வருகின்றன என்பது தெளிவாகிறது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இவ்வூரின் பெயர் கருவிலி என்றும், கோயில் கோட்டிட்டை என்றும், அதில் உறையும் இறைவன் ''கருவிலிக்கொட்டிட்டை (கோட்டிட்டை?) யுறைவான்?'' என்றும் அழைக்கப்பட்டிருப்பதனை திருநாவுக்கரசரின் தேவாரப்பதிகம் மூலம் நாம் உய்த்துணர்ந்து கொள்ள முடிகிறது. பிற்காலச் சோழர் காலத்தில் இவ்வூரின் பெயர் ''கருவிலி'' என்றும் ''குலோத்துங்க சோழ நல்லூர்'' என்றும் வழங்கியிருக்கிறது. இறைவனின் பெயர், திருக்கோட்டைவுடைய உடையார் என்றும், திருக்கோட்டீசுவரம் உடையார் என்றும், பசிதாங்கீசுவரமுடையார் என்றும் வழங்கியிருக்கிறது. பிற்காலச் சோழர் காலத்தில் இத்திருக்கோயிலில் சித்திரைத் திருப்பரணியும், ஐப்பசித் திருப்பரணியும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டுள்ளது. இதற்காக இக்கோயிலுக்கு ஐந்து மா நிலமளிக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் 11, 12-ஆம் நூற்றாண்டளவில் நம்பிச்சடியார் என்பவர் திருப்பள்ளியறை ஆளுடையாள் என்ற இறைவியை எழுந்தருளுவித்திருக்கிறார். இக்கோயிலின் நந்தீச்சுவரதேவரின் அமுதுபடிக்காகவும் சோழர் காலத்தில் ஏழு மா நிலம் வழங்கப்பட்டிருக்கிறது. திருவாபரணங்கள் செய்வதற்காகப் பொத்தப்பிச்சோழர் என்பவர் பொன் கொடுத்திருக்கிறார்.

இக்கோயிலில் காணப்படும் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் அரிசிலாறு, அரிசில் நீரோடுகால், ஆகவமல்ல குலகாலமங்கலம், சீதக்கமங்கலம், திரிபுவனமாதேவி வதி, இராசராச வாய்க்கால், இராசேந்திரசோழ வாய்க்கால், கங்கைகொண்டீசுவரமுடையார் திருநந்தவனம் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

இவ்வூருக்குத் தற்போது சற்குணேசபுரம் என்றும், கருவேலி என்றும் பெயர்கள் வழங்கி வருகின்றன. இறைவனின் திருப்பெயர் சற்குணேசுவரர் என்றும் சற்குணநாதேசுவரர் என்றும் வழங்கி வருகின்றது.

இவ்வூர் பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் உய்யக் கொண்டார் வளநாட்டு வெண்நாட்டிற்குட்பட்ட கிராமமாக இருந்திருக்கிறது. வெண்நாட்டிற்குட்பட்ட பிற கிராமங்களாக அமண்குடி (அம்மங்குடி, கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலம்), கடுவார், கீழடுகுவிலை, கொற்றங்குடி, குலோத்துங்கசோழமங்கலம் (கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலம்), பலவைக்குடி (பரவைக்கரை), தென்னவன் மாதேவி, திருநல்லம் (கோனேரிராசபுரம்), திருவீழிமிழலை, வடகண்ணமங்கலம், வைகல், வளவன் வன்னியூர், வரம்பூசல், வளலூர் போன்றவை திகழ்ந்திருக்கின்றன.

## கீரன்தேவன்குடி (கீரத்தங்குடி)

தஞ்சை மாவட்டத்தில் குடவாசல் அருகில் அமைந்துள்ளது இவ்வூர். முதலாம் இராசராசனது ஆட்சிக்காலத்தில் தஞ்சைப் பெருவுடையார் கோயிலிறைவனுக்கு வேண்டும் நிவந்தங்களுக்காக முதலாம் இராசராசனால் தேவதானமாய் வழங்கப்பட்ட ஊர்களுள் இதுவும் ஒன்று. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் இவ்வூர் கோயிலில் நந்தவனம், குளம் ஆகியன இருந்திருக்கின்றன. இவ்வூரிலிருந்து தஞ்சைப் பெருங்கோயிலுக்கு 4070 கலம், 5 நாழி நெல் காணிக் கடனாகச் செலுத்தி வரப்பட்டிருக்கிறது. இச்செய்தி தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

## குடவாசல்

கும்பகோணம்-திருவாரூர் நெடுஞ்சாலையில் இவ்வூர் உள்ளது. குடவாயில் என்பதே இதன் பழைய பெயராகும். சங்க காலந்தொட்டே இப்பெயரால் இவ்வூர் அழைக்கப்பட்டிருக்கிறது. சம்பந்தரின் பாடல் பெற்ற கோணேரீசுவரர் என்றழைக்கப்படும் சிவன் கோயில் இவ்வூரில் இருக்கிறது. திருணபிந்து என்ற முனிவருக்காக இறைவன் குடத்திலிருந்து வெளிப்பட்டு அவரது நோயைத் தீர்த்தமையால் இது குடவாசல் என்று அழைக்கப் பட்டதாக புராணம் புகல்கிறது. சம்பந்தர் இவ்வூரை "வரையார் மதில்சூழ் குடவாயில்" என்று குறிப்பிடுவதால் இவ்வூர் கோட்டை சூழ்ந்த காவல் நகரமாக சோழர் காலத்தில் விளங்கியிருக்க வேண்டும் எனக் கருதத் தோன்றுகிறது.

இவ்வூரில் உள்ள கோணேரீசுவரர் சிவன் கோயிலில் பத்து கல்வெட்டுகள் உள்ளன. மூன்றாம் குலோத்துங்கன் மற்றும் விசயநகரவேந்தர்க் காலக் கல்வெட்டுகள் இங்குள்ளன.

மூன்றாம் குலோத்துங்கசோழன் காலக் கல்வெட்டு குடவாயில் உடையார் கோயில் இறைவன் பெருந்திருக்கோயிலுடையாரின் தேவியாகிய பெரிய நாச்சியார்க்குத் திருவாபரணம் செய்வதற்குக் குற்றாலமுடையான் திருச்சிற்றம்பலமுடையார் ஆன காராளை விழுப்பரையன் என்பவன் 'எட்டேமுக்கால் மாறி பொன் பதின் கழஞ்சு தானமாக அளித்தச் செய்தியைத் தெரிவிக்கின்றது.

செவ்வப்ப நாயக்கர், வையப்ப நாயக்கர் காலத்தில் அவர்களின் மாதா பிதாக்களின் நன்மையின் பொருட்டு பெருந்திருக்கோயில் பெரியநாச்சிஅம்மைக்குத் திருவாபரணம் திருநாள் உபயத்துக்கு நிலம் தானமாக அளித்தச் செய்தி கல்வெட்டில் காணப்படுகிறது. கி. பி. 16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அச்சுததேவமகாராயர் காலத்துக் கல்வெட்டொன்று, அவர் காலத்தில் செவ்வப்ப நாயக்கர், வையப்ப நாயக்கர் ஆகியோரின் மாதா பிதாக்களுக்குப் புண்ணியம் உண்டாகும் பொருட்டு இவ்வூர் கோயிலுக்குச் செண்பகம் போன்ற மலர்கள் உள்ள நந்தவனம் ஒன்றை அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றது.

### கூந்தலூர்

தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம்—நாச்சியார் கோயில் சாலையில் அமைந்துள்ளது இவ்வூர். இவ்வூர் இறைவன், விசய நகர மன்னன் வீரபிரதாப கிருட்டிணதேவ மகாராயர் காலத்தில் "கூந்தலூர் தம்பிரானார் திருக்காட்டுறைவார்" என்றழைக்கப் பட்டுள்ளார். இம்மன்னனின் காலத்தில் இவ்வூர் குலோத்துங்க சோழவளநாட்டில் திருநறையூர் பற்றின் கீழ்கூறாகத் திகழ்ந் திருக்கிறது.

விசயநகர மன்னன் கிருட்டிணதேவராயன் ஆட்சிக் காலத்தில் இவ்வூரிலுள்ள சிவாலயத்தில் மக பூசை, திருப்பணிக்கென்று, திருப்பணிச்சவன் அம்பலத்தடியார் என்பவரின் வேண்டுகோளுக் கிணங்க, மன்னனால் நிலம் வழங்கப்பட்டிருக்கிறது. ஈசுவர

அய்யன் என்பவரின் வேண்டுகோளுக்கிணங்க, வினைதீர்த்த முதலியார் என்பவர், இக்கோயிலைப் பழுது பார்ப்பதற்கென்றும், நாள் வழிபாட்டிற்காக வென்றும் நான்கு தெருக்களிலிருந்த நிலங்களை இக்கோயிலுக்குக் கொடையாக அளித்தார்.

விசயநகர ஆட்சிக் காலத்தில் திருக்காட்டுறைவார் என்றழைக்கப்பட்ட இறைவனின் பெயர் காலப் போக்கில் வடமொழியாக்கம் செய்யப்பட்டு ''ஜம்புகாரண்யேசுவரர்'' என்றழைக்கப்படலாயிற்று.

## சித்தாடி ஆவணம்

புத்தாற்றுக்கு வடக்கிலுள்ள ஆவணம், சித்தாடி ஆகிய கிராமங்கள் திருவிடைமருதூரில் இருக்கும் மகாலிங்கசுவாமிக்கு (மருதப்பருக்கு)த் திருநாமத்துக்காணியாக இருந்திருக்கின்றன. இவை பின்னாளில் எப்படியோ பண்டாரவாடையாக்கப்பட்டு விட்டன. மகாலிங்கசுவாமி கோயில் தேவகன்மி திருசிற்றம்பல பட்டர் மங்காமற் காத்தார் என்பவர் விசயநகரவேந்தர் சதாசிவ தேவ மகாராயரிடத்தில் இது குறித்துப் புகார் கூற, அதனை மன்னர் கேட்டு, மேற்படி கிராமங்களில் மருதப்பர் முத்திரை எல்லை கல் நிற்பதை உறுதி செய்து கொண்டு, மேற்குறித்த ஆவணத்தையும், சித்தாடியையும், திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி கோயிலுக்கே கோயில் பற்றாக மாற்றி ஆணை பிறப்பித்தார். இந்நிகழ்ச்சி கி.பி. 1544-இல் நடைபெற்றிருக்கிறது.

## சீதக்கமங்கலம்

சீதக்கமங்கலம் திரிமூலநாதர் கோயிலில் இராசகேசரிவர்மனின் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. ஊர் சபையார் இறையிலியாக நிலம் விற்றுக் கொடுத்த செய்தி இதில் காணப்படுகிறது. மற்றொரு கல்வெட்டில் நிலத்தின் அளவுகள் கூறப்பட்டுள்ளன. இது இறையிலி நிலம் பற்றியதாக இருக்கலாம். இவ்வூரிலுள்ள ஸ்ரீரங்கநாதசுவாமி கோயிலில் நெடிய உருவம் கொண்ட பள்ளி கொண்ட பெருமானின் கோலம் காணப்படுகிறது.

**சேங்காலிபுரம்**

பிற்காலச்சோழர் காலத்தில் இவ்வூர் "ஜயசிம்மகுலகாலபுரம்" என்றழைக்கப்பட்டிருக்கிறது. ஜயசிம்மகுலகாலபுரம் என்ற பெயரே நாளடைவில் சேங்காலிபுரம்" என்று மருவியிருக்கின்றது. இவ்வூர் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் சேற்றூர் கூற்றத் திற்குட்பட்டு இருந்திருக்கிறது. சேற்றூர்க் கூற்றம் என்பது அன்னவாயில் (அன்னவாசல்), சேற்றூர் (திருசிறை), இடைக் குறும்பூர், குடவாயில் (குடவாசல்), சோழகுலவல்லிச் சதுர்வேதி மங்கலம், மருதத்தூர் (மருவத்தூர்) நானூர் (வாணவன்மாதேவிச் சதுர்வேதிமங்கலம்), நாலூர் திருமயானம் (திருமெஞ்ஞானம்) ஒகை (அகரஒகை), இராஜசுந்தரிச் சதுர்வேதிமங்கலம், திருக் கொள்ளபுதூர் (திருக்கரும்பூர்), வெட்சியூர் (விச்சியூர்), விசலூர், ஆகிய ஊர்களை உள்ளடக்கிய பகுதியாகத் திகழ்ந்திருக்கிறது.

இவ்வூரில் இன்று சோமேசுவரர் என்றழைக்கப்படும் சிவபிரான், பிற்காலச் சோழர் காலத்தில் இராஜேந்திர சோமேசுவரமுடையார் என்றழைக்கப்பட்டிருக்கிறார்.

இதே ஊரில் மேலக்கோயில் என்றழைக்கப்படுகின்ற துந்துபீஸ்வரசுவாமி திருக்கோயில் ஒன்றுள்ளது. பூம்பொழிலீசுவர முடையார் என்றும் துந்துபீஸ்வரமுடையார் என்றும் அழைக்கப் படும் இக்கோயிலைப் பிற்காலச் சோழர் காலத்தில், கங்கை கொண்ட சோழபுரத்தில் முடிகொண்ட சோழப் பெருந்தெருவைச் சேர்ந்த சாலிகன் கௌதமன் திருப்பாலைவனமுடையான் அரையன் என்பவன் கற்றளியாக்கிய செய்தி இக்கோயிலிலுள்ள கல்வெட் டொன்றில் பொறிக்கப்பட்டுள்ளது.

இவ்வூர் கோயில்களில் நந்திவர்மன் காலத்து கல்வெட்டு ஒன்றும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்து கல்வெட்டுகள் இரண்டும், மன்னர் பெயர் தெரியாத கல்வெட்டுகள் இரண்டும், ஆகமொத்தம் ஐந்து கல்வெட்டுகள் உள்ளன. அரங்கநாதர் கோயிலிலுள்ள கல்வெட்டு நந்திவர்மன் காலத்தில் இவ்வூர் ரங்கநாதர் கோயிலுக்கு மத்தியான சந்திக்கு அரைக்கால் நிலம் கொடுத்த செய்தியும். 250 குழி நிலத்தை ஊர்மேல் இறை ஏற்றிக் கொடுத்ததையும் கூறுகிறது.

மூன்றாம் குலோத்துங்கச் சோழனின் கல்வெட்டு அண்ணன் தம்பி, இருவரிடம் 700, 700 காசுகள் ஆக 1400 காசுகள் இக்கோயிலில் காணியுடைய முப்பது வட்டத்து சிவப் பிராமணர்கள் பெற்றுக்கொண்டு சோழேசுவரர் கோயிலுக்கு நுந்தாவிளக்கு எரிக்கச் சம்மதித்த செய்தியைக் கூறுகிறது.

மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டொன்று சோழேசுவரர் கோயிலிலுள்ள நாச்சியாருக்கு சாத்தியருளுவதற் காகத் திருப்பட்டம், திருவட்டமணி, வெள்ளிப்பட்டம் ஆகியவை செய்வதற்குப் பொன்னும், வெள்ளியும் பெற்ற செய்தியைக் கூறுகின்றது.

**திருகண்ணமங்கை**

திருவாருருக்கு வடமேற்கில் அமைந்துள்ளது இவ்வூர். "பஞ்சகிருஷ்ணசேத்திரங்கள்" என்று போற்றப்படுவனவற்றுள் ஒன்றான இவ்வூர் (திருக்கண்ணபுரம், திருக்கண்ணன்குடி, கவித் தலம் (கபிஸ்தலம்) கோபாலபுரம் என்பன ஏனைய நான்கு), திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்டிருப்பதால், திருமங்கையாழ்வார் காலத்திலிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள பெருமாள் கோயிலும் தனிச்சிறப்புடன் விளங்கி வருகின்றன எனக் கொள்ளலாம்.

வைணவப் பெரியார் நாதமுனிகளின் உடன்பிறந்த சகோதரி யார் இவ்வூரில் வாழ்க்கைப்பட்டவர். இப்பெண்ணின் குமாரர் திருக்கண்ணமங்கையாண்டான் என்பவர் நாதமுனிகளின் மீது பற்றுக் கொண்ட வைணவப் பெரியாராகத் திகழ்ந்தவர். திருக் கண்ணமங்கையாண்டானின் இயற்பெயர் இலட்சுமி தாதாசாரியர்.

கந்தாடை இராமானுச அய்யங்கார் என்பவர் இவ்வூரிலுள்ள பெருமாள் கோயில் பண்டாரத்தாரிடம் 40 பொன் கொடுத்து, தினமும் கோயில் பிரசாதத்திலிருந்து மூன்று குறுணி அளவிலான மூன்று தளிகைகளைப் பெற்று, 'இராமனுஜக்கூடம்' என்ற பெயரில் அன்னசத்திரம் நடத்திவர, கி.பி. 1583-இல் ஏற்பாடு செய் திருந்தமையை இக்கோயிலிலிருக்கும் கல்வெட்டொன்றின் மூலம் நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. இத்திருக்கோயிலில் கி.பி. 1621-இல் பக்தாபரணர் (பக்தவத்சலர்) திருமேனி எருந்தருளிவிக்

கப்பட்டுள்ளது. பள்ளிகொண்ட பெருமாள் பிறவாதேவராய மழவராயர் என்பவர் திருக்கண்ணமங்கை பெருமாள் கோயிலுக்குரிய நிலங்களின் வரிகளையும், நிலுவைகளையும் ரத்து செய்து ஆணை பிறப்பித்துள்ளார். அச்சுத விசயராகவ நாயக்கர் காலத்தில் பக்தவத்சலப் பெருமாள் கோயிலைப் பழுதுபார்ப்பதற்கென்றும், வழிபாட்டிற்கென்றும், இராமானுஜகூடம் என்ற அன்ன சத்திரத்தை நடத்துவதற்கென்றும், $15\frac{1}{2}$ வேலி நிலம் வழங்கப்பட்டிருக்கிறது. கி.பி. 1608-இல், இக்கோயிலுக்கு வழிபாடு நெய்வேத்தியம் போன்றவற்றிற்காக 60 வேலி நிலம் வழங்கப்பட்டிருந்ததை, தஞ்சை நாயக்க மன்னன் அச்சுத விசயரகுநாத நாயக்கர் காலச் செப்பேடொன்று செப்புகின்றது.

இவ்வூரைப் பற்றிய புராண வரலாறு பத்மபுராணத்தின் ஐந்தாவது காண்டத்தில் காணப்படுகிறது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் 1922-ஆம் ஆண்டில் இக்கோயிலுக்குக் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. திருமங்கையாழ்வாரின் திருமொழி தவிர, வேறு பல இலக்கியங்களிலும் இவ்வூர் சிறப்பிக்கப்பட்டுள்ளது. திருவரங்கத்தமுதனார் இயற்றிய இராமானுச நூற்றந்தாதி (ப்ரபந்த காயத்ரி) பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் இயற்றிய அஷ்டப்பிரபந்தம், வடலூர் இராமலிங்க அடிகளாரின் திருஅருட்பா, அந்தகக் கவி வீரராகவ முதலியார் இயற்றிய திருக்கண்ணமங்கை மாலை, குரவை, இராமனுசதாசர் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ், காளமேகப்புலவரின் தனிப்பாடல், அ. சீனிவாச ராகவன் இயற்றிய ஸ்ரீபக்தவத்சல மகாத்மியம் போன்றவற்றைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

### திருக்கொள்ளம்புதூர்

கொரடாச்சேரிக்கும், குடவாசலுக்கும் அருகில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியிருப்பதால் இவ்வூர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே தனிச் சிறப்புடன் விளங்கியிருப்பது தெளிவாகிறது. கொள்ளம்பூதூரின் வளத்தினைக் குறிப்பிடும் வகையில் சம்பந்தர் இவ்வூரினை, "கோட்டகக் கழனிக் கொள்ளம்பூதூர்" "குலையினார் தெங்குசூழ் கொள்ளம்பூதூர்" "குவளை கண் மலருங் கொள்ளம்பூதூர்" "நீரகக் கழனி கொள்ளம்பூதூர்" போன்ற தொடர்களால்

சிறப்பித்துப் பாடியுள்ளார். அகத்தியக்காவேரி, முள்ளியாறு என்றெல்லாம் அழைக்கப்படும் ஆறு இவ்வூரின் அருகில் ஓடுகிறது. 1300 ஆண்டுகளுக்கு முன்பே இவ்வூர் ஆற்றின் கரையில் அமைந்திருந்தது என்பதனை "ஓடம் வந்தணையும் கொள்ளம் பூதூர்" "ஆறு வந்தணையும் கொள்ளம்பூதூர்" போன்ற தேவாரத் தொடர்கள் தெளிவுபடுத்துகின்றன.

இவ்வூருக்கு வில்வமரத்தை அடியொற்றிக் கூவிளம்புதூர் (வில்வப்புதூர்) என்ற பெயரேற்பட்டு அதுவே நாளடைவில் கொள்ளம்பூதூர் என்று மருவியிருத்தல் கூடும் என்றொரு காரணம் கூறப்படுகிறது. இறைவனுடைய பெயர் வில்வாரன்யேசுவரர் என்று வழங்கிவருவதும் இதனையொட்டியே எனக் கருதலாம்.

இவ்வூரிலுள்ள சிவாலயத்தின் பிற்காலச் சோழர் கல்வெட்டுகள் சில படியெடுக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இறைவனின் பெயர் திருக்கொள்ளம்பூதூருடையார் எனக் குறிக்கப்பட்டுள்ளது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் தனியார் ஒருவருக்குக் குலோத்துங்க சோழ களத்தூர் என்ற ஊர் தானமாக வழங்கப் பட்டுள்ளது.

பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் அம்பர் என்ற ஊரைச் சேர்ந்த காலிங்கராயன் என்றழைக்கப்பட்ட அருவந்தை அரையன் சுவேதவனப் பெருமாள் திருக்கொள்ளம்பூதூர்க் கோயிலிலிருந்து சில நிலங்களை வாங்கிக் கொண்டு அதற்கு மாற்றாக வேறு சில நிலங்களை வழங்கியிருக்கிறார். இக்கோயிலில் எழுந்தருளுவிக்கப் பட்டிருந்த திருநீலகண்டத்துப் பாணர், சிவசூடாமணியார் ஆகிய இறைவுருவங்களின் வழிபாட்டிற்குப் பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் வழிவகை செய்யப்பட்டிருந்ததை இக்கோயிலிலுள்ள மற்றொரு கல்வெட்டு தெரிவிக்கிறது. இக்கோயிலில் இருந்த குளங்கண்ட மாதேவர், அவரது நாச்சியாரான நீரளித்த மென் முலையம்மை, அத்தம்பேணிய அழகர், அவரது நாச்சியார் ஆட் கொண்ட நாயகதேவர், அவரது நாச்சியார் அவிமுக்தீசுவர முடையார், அவரது நாச்சியார் ஆகிய இறைவுருவங்களின் வழி பாட்டிற்காகப் பல்வேறு ஊர்களில் நிலம் வழங்கப்பட்டிருந்த செய்தியினை செளந்தரநாயகியம்மன் கருவறையிலுள்ள கல்வெட்

டொன்று தெரிவிக்கிறது. அமரகோன் என்றழைக்கப்பட்ட சங்கரன் என்பவர் (பெருமூரைச் சேர்ந்தவர்) நீரளித்தமென்முலையம்மையின் திருவுருவினை எழுந்தருளுவித்துள்ளார்.

சோழப்பெருமன்னன் முதலாம் இராசராச சோழன் தஞ்சைப் பெருங்கோயிலைக் கட்டுவித்து, அக்கோயிலுக்குத் தன்னாட்சிக் குட்ப்ட்ட பல்வேறு பகுதிகளிலிருந்தும் தளிச்சேரிப் பெண்டுகளைத் தேர்ந்தெடுத்து நியமித்தபோது திருக்கொள்ளம்பூதூரிலிருந்தும் சில தளிச்சேரிப் பெண்டுகளைத் தேர்ந்தெடுத்து நியமித்திருக்கிறான். அப்படி நியமிக்கப்பட்ட இவ்வூர்ப் பெண்களில் பொற்கேசி, உமை ஆகியோரது பெயர்கள் தஞ்சைப்பெருங் கோயில் கல்வெட்டில் காணப்படுகின்றன. இச்செய்தியிலிருந்து, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வூரில் ஆடற்கலையில் சிறந்த மகளிர் பலர் வாழ்ந்திருந்தமையை உய்த்துணரலாம். பிற்காலச் சோழர் காலத்தில் இவ்வூர் சேற்றூர் கூற்றம் என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்ட கிராமமாக இருந்திருக்கிறது.

## திருச்சிறுகுடி (செருகுடி)

திருப்பாம்புரம் அருகில் அமைந்துள்ள இவ்வூர் சங்ககாலம் தொடங்கியே சிறப்புடன் விளங்கி வரும் ஊர்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.

> தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
> பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
> புன்காழ் நெல்லிப் பைங்காய்

என்று சங்கப்பாடல் (அகம் 54) குறிப்பிடும் சிறுகுடி இவ்வூராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

இவ்வூரின் பெயர் வடமொழியில் சூட்சுமபுரி என்று வழங்கப் படுகிறது. எனவே, இவ்வூரிலுள்ள இறைவனின் பெயரும் சூட்சுமபுரீசுவரர் என்று தற்காலத்தில் வழங்கி வருகிறது.

அம்பிகை இத்தலத்தில் மங்கள தீர்த்தத்தை உண்டாக்கி, இறைவனைத் தன் கைச்சிறுபிடி அளவினதாக மணலால் பிடித்து வைத்து வழிபட்டாள் எனவும், அதனாலேயே இவ்வூருக்கு சிறுபிடி

என்ற பெயரேற்பட்டுப் பின்னாளில் சிறுகுடி என்று மருவிற்றென்றும் புராண ரீதியாகக் கூறப்படுகிறது. சிற்றூர் என்ற பொருளிலேயே இவ்வூர் சிறுகுடி என்று அழைக்கப்படுகிறது என்ற கருத்தும் உண்டு.

திருஞானசம்பந்தர் தமது பதிகத்தில் இவ்வூர் இறைவனை, சிறுகுடி மேவிய படமலியரவுடையார், சிறுகுடி மேவிய சுற்றிய சடைமுடியார், சிறுகுடி மேவிய துள்ளிய மானுடையார், சிறுகுடி மேவிய ஒன்னலர் புரமெரித்தார், சிறுகுடி மேவிய பெற்றி கொள் பிறைமுடியார், சிறுகுடி மேவிய மங்கையை இடமுடையார், சிறுகுடி மேவிய வெறிகமழ்சடைமுடியார், சிறுகுடி மேவிய தசமுகரை நெரித்தார், சிறுகுடி மேவிய இருவரை அசைவு செய்தார், சிறுகுடி மேவிய மானமர் கரமுடையார் என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்.

பதின்மூன்றாம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்றில் "உடையார் மங்கையை இடமுடையார்" என்ற பெயர் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சம்பந்தர் இவ்வூர் இறைவனை சுட்டிப்பாடிய பெயர்களில் இதுவும் ஒன்றாகக் காணப்படுவதால் ஏழாம் நூற்றாண்டில் இருந்தே இறைவனுக்கு இப்பெயரும் வழங்கி வந்ததாகக் கொள்ளலாம். மூன்றாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டுகளில் இவ்வூர் இறைவனின் பெயர் திருவகத்தீசுவரமுடையார் என்று குறிப்பிடப்படுகிறது. இறைவனின் பெயர் பிற்காலச் சோழர் காலத்தில் திருக்காமக்கோட்டமுடைய அழகிய மங்கை என்று வழங்கி வந்திருக்கிறது.

பிற்காலச் சோழர் கல்வெட்டொன்றில் இவ்வூரின் பெயர் விக்கிரம சோழன் சிறுகுடி என்று காணப்படுவதால், விக்கிரம சோழனது ஆட்சிக் காலத்தில் இப்பெயர் வழங்கியிருக்கிறது என்றுகருத இடமுள்ளது.

சிறுகுடி ஊர் நத்தத்தில் மேலைத் தெருவுக்கு மேற்காக கல்லுவாயான குளம் ஒன்றிருந்ததையும் சோழர் கல்வெட்டுகளால் உணரமுடிகிறது.

இவ்வூர்க் கல்வெட்டுகளில் நூல்வாய் ஆறு, கீர்த்திமானாறு, சரணாக வாய்க்கால், திருச்சிற்றம்பல வாய்க்கால் ஆகிய நீரோடு கால்களும், இராமதேவி நிலம், மண்ணிச்செயான் சூற்றின் சடை முடி மயக்கல், சிற்றிடை அழகிய மயக்கல், புள்ளிடங்கொண்ட மயக்கல் ஆகிய நிலப்பெயர்களும் காணப்படுகின்றன.

இவ்வூர் பிற்காலச் சோழர் காலத்தில் பாம்பூர் நாட்டுக்குட் பட்ட கிராமமாக இருந்திருக்கிறது. பாம்பூர் நாட்டுக்குட்பட்ட பிறகிராமங்களாக கடையக்குடி (கடகக்குடி), நடார்நல்லாவூர், பாம்புரம் (குலோத்துங்கசோழச் சதுர்வேதிமங்கலம் / திருப்பாம் புரம்), சுங்கம்தவிர்த்த சோழநல்லூர், வில்லியநல்லூர், ஆசியவை திகழ்ந்திருக்கின்றன.

### திருப்பாம்புரம்

இவ்வூர் திருஞானசம்பந்தரால் பாடப்பட்ட சிறப்புடையது.

மஞ்சுதோய் சோலை மாமயிலாட
மாடமாளிகை தன்மேலேறி
பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர்பயிலும்
பாம்புர நன்னகர்

கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே திரும்பாம்புரம் செழிப்பு மிக்க நன்னகராக விளங்கியமையை மேற்சுட்டிய வரிகளில் ஞான சம்பந்தர் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார்.

திருப்பாம்புரம் சேக்கிழார் பாடலில் பாம்புபுரம், பாம்புரம் என்று குறிப்பிடப்படுகிறது. இவ்வூர் சேடபுரீசுவரர் என்ற சிவன் கோயிலில் இருபத்தொன்பது கல்வெட்டுகள் உள்ளன. இங்கு மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன், மூன்றாம் இராசேந்திரன், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சரபோஜி மன்னர் காலக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வொட்டொன்று இவ்வூரை "உய்யக் கொண்டார் வளநாட்டு, பாம்பூர் நாட்டு, பாம்பூரான குலோத்துங்க சோழச் சருப்பேதிமங்கலம்" என்று குறிக்கின்றது.

இவ்வூரிலுள்ள கல்வெட்டுகளில் பல நிலக்கொடைகள் பற்றி தெரிவிக்கப்பட்டுள்ளன. அரசிலாற்றங்கரையில் குணவாயி லுடையார் மீனவன் மூவேந்தவேளார் என்பவர் எழுந்தருளுவித்த இராசராசவினாயகப் பிள்ளையார்க்கு மன்னனின் ஆணையின்படி தேவதான நிலம் பாம்புரமான குலோத்துங்கசோழசருப்பேதி மங்கலத்து மகாசபையாரால் அளிக்கப்பட்டது. அருள்மொழி பிரம்மராயர் என்பவர் குலோத்துங்க சோழச் சதுர்வேதிமங்கலத்துச் சபையாரை வேண்டி கொண்டதற்கிணங்க அச்சபையினர் ஊர் கீழ் இறையிலியாக நிலம் அளித்த செய்தி கூறப்பட்டுள்ளது. அன்றியும் கோயில் வழிபாட்டுச் செலவிற்காக காசு இரண்டா யிரமும் பிற செலவுகளுக்காக அதாவது காவிரியிலிருந்து நீர் கொண்டு வரும் ஆளுக்கு கூலி கொடுத்தல் போன்ற செலவு களுக்காக காசு ஆயிரமுமாக மொத்தம் 3100 கொடுத்த செய்தியும் கூறப்பட்டுள்ளது. மூன்றாம் இராசராச சோழனின் இருபத்திரண் டாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் பழுவேட்டரையர் என்பவர் திருப்பாம்புரமுடையார்க்கு நித்தம் அரிசிலாற்றிலிருந்து திருமஞ்சனம் எடுத்துவருகிற கலத்துக்கும், ஐம்பத்திரண்டு செங்கழுநீர்த் திருப்பள்ளித்தாமங்களுக்குத் தன்னுடைய காணி யான நிலத்திலிருந்து இறையிலியாக நிலம் அளித்த செய்தி கூறப்பட்டுள்ளது. பொருளூரைச் சேர்ந்த ஒருவர் திருக்காமக் கோட்டமுடைய மாமலையாட்டியார்க்கு வேண்டும் அமுதுபடிக்காக நிலம் கொடுத்த செய்தி தெரிய வருகிறது. சுந்தரபாண்டியனின் இரண்டாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் வேம்பற்றூ ருடையான் ஆலால சுந்தரவேளான் மகன் தன்னுடைய நிலம் கால்வேலியை திரும்பாம்புரமுடையார்க்கு திருநாமத்துக் காணியாக நீர் வார்த்துக் கொடுத்தச் செய்தி கூறப்படுகிறது.

மூன்றாம் குலோத்துங்கசோழனின் கல்வெட்டில் திருப்பாம்புர முடையார் கோயில் தேவரடியாரில் உடையவளான நாற்பத் தெண்ணாயிரமாணிக்கம் என்ற பெண், அக்கோயிலில் திருவாசுர நாயனாரையும், பெரியதேவரையும், நாச்சியாரையும் எழுந்தருளு வித்த செய்தியும், அக்கோயில் மாகேசுவரர்கள் அத்தேவரடியார் பெண்ணுக்கு சில உரிமைகள் வழங்கிய செய்தியும் கூறப் பட்டுள்ளது. மூன்றாம் இராசேந்திரனின் காலத்தில் பெருமருதூர் திருச்சேறைநின்றான் பட்டன் என்பவளை முதுகண்ணாகக் கொண்டு சொக்காண்டாள் சாணி என்ற பெண் 2000 காசுகள்

பெற்றுக் கொண்டு ஆறு மா நிலத்தினை, திருப்பாம்புரமுடையார் கோயிலுக்கு விற்றுக் கொடுத்தாள். திருப்பாம்புரமுடையார் கோயில் தேவரடியார் பெண்களில் உடையவளான நாற்பத்தெண்ணாயிர மாணிக்கம் என்பவர் எழுந்தருளுவித்த பெரிய தேவர்க்கும், நாச்சியார்க்கும் பாம்புரமான குலோத்துங்கசோழச் சதுர்வேதிமங்கலத்து மகாசபையின் ஊர்க்கணக்கு உட்பட பன்னிருவரும் 1750 காசு கைக்கொண்டு, மும்மாவரை நிலம் இறையிலி செய்து அளித்தனர்.

மூன்றாம் இராசராசன் காலத்தில் சோழிநரையவேளான் என்பவன், திருப்பாம்புரமுடையார் கோயில் இரண்டாம் பிரகாரத்தில் ஆத்தான மண்டபம் ஒன்று கட்டிய செய்தி தெரிய வருகிறது. அத்துடன் பாம்புரமான குலோத்துங்கசோழச் சதுர்வேதிமங்கலத்து மகாசபையார், மேற்கூறிய ஆத்தான மண்டபத்தைப் பழுதுபார்த்து சீர்படுத்துவதற்கு அந்தராயம் இறையிலி செய்து திருமண்டபப் புறமாக நிலம் கொடுத்தனர்.

ஆளவந்தாள் என்ற பெண் தன்னிடம் சில அடியார்களை வைத்திருந்த செய்தியும், தன் அடியார்களில் சிலரை கோயிலுக்குக் கொடுத்த செய்தியும் கொடுக்கப்பட்ட அடியார்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் உறவினர் என்ற செய்தியும் மூன்றாம் குலோத்துங்கனின் 13-ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டு மூலம் தெரியவருகிறது. திருப்பாம்புரத்திலுள்ள வெள்ளாளன் ஒருவன் காசுக்கு மூன்று நாழி நெல் விற்கும் கொடிய பஞ்சமுள்ள நேரத்தில் தன்னையும், தன் மகள் இருவரையும் மட அடிமைகளாக மூன்று காசுக்கு விற்றுள்ளான்.

கொற்றமங்கலத்தைச் சேர்ந்த பாலறாவாயர் என்பவரால் புகழாபரணன் என்ற கற்கோயில் கட்டப்பட்டது. சுபேதார் கோபண்டிதரய்யன் என்பவரின் பிரதிநிதியாகிய மாணுக்கோ பண்டிதரய்யன் சேடபுரீசுவரர் கோயிலில் வசந்தமண்டபம் ஒன்று கட்டியதாக சரபோஜி மன்னனின் கி.பி. 1723 ஆண்டுக் கல்வெட்டு கூறுகின்றது.

## திருமெய்ஞானம் (எண்ணுகுடி)

அம்பர் பகுதியில் உள்ள இவ்வூர், பிற்காலச் சோழர் காலத்தில் எண்ணுக்குடி என்ற பெயரிலேயே வழங்கியிருக்கிறது. இவ்வூரில் உள்ள சிவபெருமான், எண்ணுகுடி உடையார், திருமயான முடையார் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறார். இத் "திருமயானம்" என்ற பெயரே காலப்போக்கில் "திருமெய்ஞானம்" என்று வழங்கப்பட்டு இவ்வூரின் தற்போதைய பெயராகியிருக்க வேண்டும். "மெய்ஞானம்" என்ற பெயரே ஞானபுரி என்று மொழியாக்கம் பெற்று, அதனடிப்படையில் இறைவனின் தற்போதைய பெயரான "ஞானபுரீசுவரர்" என்ற பெயர் வழங்கி வருகிறது. இக்கோயிலின் திருமடைவளாகத்தில் இடம்பெற்ற விநாயகர் திருவம்பில் பிரியாத வினாயகப் பிள்ளையார் (திரு அன்பில் பிரியாத விநாயகர்?) என்று பிற்காலச் சோழர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளார்.

இத்திருக்கோயிலிலுள்ள திருவம்பில் பிரியாத வினாயகப் பிள்ளையாருக்கு ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர், காலே அறு மா நிலம் வழங்கப்பட்டிருந்ததை ஞானபுரீசுவரர் கோயில் கருவறையிலுள்ள கல்வெட்டொன்று தெரிவிக்கிறது.

பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் எண்ணுகுடியின் ஒரு பகுதியில் இராசராசநல்லூர் என்ற பெயரில் ஒரு ஊர் உருப் பெற்றிருக்கிறது. இது பெரும்பாலும் மூன்றாம் இராசராசசோழனின் பெயரில் ஏற்படுத்தப்பட்டிருக்கக்கூடும். மூன்றாம் இராசராசன் காலத்தில், இவ்வூர்க் கோயிலுக்குத் திருநாமத்துக் காணியாகவும், இறையிலியாகவும் நிலம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்காக வேண்டி இவ்வூர்க் கோயில் கருவூலத்திலிருந்து மூவாயிரம் காசுகளும், நாற்கழஞ்சே முக்காலே நாலு மஞ்சாடிப் பொன்னும் வழங்கப் பட்டிருக்கிறது. இதே காலகட்டத்தில் மருதிடங்கொண்டான் தில்லை நாயகன் என்பவர், அவருக்குரியதாயிருந்த மாகாணி நிலத்தினை இக்கோயிலுக்குத் திருநாமத்துக்காணியாகவும், இறையிலியாகவும், மூவாயிரம் காசுகளுக்கு விற்றுக்கொடுத் திருக்கிறார்.

## திருவிடைவாய்(திருவிடைவாயில்/திருவிடைவாசல்/ திருவிடைவாய்க்குடி)

கொரடாச்சேரி அருகில் வெண்ணாற்றங்கறையில் இவ்வூர் அமைந்துள்ளது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர் இங்கு வந்து பதிகம் பாடியிருப்பதால், ஏறத்தாழ கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே இவ்வூரும், இவ்வூர்க்கோயிலும் சிறப்புடன் விளங்கி வருகின்றன என்பது தெளிவு. திருஞான சம்பந்தரின் பதிகங்களில் இவ்வூர் விடையாய் என்றே சுட்டப் பட்டுள்ளது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டளவில் இவ்வூர் மாடமாளிகைகளுடன் விளங்கியதை திருஞானசம்பந்தரின் கீழ்க்காணும் பதிக வரிகள் தெளிவாகச் செப்புகின்றன.

கிரியுந்தலி மாளிகை குளிகை தன்மேல்
விரியுங் கொடிவான்விளிசெய் விடைவாயே

இதேபோல கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர்ச் சிவாலயத்தில் இசைப்பாடல்கள், முழவு, வேதம், நடனம் ஆகியவற்றோடு வழிபாடு சிறப்பாக நடைபெற்றிருக்கிறதென்ப தனையும், திருவிழாக்களும் மிகச் சிறப்பாக நடைபெற்றிருக்கின்றன என்பதையும், ஞானசம்பந்தரின் பதிகம் உணர்த்துகிறது.

இக்கோயிலிலுள்ள பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூரில் உள்ள சிவாலயம், திருவிடைவாயிலுடையார் கோயில் திருவிடைவாயுடைய மஹாதேவர் கோயில் என்று சுட்டப் பட்டுள்ளது. தற்காலத்தில் இவ்வூர் இறைவனுக்கு வழங்கிவரும் புண்ணியநாத சுவாமி (புண்ணியகோடிநாதர்) என்ற பெயர் மிகவும் பிற்காலத்தில்தான் ஏற்பட்டிருக்க வேண்டும்.

தொடக்க காலத்தில் விடைவாய் என்றழைக்கப்பட்ட இவ்வூரின் பெயரோடு திரு என்ற முன்னொட்டும், ''இல்'' என்ற பின்னொட்டும் இணைந்து பிற்காலச் சோழர் காலத்தில் திருவிடை வாயில் என்றழைக்கப்பட்டிருக்கிறது. சில கல்வெட்டுகளில் பின்னொட்டு இல்லாமல் திருவிடைவாய் எனவும் காணப்படுகிறது. சில கல்வெட்டுகளில் ஊரின் பெயர் புதுக்குடி திருவிடைவாயில்

எனவும் காணப்படுகிறது. சில கல்வெட்டுகளில் இவ்வூரின் பெயர் திருவாடவாயில் என்று குறிக்கப்பட்டுள்ளது. ஊரின் பெயரை "இடைவாய்" எனக்கொண்டு தற்காலத்தில் இறைவனை "இடைவாய்நாதர்" என்றழைக்கும் மரபும் காணப்படுகிறது.

பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூர் மங்கலநாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஊராகத் திகழ்ந்திருக்கிறது. மங்கல நாட்டிற்குட்பட்ட பிற கிராமங்களாக மங்கலம் (பெருமங்கலம்), புதுக்குடி என்ற பிற கிராமங்கள் விளங்கியிருக்கின்றன.

## திருவீழிமிழலை

இருபத்துநான்கு தேவாரத் திருப்பதிகங்களைப் பெற்ற வரலாற்றுச் சிறப்பு மிக்க இவ்வூர், காவிரித்தென்கரைத் தலங்களில் 61-ஆவது தலமாகப் போற்றப்படுகிறது. அரிசிலாற்றின் வட கரையில் பூந்தோட்டம்-கும்பகோணம் பேருந்துத் தடத்தில் பூந்தோட்டத்திற்கு மேற்கில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வருகை புரிந்து திருஞானசம்பந்தர் பதினைந்து பதிகங்களையும், திருநாவுக்கரசர் எட்டுப் பதிகங்களையும், சுந்தரர் ஒரு பதிகத்தையும் பாடியுள்ளனர். எனவே கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள பெருநலமுலையம்மை உடனுறை வீதியழகர் திருக்கோயிலும் சிறப்புடன் விளங்கிவருகின்றன எனலாம். மிழலை என்ற ஊர்ப்பெயர்க்கூறு சங்க காலத்திலிருந்தே வழக்கிலிருந்து வருவதும் ஈண்டு கவனத்திற்குரியது. வீழிச் செடிகள் மிக்கிருந்ததால் இவ்வூருக்குத் திருவீழிமிழலை என்ற பெயர் ஏற்பட்டதெனலாம். இவ்வூரின் தலக்கொடி வீழி என்பதும் ஈண்டு கவனத்திற்குரியது. திருமால் தம் கண்ணையே எடுத்து இறைவனுக்குச் சாத்திய தலமாதலால் இவ்வூருக்குத் திருவீழிமிழலை என பெயரேற்பட்டதாகப் புராணரீதியாக ஒரு கருத்தும் சொல்லப் பட்டு வருகிறது. எனவே இவ்வூர் இறைவனுக்குச் சுந்தர குசாம்பிகை சமேத நேத்திரார்ப்பணேசுவரர் என்ற பெயர் வட மொழியில் வழங்கி வருகிறது. சக்கரம் வேண்டித் திருமால் ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு வழிபடும்போது ஒருநாள் ஒரு பூ குறைய தமது கண்ணையிடந்து சாத்தி வழிபட்டுச் சக்கரத்தைப் பெற்ற செய்தி அப்பர் பெருமானின் திருநேரிசைப்

பாசுரத்திலேயே சொல்லப்பட்டுள்ளதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இச்செய்தி வழங்கி வருகிறதெனலாம்.

தில்லை மூவாயிரவர் போலத் திருவீழிமிழலையில் ஐநூறு அந்தணர்கள் இருந்தனர் என்பதற்கு,

ஐநூற்றந்தணர் ஏத்தும் எண்ணியல் கோடி
குணத்தர் ஏர்வீழி இவர்நம்மை ஆளுடையாரே

என்ற திருவிசைப்பா அடிகள் சான்றாகின்றன. இவ்வூரில் நான்மறைகளில் வல்ல அந்தணர் நிறைந்திருந்தமையை தேவாரப் பதிகங்கள் திரும்பத்திரும்ப எடுத்துச் சொல்லும் செய்திகளிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அரிசிலாற்றின் கரையில் அமைந்திருப்பதால், இவ்வூர் வளம் மிகுந்த பகுதியாக விளங்கி வருகிறது. தேவாரப் பதிகங்கள் பாராட்டிப் போற்றும் வரிகளால் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலிருந்தே இவ்வூர் வளம் மிக்கிருந்ததைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

சைவப் பெருமக்களாகிய திருநாவுக்கரசருக்கும், திருஞான சம்பந்தருக்கும் திருவீழிமிழலை இறைவன் படிக்காசு கொடுத்தருளி, அவர்களைச் சூழ்ந்திருந்த அடியார் கூட்டத்திற்குப் பஞ்சகாலத்தில் அதன்மூலம் உணவு கிடைக்கச் செய்த பெருமைமிக்க தெனவும் இவ்வூரைப்பற்றி ஒரு செய்தி சொல்லப்பட்டு வருகிறது.

இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பிரிவிற்குட்பட்ட வெண்ணாட்டுப் பிரிவிற்குள் இருந்திருக்கிறது. பொதுவாக இவ்வூரிலுள்ள சிவாலயம் திருவீழி மிழலை உடையார் எனச் சோழர் கல்வெட்டுகளில் சுட்டப் பட்டுள்ளதெனினும், விசயாலயசோழன் காலக் கல்வெட்டில் இறைவன் பெயர் திருத்தான்தோன்றி பட்டாரகர் என்றும், திருத்தான்தோன்றி மகாதேவர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. முதலாம் பராந்தகன் கல்வெட்டொன்றிலிருந்து இவ்வூரில் திருவகத்தீசுவரத்துப் பெருமானடிகள் என்ற பெயரில் மற்றொரு சிவாலயமிருந்ததையும் தெரிந்துகொள்ள முடிகிறது. இவ்வூரில் சோழர் காலத்திலேயே காடுகாள் கோயிலும், அய்யனார் கோயிலும், பிடாரி கோயிலும் இருந்திருக்கின்றன. இவ்வூரிலும்

இவ்வூர் அருகிலும், இராசராசவாய்க்கால், குந்தவைவதி, பட்டாலீ வதி, பரகேசரிப் பெருவழி, சுந்தரசோழப் பெருவழி, வராகக்குளம், எழுநூற்றுவன் அம்பலம், திருவீழிமிழலைப் பெருந்தெரு, திருவீழி மிழலைத் திருவிழா வீதி, விக்னேசுவரப் பெருந்தெரு, பாற்குளம், திருநாவுக்கரையன்குளம், அனபாயவதி, அருமொழிதேவவாய்க்கால், போன்றவை இருந்திருக்கின்றன.

முதலாம் பராந்தகசோழன் ஆட்சிக்காலத்தில் திருவீழிமிழலை உடையார்க்கு ஸ்ரீபலி கொண்டெழுந்தருளுவதற்காக 240 கழஞ்சு எடையில் வெள்ளியில் ஸ்ரீபலித்தாலம் ஒன்று தானமாக வழங்கப் பட்டிருக்கிறது. தினமும் திருவீழிமிழலை உடையார் கோயிலில் பிராமணர் நால்வருக்கு உணவளிக்க வேண்டி ஆண்டொன்றுக்கு நூற்றிருபது கலம் நெல் செலவிடப்பட்டிருக்கிறது. கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் திருவீழிமிழலை உடையார் கோயிலுக்கென்று உமைநங்கை நந்தவனம், திருத்தான் தோன்றி பட்டாரகர் நந்தவனம் என்று இரு நந்தவனங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

கி.பி. 10-ஆம் நூற்றாண்டளவில், இளைய கைக்கோளப் பரிவாரத்தினைச் சேர்ந்த வாணியன் அரிகுலகேசரி விழுப்பரையன் என்பவர் திருவீழிமிழலை உடையார்க்குக் "காலகாலன்" என்ற பெயரில் வாள் ஒன்றினை அளித்துள்ளார். ஸ்ரீபலி எழுந்தருள வேண்டி வெள்ளியில் சந்திரசேகரர் திருமேனி ஒன்றினைக் கீழையில் செல்வன் மூவாயிரபட்டன் என்பவர் எழுந்தருளுவித் திருக்கிறார்.

முதலாம் இராசராசசோழனின் ஆட்சிக் காலத்தில் திருவீழி மிழலை உடையார் கோயிலில் சிறுகாலை, இரவு ஆகிய இரண்டு சந்திகளின் போதும் இறைவன் ஸ்ரீபலி எழுந்தருளிப் புகுமளவும் திருப்பதியம் விண்ணப்பம் செய்யப்பட்டிருக்கிறது. திருப்பதியம் விண்ணப்பம் செய்வாருக்கு முக்குறுணி நெல் ஊதியமாக வழங்கப் பட்டிருக்கிறது. இம்மன்னனின் ஆட்சிக்காலத்தில் திருவீழிமிழலை யுடையார் கோயிலில் சித்திரைத் திருநாள் ஏழுநாட்கள் மிகச் சிறப்பாக நடந்திருக்கிறது. இவ்விழாச் சேவிக்க வந்த சிவயோகி களுக்கும், தபசிகளுக்கும் நாள் ஒன்றுக்கு மூன்று கல அரிசி என்ற கணக்கில் ஏழு நாட்களுக்கு இருபத்தொரு கலவரிசியால்

உணவளிக்கப்பட்டிருக்கிறது. திருவீழிமிழலை உடையார் கோயிலுக்கு மூன்று சந்தியும் அரிசிலாற்றிலிருந்து வழியாகத் திருமஞ்சன நீர் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இக்கோயிலிலுள்ள இடபவாகன தேவருக்கும், நின்ற தேவியாருக்கும் சாத்தியருள ஆபரணங்கள் செய்யப்பட்டுள்ளன.

முதலாம் இராசேந்திரசோழனின் ஆட்சிகாலத்தில் இராசேந்திர சோழ அணுக்கப்பல்லவரையன் என்பவரின் தாயார் சீதேவி என்பவர் திருவீழிமிழலை உடையார் கோயிலில் "அழகிய மணவாளர்" என்ற பெயரில் செப்புத்திருமேனி ஒன்றினை எழுந்தருளுவித்திருக்கிறார். பாம்பூர்நாட்டு கோனார் ஆதிச்சனான செம்பியன் என்பவர் 1500 கலம் நெல் வழங்கி, அதன் வட்டியி லிருந்து திருவீழிமிழலை தேவருக்கு மூன்று சந்தியும் திருவமுது செய்யவும், இக்கோயிலிலுள்ள ஸ்ரீகிருஷ்ணருக்குத் திருவமுது செய்யவும், பாம்பூர் நாட்டுக்கோனார் பிறந்த நாளான புரட்டாசித் திங்கள் ரேவதி நாளன்று சிறப்பு வழிபாடு செய்யவும் ஏற்பாடுகள் செய்திருந்தார்.

சோழமன்னன் முதலாம் இராசாதிராசனின் காலத்தில் திருவீழி மிழலை உடையாரின் தேவதான நிலங்களைத் திருவீழிமிழலை யினின்றும் வேறு பிரித்துச் "செயங்கொண்ட நல்லூர்" என்ற தற்குப் பெயருமிட்டிருக்கிறார்கள். முதலாம் இராசாதிராசன் காலத்தில் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் பணியில் ஆறுபேர் இருந்துள்ளனர். இவர்களுக்கு முந்நூற்றுப் பதின்கலம் நெல் ஊதியமாக வழங்கப்பட்டிருக்கிறது. சிவதர்மம் வாசிக்கும் பணியில் ஒருவர் இருந்திருக்கிறார். இவருக்கு அறுபதின் கலம் நெல் ஊதிய மாக வழங்கப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் கரடிகை உட்பட இசைக்கருவிகளை இசைக்கும் இசைக்கலைஞர்கள் பலர் பணியாற்றி யுள்ளனர். இவ்வூர் பிள்ளையார் கோயிலுக்கு "அரசேறியிருந்த பிள்ளையார் கோயில்" என்ற பெயர் வழங்கியிருக்கிறது. இக் கோயில் திருவிழாவின்போது சாக்கைக்கூத்து ஆறு அங்கம் ஆடப் பட்டிருக்கிறது. இதனை ஆடிய கலைஞருக்கு அறுபது கலம் நெல் ஊதியமாக வழங்கப்பட்டிருக்கிறது. முதலாம் இராசாதிராசன் காலத்தில் இக்கோயிலுக்காக ஒன்பது நந்தவனங்கள் இருந் திருக்கின்றன. இந்த நந்தவனங்களைப் பராமரிக்கும் நந்தவனக் குடிகளாகப் பதினான்கு பேர் இருந்துள்ளனர். இவர்களுக்கு

ஊதியமாக நானூற்றிருபது கலம் நெல் வழங்கப்பட்டு வந்திருக்கிறது. இக்கோயிலுக்கென்றே கொல்லரும், தச்சரும் இருந்துள்ளனர். கொல்லருக்கு இருபத்திருகலனே தூணிப்பதக்கு நெல் ஊதியமாக வழங்கப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் திருப்பூரத்திருநாளும், அசுவதித்திருநாளும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்திருக்கின்றன. இக்கோயிலிலுள்ள கணபதியாருக்குத் திருவமுது படைப்பதற்கு முப்பத்தொரு கலனே இருதூணி எழுநாழி உழக்கு, நெல் செலவிடப்பட்டிருக்கிறது. சுப்பிரமணியரின் திருவமுதுக்கும் இதே அளவு நெல் செலவிடப்பட்டிருக்கிறது. சேத்திரபால தேவருக்கு இருபது கலனே தூணி உழக்கு நெல் செலவிடப்பட்டுள்ளது. துர்க்கையாருக்கு அமுதுபடைக்க எழுபத்திருகலனே குறுணி நாழி உழக்கு நெல்லும், சூரியதேவரின் திருவமுதுக்காக இருபத்துநாற்கலனே குறுணி ஐந்துநாழி நெல்லும் செலவிடப்பட்டிருக்கின்றன. முதலாம் இராசாதிராசசோழன் காலத்தில் இவ்வூர்க் கோயிலிலிருந்த இடபவாகன தேவருக்கு "வானவந் நாயகர்" என்ற பெயர் வழங்கியிருக்கிறது. இம்மன்னன் காலத்தில் இவ்வூரிலிருந்த சாலையில் இருபத்தேழு பிராமணர்கள் இருந்திருக்கின்றனர். இவர்களுக்கு இச்சாலையில் உணவளிக்கப்பட்டு வந்திருக்கிறது.

பட்டாலிநங்கை என்பவர் முதலாம் இராசாதிராசன் காலத்தில் அரசனுக்கு மிகவும் நெருக்கமானவராகவும், செல்வாக்குப் பெற்றவராகவும் திகழ்ந்தவர். இவரைக் கல்வெட்டுகள் "விஜையராஜேந்திர தேவர் அணுக்கியார் பல்லவன் பட்டாலிநங்கையார்" எனக் குறிக்கின்றன. முதலாம் இராசாதிராசன் காலத்தில் இவ்வம்மையார் சார்பாகத் திருவீழிமிழலை உடையார் கோயில் செம்பொன்னால் பொன் வேயப்பட்டுள்ளது. மேலும் இவ்வம்மையார் இக்கோயிலிலிருந்த திருவீழிமிழலை உடையார், அவரது நம்பிராட்டியார், சுப்பிரமணிய தேவர், கிராதார்ச் சீனிய தேவர், அவரது நம்பிராட்டியார், இடபவாகன தேவர், சண்டேசுவர தேவர் போன்ற இறைத் திருமேனிகளுக்குக் கோசகம், கொடுக்கு, ஸ்ரீபாதபுஷ்பம், பொற்பூ, வட்டப்பொற்பூ, செங்கழுநீர்ப் பொற்பூ, ஒப்பக்காறை, திருக்கைக்காறை சண்பங்காறை, கள்ளிப்பூ, அரசிலை போன்ற பல தங்க ஆபரணங்களையும் செய்தளித்துள்ளார். இவ்வம்மையார் தன் பெயரால் பட்டாலி ஈசுவரம் என்ற கோயிலையும் ஏற்படுத்தி, அக்கோயிலுக்கு

நூற்றியிருபத்தெட்டுக் கழஞ்சு நாலு மஞ்சாடி குன்றிப் பொன் தானமும் அளித்துள்ளார். இதனைக் கொண்டு பட்டாலி ஈசுவர முடையார் நீராட்டு விழாவின்போது, பாக்கு வெற்றிலையுடன் பெருந்திருவமுது படைக்கப்பட்டிருக்கிறது. இப்பட்டாலி நங்கை யாரின் பணிப்பெண் ஒருத்தி, திருவீழிமிழலைக் கோயிலில் தலை உவா, (அமாவாசை) கடை உவா (பௌர்ணமி) ஆக ஆண்டொன்றுக்கு வரும் 24 உவாக்களின் போது, மாவிடித்து அப்பம் சுட்டு இறைவனுக்குப் படைக்கவும், அச்சமயங்களில் கணபதிக்கு ஓரடையமுது படைக்கவும் கொடையளித்துள்ளார். இரண்டாம் இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில் மன்னனின் பிறந்த நாளான திருவாதிரை நாட்களில், திருவீழிமிழலை உடையார் கோயிலில் திருவிழா எழுந்தருளுகைக்காகப் பட்டாலி நங்கையார் கொடையளித்துள்ள செய்தி திருவீழிமிழலைக் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது. எனவே முதலாம் இராசாதிராசனின் ஆட்சிக்குப் பின்னரும் இவ்வம்மையார் செல்வாக்குடனேயே இப்பகுதியில் இருந்துள்ளார் எனத் தெரிகிறது. இவ்வம்மையார் பெயரில் பட்டாலி நங்கை என்ற திருமேனியும் இக்கோயிலிலிருந்ததாகத் தெரிகிறது.

திருவீழிமிழலைக் கோயில் மகாமண்டபத்தில் பக்கவாட்டில் உள்ள மண்டபம் கி.பி. 11-ஆம் நூற்றாண்டளவில் உக்கல் கிழான் எதிரிலிசோழன் என்கிற பல்லவராயனால் கட்டப்பட்டுள்ளது.

திருவீழிமிழலைக் கோயிலில, சுவறைநாயக தேவர், அவர்தம் பிராட்டியார் ஆகிய இறையுருவங்களுக்கு நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது படைக்க வேண்டியும், திருப்பரிச்சட்டத்துக்கும், திருவிளக்கெண்ணைக்கும், திருவிழா எழுந்தருளும் திருநாளுக்கும் என முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் நகரத்தார் அனைவரும் சேர்ந்து நிவந்தம் அளித்துள்ளனர். முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் திருவீழிமிழலை உடையார் கோயிலில் சித்திரைத் திருவிழாவும், மற்றுமொரு திருவிழாவும் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது. இத்திருவிழாக்களின் போது நாள் ஒன்றினுக்கு முப்பது கலம் நெல் செலவிடப்பட்டிருக்கிறது. விருதராஜ பயங்கர வளநாட்டு மேற்கால் நாட்டு விளந்தையூருடையான் சிற்றம்பலமுடையான் செய்யபொற்பாதம் என்பவர் வழங்கிய இருநூற்று இரு கழஞ்சரையே இரண்டு மஞ்சாடி நாலுமாப்பொன்

னோடு, குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர் நாட்டுச் சென்னி மங்கலமுடையான் தில்லை நாயகனான வாணாதிராயன் என்பவர் வழங்கிய நூற்று நாற்கழஞ்சே காலே இரண்டு மஞ்சாடி நாலுமாப் பொன்னையும் சேர்த்து, முந்நூற்று முக்கழஞ்சரைப் பொன்னால் திருவீழிமிழலை உடையாருக்குச் சாத்துவதற்காகத் திருக்கொள்கை ஒன்று கி.பி. 1074 அளவில் செய்யப்பட்டுள்ளது.

ஆவூரைச் சேர்ந்த வேளான் செந்தாமரைக் கண்ணனான காங்கயராயன் என்பவர் திருவீழிமிழலையில் வீழிநாதர் கோயிலில் விளக்கெரிக்க வேண்டி, விக்கிரமசோழன் காலத்தில் கொடையளித்துள்ள செய்தி திருவீழிமிழலைக் கல்வெட்டில் காணப்படுகிறது. இவர் வேண்டுகோளின்படி திருவீழிமிழலை உடையார் உச்சிசந்தி திருமந்திரப் போனகத்துக்கும் இரவைசந்தி திருமந்திர போனகத்துக்கும் "தத்தமங்கலம்" என்ற பெயரில், இறையிலி நிலம் விடப்பட்டுள்ளது. மேலும் இவர் பெயரில் திருவீழிமிழலையில் "செந்தாமரைக்கண்ணன் சாலை" என்ற சாலை ஒன்றும் செயல் பட்டுள்ளது. இச்சாலையில் உள்ளூர் பிராமணர் நித்தம் பத்துக் கலம் உண்ணத்தக்க வகையில் தத்தமங்கலத்தில் நிலம் வழங்கப் பட்டிருக்கிறது.

இரண்டாம் குலோத்துங்கனின் ஆட்சிக்காலத்தில் (கி.பி. 1136) அன்னியூர் ஊரார் மூவர், திருவீழிமிழலை கோயிலில் இருக்கும் நாட்டியத்தாங்குடி கோட்புலியாண்டார் என்பவருக்கு மடப்புற இறையிலி அளித்துள்ளனர். திருவீழிமிழலை உடையார் கோயிலில் இரண்டு திருவிழா சேவிக்க வரும் ஆண்டார்களுக்கு உணவளிக்கப் பட்டுள்ளது.

திருவீழிமிழலையுடையார் கோயிலுக்குள் பார்வதீசுவரமுடையார் கோயில் என்ற சன்னதி சோழர் காலத்திலேயே கட்டப்பட்டிருக்கிறது. திருவீழிமிழலையில் திருச்சுவர்க்கமுடையார் கோயில் என்ற சிவாலயமும் சோழர் காலத்திலேயே கட்டப் பட்டுள்ளது. திருவீழிமிழலை உடையார் கோயிலில் முதல் திருச்சுற்றுக்குள் திருவேகம்பமுடையார் என்ற சன்னதி சோழர் காலத்திலேயே இருந்திருக்கிறது. திருவீழிமிழலை உடையார் கோயிலில் மூன்றாம் திருச்சுற்றில் திருவாதவூர்த் தேவர் (மாணிக்க வாசகர்) சோழப் பெருவேந்தர் காலத்திலேயே எழுந்தருளுவிக்கப்

பட்டுள்ளார். மூன்றாம் இராசராசசோழனின் ஆட்சிக்காலத்தில் (கிபி. 1237-இல்) சுவாமிதேவர் என்பவர் தூமொழி ஞானசம்பந்தன் திருநந்தவனம் என்ற நந்தவனம் ஒன்றை உருவாக்கியிருக்கிறார். திருவீழிமிழலையில் சோழப்பெருவேந்தர் காலத்தில் இருந்த மடங்களுள் ஒன்றிற்குத் திருத்தொண்டத்தொகையான் திருமடம் என்ற பெயர் வழங்கியிருக்கிறது. இம்மடம் திருவீழிமிழலை உடையார் கோயில் திருமடைவிளாகத்துக்கு வடக்கில் திருவீதியில் வடசிரகில் இருந்திருக்கிறது. இம்மடம் கோட்டூருடையார் முதலியார் என்பவரால் ஏற்படுத்தப்பட்டதாக மூன்றாம் இராசேந்திரசோழன் காலக் கல்வெட்டொன்று (கி.பி. 1263) தெரிவிக்கிறது. திருவீழிமிழலை உடையார் கோயிலின் கீழைத் திருமடைவிளாகத்தில் திருஞானசம்பந்தர் மடம் என்ற மடம் இருந்திருக்கிறது. திருவீழிமிழலை உடைய நாயனார் கோயிலின் திருமடைவிளாகத்துத் திருமஞ்சன ஒழுக்கைக்குக் கீழ்புறத்தில் திருச்சிற்றம்பலமுடையார் திருமடம் என்ற மடம் இருந்திருக்கிறது. திருவீழிமிழலை உடையார் கோயிலின் வடக்கில் மடவிளாகத்தில் மகேசுவரர்களுக்காகத் திருநாவுக்கரைசு என்ற பெயரில் குகை ஒன்று இருந்திருக்கிறது.

திருவீழிமிழலை உடையாரின் தேவதானமான செயங்கொண்ட நல்லூரில் ''சிவலோகமுட்டயநாயனார்'' என்ற பெயரில் சிவாலயம் இருந்ததை மூன்றாம் இராசராசசோழன் கல்வெட்டொன்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது,

பாண்டிய மன்னன் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருக்கைக்கோட்டியில் திருமுறையார் திருமேனிகள் திருப்பாட்டுக் கேட்கவும், பூசைக்குமென்று திருக்கைக்கோட்டிப் புறமுமாகத் திருவீழிமிழலை உடையார்க்கு நிலம் வழங்கப்பட்டிருந்தது.

விசயநகரவேந்தர் விருபண்ண உடையார் ஆட்சிக் காலத்தில் கி.பி. 1385இல் காவிரிப்பூம்பட்டினத்து வியாபாரி கச்சிராய முனையதரையன் என்பவர், அரிசிலாற்றின் வடகரையில் ஐநூறு குழி நிலத்தினைத் திருவீழிமிழலை உடைய நாயனாருக்குத் திருநந்தவனப்புறமாக வழங்கியிருக்கிறார்.

கி.பி. 1810ஆம் ஆண்டில் விழிநாத சுவாமியார் தேர்மேட்டு மண்டபத்தினைப் பழியஞ்சியநல்லூரைச் சேர்ந்த இராமலிங்க நயினாருடைய குமாரியும், வீழிநாதநயினாருடைய மனைவியும், இராமசுவாமி நயினாருடைய தாயாருமான சிவப்பினாச்சியார் என்பவர் கட்டியிருக்கிறார்.

திருவீழிமிழலைக் கோயிலில் உள்ள ஒரு மண்டபத்தில் கி.பி. 15-16ஆம் நூற்றாண்டுக் கலைப்பாணியில் அமைந்த எழிலோவியம் உள்ளது. இவ்வோவியத்தில் வேணுகோபாலன், காளிங்கநர்த்தனர் போன்றோர் உருவங்கள் எழிலுடன் தீட்டப் பட்டுள்ளன.

**பத்தூர்**

நன்னிலம் பகுதியிலமைந்துள்ளது பத்தூர். ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகாலமாக இவ்வூருக்கு இப்பெயர் வழங்கி வருவதை இவ்வூர்க் கல்வெட்டுகளிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது இவ்வூருக்கு நல்ல பெருமாள் சதுர்வேதிமங்கலம் என்ற பெயரும் வழங்கியிருக்கிறது. இவ்வூரிலுள்ள பெருமாள் கோயிலுக்கு ஆனைகாத்த பெருமாள் கோயில் என்ற பெயரும் சிவாலயத்திற்கு விசுவேசுவரதேவர் கோயில் என்ற பெயரும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. பராக்கிரம பாண்டியனது ஆட்சிக்காலத்தில் இவ்வூரின் மேலைமங்கலவீதியின் வடதுண்டம் கீழ்சிறகில் இருந்து ஒரு மனையைப் பற்றிய வழக்கினை சிவா லயத்தின் தானத்தாரும், பெருமாள் கோயில் திருப்பதியாரும் எழுப்ப இதனால் இரு கோயில்களிலுமே பூசை தடைபட்டிருந் தமையை இவ்வூர்க் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. நிலங்கலந்த மகேசுவரர் உடையார் கோயில் திருப்பணி அம்மை, இரண்டு கோயில் தானிகர்கள், சபையார், பல்லவராயர், சோளசிங்கராயர், நாட்டார், ஆசாரியக்காணி உடைய இராசகம்பீர ஆசாரியன் ஆகியோர் இவ்வழக்கில் பங்கு பெற்றிருக்கின்றனர்.

பத்தூரிலிருந்து கண்டெடுக்கப்பட்ட ஒரு நடராசர் செப்புத் திருமேனி இங்கிலாந்தில் இருந்தது. அதனை நம்நாட்டிற்குக் கொண்டுவருவதற்காக இந்தியஅரசு லண்டன் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தது. இவ்வழக்கில் நமது அரசின் சார்பில் வழக்கறிஞர்களுக்கு உதவும் வல்லுநர்களாகத் தொல்லியல்

துறையின் முன்னாள் இயக்குநர் முனைவர் இரா. நாகசாமியும், தடவியல்துறை முன்னாள் இயக்குநர் முனைவர் சந்திரசேகரன் அவர்களும் பணியாற்றினர். அவர்கள் தங்களது அறிவியல் அறிவு, ஆகம, சிற்பக் கலைநுட்ப அறிவு ஆகியவற்றைப் பயன்படுத்திச் சிறப்பாகப் பணியாற்றி அந்நடராசர் திருமேனி பத்தூர் மண்ணைச் சேர்ந்ததே என்று நிலை நாட்டினர். இறுதியில் அத்திருமேனி நமது நாட்டிற்கே கொண்டுவரப்பட்டது'

## பருத்தியூர்

இவ்வூரிலுள்ள சிவன்கோயிலில் ஆறு கல்வெட்டுகள் உள்ளன. மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் கல்வெட்டுகள் இங்கு காணப்படுகின்றன. திருவாதித்தீசுவரமுடையார் கோயில் ஆதிசண்டேசுவரர்க்கும், மாகேசுவரர்க்கும் விக்கிரமசோழபுரத்து நகரத்தார் நிலம் விற்றுக் கொடுத்த செய்தியை ஈசுவரன்கோயில் குலோத்துங்கசோழன் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இக் கல்வெட்டில் நகரத்தார்களின் கையெழுத்துக்களும் காணப்படு கின்றன. ''பருத்தியூர்'' அக்காலத்தில் அனபாயபுரம் என்று அழைக்கப்பட்டது.

இவ்வூரிலுள்ள திருஆதித்த ஈசுவரம் உடையார் கோயிலுக்குத் திருநாமத்துக் காணியாக நிலம் விற்றுக்கொடுக்கப்பட்டது. இங்குள்ள விநாயகர் குலோத்துங்கசோழ விநாயகர் என்று அழைக்கப்பட்டுள்ளார். வியாபாரி ஆலவாயுடையான் இக் கோயிலின் ஒரு பகுதியைக் கட்டிய செய்தியை மூன்றாம் இராச ராசனின் கல்வெட்டு தெரிவிக்கின்றது. கி.பி. 12 - 13-ஆம் நூற்றாண்டில் ஆலவாயுடையான் என்ற வியாபாரி ஆதித்தீசுவரம் உடையாரை எழுந்தருளுவித்தான். இக்கோயிலின் கட்டடப் பகுதியிலுள்ள ஒவ்வொரு கருங்கல்லிலும் அக்கல்லை அளித்தவனின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. ஆதித்தீசுவரர் உடையார் கோயிலுக்கு நிசும்பன் என்பவன் சில காசுகளைத் தானமாக வழங்கிய செய்தியும், அதற்கு வட்டியாக ஆண்டுக்கு எட்டுத்திரமம் வசூலிக்கப்பட்டது என்றும் ஒரு கல்வெட்டு கூறுகின்றது.

## பாலையூர்

குடவாசலருகில் அமைந்துள்ள பாலையூர் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊராகத் திகழ்ந்து வருகிறது. மனுநீதி சோழனிடம்

அமைச்சராக இருந்தவர் என இவ்வூரைச் சேர்ந்த உபய குலாமலன் என்பவர் கருதப்படுகிறார். இவ்வமைச்சரின் வழித் தோன்றலாக, இவ்வூரைச் சேர்ந்த சந்திரசேகரனாதி விடங்கனான குலோத்துங்க சோழ மகாபலிவாணன் என்பவர் குறிப்பிடப்படுகிறார். இவர் விக்கிரம சோழனின் சமகாலத்தவர். முதலாம் இராசராசன் தான் தஞ்சையில் எடுப்பித்த தஞ்சைப் பெருங்கோயில் இறைவனான இராசராசீச்வரமுடைய பரமசுவாமிக்கு வேண்டும் நிவந்தங்களுக்காகத் தேவதானமாகப் பல ஊர்களைத் தஞ்சைப் பெருங் கோயிலுக்களித்த போது இப்பாலையூரையும் அளித்திருக்கிறார். இப்பாலையூரில் முதலாம் இராசராசன் காலத்தில் சமணப் பள்ளியும், குளமும், கம்மாளச்சேரியும், பறைச்சேரியும், சுடுகாடும் இருந்திருக்கின்றன. இவ்வூரிலிருந்து தஞ்சைப் பெருங்கோயிலுக்கு 12,530 கலம் 3 தூணி 1 குறுணி 1 நாழி நெல் காணிக் கடனாக (125 வேலிக்கும் கூடுதலான இறைகட்டின நிலத்திலிருந்து) வழங்கப் பட்டிருக்கிறது. இச்செய்தி தஞ்சைப் பெருங்கோயிலில் விமானத்தின் தென்புறச்சுவரில் கல்வெட்டாகப் பொறிக்கப் பட்டுள்ளது.

இப்பாலையூர் பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் இங்கணாட்டுக்குட்பட்ட ஒரு கிராமமாக திகழ்ந்திருக்கிறது. இந்த இங்கணாட்டுப் பகுதிக்குட்பட்ட பிற கிராமங்களாகச் செழிய மங்கலம் (சோழமங்கலம்/ஆதிசோழமங்கலம்) கீழ்வடுகக்குடி, பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் (எண்கண்), இங்கண் (எண்கண்), விருதராச பயங்கரபுரம் (விடையபுரம்/திருவிடைவாசல்) இராசகேசரி நல்லூர் (இராதா நல்லூர்) இராசகேசரி நல்லூரான தண்ணீர்க் குன்னம் (தண்ணீர்க்குன்றம்), ஆரப்பாழ், கீரன் தேவன் குடி (கிரந்தங்குடி) பன்னூர் (பெரும் பண்ணையூர்), தீபங்குடி ஊர்க்குடி ஓகையூர் (கீழஓகை), நெற்குப்பை, கொற்றங்குடி (கீழக் கொத்தங்குடி), காற்றூர் (காட்டூர்), சிறுகுடி (திருச்சிறுகுடி) முகந்தனூர் (முகந்தனூர்), அன்னவாசல் (அண்ணல்வாயில்), வடகண்டம், செல்லூர் விளக்கொளிமங்கலம் போன்றவை திகழ்ந் திருக்கின்றன.

## புளியஞ்சேரி

விசயநகர மன்னன் கிருட்டிணதேவராயரது ஆட்சிக் காலத்தில் இவ்வூர் புலையஞ்சேரி என்ற பெயரில் இருந்திருக்கிறது.

புலையச்சேரியையும் மதுராந்தகநல்லூர் என்ற மற்றொரு ஊரையும் சேர்த்து ஸ்ரீநரசிம்மேந்திரபுரம் என்று பெயர் சூட்டி சம்கிருதிகோத்ரத்தையும், போதாயன சூத்ரத்தையும் சேர்ந்த பாசுகர பட்டர் என்பவரின் புதல்வரான கசுதகிரி(ஹஸ்தகிரி) என்பவருக்குக் கொடையாக வழங்கியிருக்கின்றனர். இவ்வூர் குலோத்துங்க சோழவளநாட்டிற்குட்பட்ட ஆளூர் சாவடிக்குட்பட்ட கிராமமாக விசயநகரப் பேரரசுக் காலத்தில் விளங்கியிருக்கிறது. இவ்வூரைத் தானமாகப் பெற்ற அந்தணர், அதனைப் பல்வேறு கோத்ரங்களையும் சூத்ரங்களையும் சேர்ந்த பல அந்தணர்களுக்கும் பகிர்ந்தளித்திருக்கிறார்.

## வண்டுவாஞ்சேரி

குடவாசல் கும்பகோணம் சாலையில் அமைந்துள்ள இவ்வூர் பிற்காலச்சோழர் காலத்தில் "வண்டாழஞ்சேரி" என்று அழைக்கப் பட்டதைக் கல்வெட்டுகளால் அறியமுடிகிறது. வண்டாழஞ்சேரி என்ற பெயரே நாளடைவில் வண்டுவாஞ்சேரி என்று மருவி யிருக்கிறது. இவ்வூர் பிற்காலச் சோழர் காலத்தில் திருநறையூர் நாட்டுப் பகுதிக்குட்பட்ட ஊராக இருந்திருக்கிறது.

முதல் பராந்தக சோழனின் அதிகாரிகளில் ஒருவ னாகிய மூவேந்த வேளான்சாத்தன் உலகன் என்பவனும், முதலாம் குலோத்துங்கசோழனின் படைத் தளபதியாக விளங்கி கலிங்கப்போரில் பங்கு கொண்ட, மாவீரன் கருணாகரத் தொண்டைமானும், கலிங்கப்போரில் பங்கு கொண்ட மற்றொரு வீரனாகிய வாணகோவரையன் சுத்தமல்லன் உத்தமசோழனாகிய இலங்கேசுவரன் என்பவனும் இவ்வூரினர் என்பது குறிப்பிடத் தக்கது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு சோழர்காலத்தில் மெய்க்காப்பளித்த ஊர்களுள் இவ்வூரும் ஒன்று.

## வடமட்டம்

இவ்வூர் வயலூருக்கு கிழக்கே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இவ்வூரில் உள்ள முன்னாள் கிராம அலுவலர் அருணாசலம்பிள்ளை என்பவரது வீட்டில் தனிக்கல்லில் பொறிக்கப் பட்டுள்ள கி.பி. 19ஆம் நூற்றாண்டு கல்வெட்டில் இவ்வூர் வடமுட்டம் என்று குறிக்கப்பட்டுள்ளது. திருநல்லம் கோயிலுக்கு

(கோனேரிராஜபுரம்) தென்னந்தோப்பு, சன்னதவெளிவறையர் தோப்பு தானமளித்த செய்தி இதில் கூறப்பட்டுள்ளது.

## வயலூர்

இவ்வூரில் உள்ள கார்கோடகேசுவரர் கோயில் எனப்பட்ட சோழர் காலத்து கோயிலில் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு துண்டு கல்வெட்டுகள் உள்ளன. கி.பி. 1554ல் மகாமண்டலேசுவரன் உருத்திரதேவசோழமகாராசன் என்பவன் கும்பகோணத்திலுள்ள கோயிலுக்கு வயலூர், ஏழாங்கட்டளை ஆகிய இரண்டு ஊர்களையும் அளித்தான் என்று அக்கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இவ்வூர் வடமட்டம் அருகில் உள்ளது. இவ்வூர் பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டிற்குட் பட்ட வெண்ணாட்டிலிருந்திருக்கிறது. இவ்வூரார் முதலாம் இராசராச சோழனின் ஆட்சிக்காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலுக்குத் திருமெய்க்காப்பு ஒன்று இட்டு, திருமெய்க் காப்பாளருக்கு ஆண்டொன்றுக்கு நூறுகல நெல்லைக் கூலியாக வழங்கி வந்திருக்கின்றனர்.

## வடுகக்குடி

பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூர் "வடுகக்குடி" என்ற பெயரிலேயே குறிக்கப்பட்டிருப்பதால், ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக இவ்வூருக்கு இப்பெயர் வழங்கி வருகிறதெனலாம். சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூர் பாம்பூர் நாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்திருக்கிறது. இவ்வூருக்கருகில் சுந்தரசோழப் பெருவழி என்ற பெருவழி ஒன்றிருந்திருக்கிறது. இவ்வூரில் கி.பி. பத்தாம் நூற்றாண்டில் கோயில்கள், சுடுகாடு, ஈழச்சேரி கம்மாளச்சேரி, பறைச்சேரி, வண்ணாரச்சேரி, பறைக்குளம் ஆகியவை இருந்திருக்கின்றன. தஞ்சைப் பெருங்கோயிலுக்கு முதலாம் இராசராசனால் தேவதானமாக வழங்கப்பட்ட ஊர்களில் இதுவும் ஒன்றாகும். இவ்வூரிலிருந்து தஞ்சைப் பெருங்கோயிலுக்கு 2640 கலத்திற்கும் கூடுதலான நெல் வழங்கப்பட்டிருக்கிறது. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில் இச்செய்தி காணப்படுகிறது. இவ்வூர் சோழர் காலத்தில் கீழ்வடுகக்குடி என்று அழைக்கப்பட்டிருக்கிறது.

### விசுவநாதபுரம்

மன்னார்குடி விசுவநாதசுவாமியின் பெயரால் இவ்வூருக்குத் தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக்காலத்தில் விசுவநாதபுரம் என்ற பெயரேற்பட்டிருக்கிறது. மன்னார்குடி விசுவநாதசுவாமி கோயிலுக்குச் சொந்தமான கொரடாச்சேரியைச் சேர்ந்த மங்கலம் அக்கிரகார கிராமத்தில் 25-3/4 வேலி $2\frac{1}{2}$ மா நிலம் பல நாட்களாகப் பயிரிடப்படாமல் அனாதி தரிசாக இருந்ததைத் தொடர்ந்து, "விசுவநாதபுரம்" என்று பெயரிடப்பட்டு பாடகசாலைத் தருமமாகச் சுரோத்திரியம் செய்து வழங்கப்பட்டிருக்கிறது. வேதம் வல்ல பிராமணர்களுக்கு மராட்டிய மன்னர்களால் வழங்கப்பட்ட நிலம் சுரோத்திரியம் எனப்படும். பாடகம் சொல்லுதல் என்ற தொடருக்குப் புராணக் கதைகளை அபிநயித்து சொல்லுதல் எனப் பொருள். எனவே விசுவநாதபுரத்தில், தஞ்சை மராட்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் புராணக் கதைகளை அபிநயித்துச் சொல்லித்தரும் பாட(க) சாலை ஏற்படுத்தப் பட்டது எனலாம்.

### விஷ்ணுபுரம்

பிற்காலச் சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூருக்கு விஷ்ணுவர்த்தனபுரம் என்ற பெயரும், இவ்வூரிலுள்ள சிவாலயத்திற்கு நாகீசுவரமுடைய மகாதேவர் கோயில் என்ற பெயரும் வழங்கி வந்திருக்கின்றன. விஷ்ணுபுரத்து நகரத்தார் விக்கிரம சோழனின் ஆறாவது ஆட்சியாண்டில் (கி.பி. 1124) அந்நகரத்திலுள்ள நிலங்களுக்கு முன்னர் கிராமக்காரியம் பேசினபடி கோயிலுக்குச் செலுத்த வேண்டிய இறையைச் செலுத்த இயலாத நிலையில், திருவீழிமிழலையுடையார் கோயில் தேவகன்மிகளையும், மாகேசுவரக் கண்காணிகளையும் அழைத்துத் திருவீழிமிழலை உடையார்க்கு அந்நிலங்களை விற்று இறையிலி செய்திருக்கிறார்கள். இதனைக் கொண்டு ஞாயிற்றுக்கிழமைதோறும், திருவீழிமிழலை உடையாருக்கும் ஆட்கொண்ட நாயகர்க்கும், கூத்தாடு மிழலை விடங்க தேவர்க்கும், சூரிய தேவருக்கும் திருவமுதுக்கும், சூரிய தேவர் எழுந்தருளும் போது சாத்தியருள செங்கழுநீர்ப் பள்ளித் தாமத்துக்கும் சேவிக்க வரும் அடியாருக்குச் சட்டிச்சோறு வழங்கிடவும் வழிவகை செய்திருக்கிறார்கள்.

திருவீழிமிழலை, திருவீழிநாதர் கோயில் உண்ணாழி மேற்கு அதிட்டானத்தில் உள்ள முதலாம் குலோத்துங்க சோழனின் 21-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றில் திருவீழிமிழலையில் உள்ள கவறை நாயக தேவருக்கும், அவர் நம்பிராட்டியாருக்கும் நகரத்தார் நிவந்தம் அளித்த செய்தி காணப்படுகிறது, சற்று சிதைந்த இக்கல்வெட்டில் "திரிபுவந சுந்தரந் விஷ்ணுவத்த நகரமாந" என்ற தொடருள்ளதால், இக்கொடை விஷ்ணுவ(ர்)த்த நகரத்தாரால் வழங்கப்பட்டதெனக் கொள்ளவுமிடமுள்ளது. இதில் விஷ்ணுவத்த நகரம், "திரிபுவந சுந்தரந் விஷ்ணு வத்த நகரம்" எனக் குறிக்கப்பட்டுள்ளது.

## நன்னிலம் வட்டம்

அச்சுதமங்கலம்
அம்பர் (கோயில் திருமாளம்)
இடையாத்தங்குடி
இராமநதீச்சுரம்
உருத்திரகங்கை
ஒட்டக்குடி
கீரனூர்
கீழகரம்
கூத்தனூர்
கோட்டூர்
சிறுபுலியூர்
திருகொட்டாரம்
திருக்கொண்டீச்சுரம்
திருச்செங்காட்டங்குடி
திருப்பயத்தங்குடி
திருப்பனையூர்
திருமருகல்
திருமியச்சூர்
திருவாஞ்சியம்
தூத்துக்குடி
நல்லமாங்குடி
நன்னிலம்
பாவாட்டக்குடி
புத்தகளூர்
பெரியகண்ணமங்கலம்
பொறக்காரைக்குடி
போழக்குடி
முடிகொண்டான்
விற்குடி
வைப்பூர்

**அச்சுதமங்கலம்**

இவ்வூரில் உள்ள சோமநாதசுவாமி கோயிலில் இருபத்தெட்டு கல்வெட்டுகள் உள்ளன. இவை வீரராசேந்திரன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன், வீரபுக்கண்ண உடையார், இரகுநாத நாயக்கர் காலத்தவை ஆகும்.

இவ்வூர் சோழர்காலத்தில் (மூன்றாம் குலோத்துங்கன்) குலோத்துங்க சோழவளநாட்டு பனையூர்நாட்டுச் சோமநாதமங்கல தேவமங்கலம் என்றும், வீரபுக்கண்ண உடையார் (கி.பி. 1404) காலத்தில் குலோத்துங்க சோழ வளநாட்டு பனையூர் நாட்டு அச்சுதமங்கலம் சிவபாதசேகரமங்கலமான சோமநாதச்சதுர்வேதிமங்கலம் என்றும், அழைக்கப்பட்டது. எனவே அக்காலத்தில் அச்சுதமங்கலம் சோமநாததேவமங்கலம் என்றும், சிவபாதசேகரமங்கலம் என்றும், சோமநாதச்சதுர்வேதிமங்கலம் என்றும் அழைக்கப்பட்டமையை அறியலாம்.

இக்கோயில் நிலமான பதினைந்து வேலி நிலத்திற்குத் தலைமாறாக, வேறு இடத்தில் நிலம் கொடுத்த செய்தியை மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டு கூறுகின்றது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மற்றொரு கல்வெட்டு சோமனாதசுவாமி கோயிலுக்கு இறையிலியாக நிலம் அளித்த செய்தியைத் தருகிறது. மூன்றாம் குலோத்துங்கனின் கல்வெட்டு, சீரன் ஆட்கொண்ட நாயனான பாம்பூர் நாட்டுக்கோன் என்பவன் இறையிலி தேவதானம் அளித்த செய்தியையும் தெரிவிக்கிறது. மற்றொரு கல்வெட்டு இரண்டு வேலி நிலத்தின் உள்வரியை இறையிலியாக மாற்றிக் கோயிலுக்கு மன்னன் கொடுத்த செய்தியைக் குறிக்கின்றது. கோனேரின்மை கொண்டான் கல்வெட்டொன்று, சோமநாத மங்கலத்து மகாசபையினர் தங்கள் ஊர் பொதுவான நிலத்தை வைத்தியவிருத்திக்கு அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றது. மூன்றாம் இராசராசனின் நான்காவது ஆட்சியாண்டில் திருநட்டப் பெருமாள் உலகனான விசையாலய முத்தரையன் என்பவன் இவ்வூர் கோயில் திருப்பணி முதலியவைகளுக்கு இறையிலியாக நிலம் அளித்துள்ளான்.

மூன்றாம் குலோத்துங்க சோழனின் காலத்தில் உடையார் சோமனாததேவர் திருவுலா செல்லும் திருவீதி அகலம் போதவில்லை

என்பதால் அகலப்படுத்தப்பட்டிருக்கிறது. அத்திருவீதியில் வீடுகள் அதிக நெருக்கமின்றி இருந்ததால், தேவையான அளவு நிலத்தினைத் தூர்த்து அகலப்படுத்தினர். ஆனால் அவ்வாறு செய்கையில் சிலர் மட்டும் பாதிப்புக்குள்ளாகி அதை முறையிட்டனர். அதைக் கேட்டு நிருவாகத்தினர் சில விதிகளும், முறைகளும் இருப்பதை கூறினர். அதனை சோமநாதசாமி கோயில் மூன்றாம் குலோத்துங்கனின் இருபத்தொன்றாவது ஆட்சியாண்டு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

முளைத்தான் ஆன சண்டேசுவரபெருந்தச்சன், அவன் மனைவி சொன்னவாறு அறிவாள், இவர்கள் ஆண் மக்கள் நால்வர், மகள் ஒருத்தி ஆக ஏழு பேர் கொண்ட தச்சர் குடும்பம் தம்மை விற்றுக் கொண்டு அடிமையான செய்தியை சோமநாதசுவாமி கோயில் மூன்றாம் இராசராசனின் கல்வெட்டு கூறுகின்றது.

சோமநாதமங்கலத்துத் தச்சர்கள் சிலர், தாங்கள் குறிப்பிட்ட அளவு நிலம் கொடுப்பதன் மூலம் வரும் மொத்த நிலம் ஆறு மாவினையும், கொடுத்து இசைவுத்தீட்டு எழுதியதைக் கூறுகிறது. இவ்விசைவுத்தீட்டு, ஆண்டார் சோமநாததேவர்க்கும், சயதுங்கப் பிரம்மாதிராயனுக்கும் எழுதிக் கொடுத்த செய்தியைச் சோமனாத சுவாமிக் கோயிலில் உள்ள கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு தெரிவிக்கிறது.

சோழர்காலத்தில் சோமனாதச்சருப்பேதிமங்கலத்து ஊரார்க்கும், சீதக்கமங்கலத்து ஊரார்க்கும் முடிகொண்டசோழப் பேராற்றிலிருந்து பாசனத்திற்கு நீர் பாய்ச்சுவது பற்றி தகராறு ஏற்பட்டது. அந்தத் தகராறின் காரணமாக உடையானான இராசராசப் பேரரையன் என்பவன் தவறுதலாக மற்றொருவனுக்குப் பதிலாகத் தண்டிக்கப்பட்டான். பின்னர் இவனது மகனுக்கு ''உதிரப்பட்டியாக'' நிலம் கொடுக்கப்பட்டது. அந்நிலத்தை 2100 காசுகள் பெற்றுக் கொண்டு இறையிலியாக விற்றுக் கொடுத்த செய்தியைச் சோமனாதசுவாமி கோயில் மூன்றாம் இராசராசனின் இருபதாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இரகுநாதநாயக்கனின் பிரதிநிதி எல்லப்ப நாயக்கன் என்றும், அவன் மாதைய நாயக்கனின் மகன் என்றும், சோமநாதசுவாமி கோயில் இரகுநாதநாயக்கன் கல்வெட்டு கூறுகின்றது.

ஈசுவரசிவர் சோமேசுவரர், (சுவாமிதேவர்) சோழப்பெரு வேந்தன் மூன்றாம் குலோத்துங்கனின் இராசகுருவாக விளங்கியவர். இவர் அச்சுதமங்கலத்தில் எழுந்தருளுவித்த சிவாலயமே இன்றுள்ள சோமனாதசுவாமி கோயில். இதனை இக்கோயிலிலுள்ள கல்வெட்டு, சோமநாதமங்கலத்து உடையார் சுவாமிதேவர் எழுந்தருளுவித்த உடையார் சோமனாததேவர் கோயில்'' எனத் தெளிவாகச் சுட்டுகிறது. எனவே இக்கோயில் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் கட்டப்பட்ட கோயில் என்பது தெளிவாகிறது.

## அம்பர் (கோயில் திருமாளம்)

இவ்வூர் மயிலாடுதுறை-திருவாரூர் புகைவண்டித் தடத்தில் பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே நான்கு கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரைச் சேர்ந்த அம்பர்க்கிழான் அருவந்தை என்பவரைப்பற்றிச் சங்ககாலப் புலவர்களுள் ஒருவரான கல்லாடனார் சிறப்பித்துப் பாடியிருப்பதால், சங்ககாலம் தொடங்கியே இவ்வூர் சிறப்புடன் விளங்கி வருகிறது என்று கூறலாம். இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடி இருப்பதால், இவ்வூரிலுள்ள பெருந்திருக் கோயிலும், அம்பர்மாகாளக் கோயிலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகின்றன என்பது தெளிவு. அம்பர் பெருந்திருக்கோயிலைச் சோழப்பெருமன்னன் கோச்செங்கணான் கட்டிய மாடக்கோயிலாகக் கருதுவர். திருஞானசம்பந்தரும் தமது பதிகத்தில் ''அம்பர் மாநகர் குரிசில் செங்கண்ணவன் கோயில்'', ''அம்பர் மாநகர் செங்கண் நல்இறை செய்த கோயில்'', ''அம்பர்ச் செம்பியர் செய்யகண் இறை செய்த கோயில்'', ''செம்பியர் செறிசூழலிறை செய்த கோயில்'' என்று இவ்வுண்மையைக் குறிப்பிட்டுள்ளார். எனவே, இவ்வூர்க் கோயிலும் சங்ககாலச் சோழப்பெருமன்னன் கோச்செங்கணான் காலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகின்றது எனக் கொள்ளலாம்.

இவ்வூர் அரிசிலாற்றங்கரையில் அமைந்திருப்பதால், வளமுடன் விளங்கி வருகிறது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இவ்வூர் வளமுடன் விளங்கிய காட்சியினைத் தேவாரப் பதிகங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. இவ்வூரில் கி.பி. ஏழாம் நூற்றாண்

டளவிலேயே பல விழாக்கள் நடந்திருக்கின்றன. இதனைத் திருஞானசம்பந்தர் ''அங்கணி விழவமர் அம்பர் மாநகர்'' என்று பாடியுள்ளதால் நன்குணரலாம். தேவாரத் திருப்பதிகங்களில் அம்பர் மாநகராகக் குறிக்கப்படுவதால் இங்கு கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே வணிகர்கள் வாழ்ந்தமைப் புலனாகிறது. மேலும் வேள்வி செய்யும் அந்தணர் பலரும் வாழ்ந்தனர் என்பதை ''அழல்வளர் மறையவர் அம்பர்'' ''மறையார் நிறையம்பர்'' போன்ற தொடர்களால் ஞானசம்பந்தர் தெளிவாகச் சுட்டியுள்ளார். 'மடையார் புனலம்பர்'' என்ற தொடரால் மடைகள் மூலமாகத் தேவையான நீரைப்பெற்று, இங்கு வேளாண்மையும் சிறப்பாகச் செய்யப்பட்டதைக் குறிப்பாலுணர்த்தியுள்ளார்.

பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூரைச் சேர்ந்த மூன்று திருக்கோயில்கள் சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றன. 1) முகபகவர் தளி, 2) திருமாகாளம், 3) அவனிநாராயண விண்ணகர் என்று இவை பெயர் பெற்று விளங்கின.

முதலாம் இராசராசசோழன் தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் தளிச்சேரிப் பெண்டுகளைத் தேர்ந்தெடுத்து நியமித்தபோது, இவ்வூரிலிருந்து மட்டும் இருபது தளிச்சேரிப் பெண்டுகளைத் (ஆடல் மகளிர்) தேர்ந்தெடுத்திருக்கிறான். அவர்களுள் ஆறுபேர் அம்பர் திருமாகாளத்துக் கோயிலைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பெயர் வருமாறு: 1) நாங்கூரி, 2) ராஜராஜி, 3) அதிமானி 4) காமக் கோடி, 5) செம்பொன், 6) செம்பொன். அம்பர் முதுபகவர் தளியைச் சார்ந்தவர்கள் எட்டுப்பேர்: 1) ஏகவீரி, 2) சங்கம், 3) பெற்றதிருவு, 4) செய்யபாதம், 5) சீதேவி, 6) எடுத்தபாதம், 7) நீச்சல், 8) எட்டாவது பெயர் கல்வெட்டில் சிதைந்துள்ளது. அம்பர் அவனிநாராயண விண்ணகரைச் சேர்ந்தவர்கள் ஆறுபேர். 1) உதையம், 2) இன்னிளவஞ்சி, 3) மழலைச்சிலம்பு, 4) காமி, 5) ஆசார பஞ்சாரி, 6) நம்பியம்மை. இச்செய்தியிலிருந்து அம்பரி லிருந்த முதுபகவர்தளி, திருமாகாளம், அவனிநாராயண விண்ணகர் ஆகிய மூன்று திருக்கோயில்களிலும் திறமைமிக்க தளிச்சேரிப் பெண்டுகள் பலர் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இருந்தனர் என்பது தெளிவாகிறது.

தஞ்சைப் பெருங்கோயிலுக்கு, அம்பர் நாட்டைச் சேர்ந்த அம்பர் புறத்தூர் சபையார், திருப்பரிசாரகஞ் செய்யும் மாணி ஒருவரை இடக்கடவர் என்றும், இந்நாட்டைச் சேர்ந்த அதியரைய குறும்பல் ஊரார் திருமெய்க்காப்பு ஒன்று இடக்கடவர் என்றும், இந்நாட்டைச் சேர்ந்த நல்லமுந்தூர் ஊரார் திருமெய்க்காப்பு ஒன்று இடக்கடவர் என்றும் தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

முதலாம் இராசராச சோழனது ஆட்சிக்காலத்தில் அம்பரைச் சேர்ந்த வியாபாரி சடையன் குப்பை என்பவரும், அவரது மக்கள் இருவரும் சேர்ந்து பனையூர் நாட்டு எயின்னூரில் பாலாசிரியன் கிருஷ்ணன் என்பவரிடம் கால் நிலத்தை வாங்கி திருப்புகலூர் இறைவனுக்கு விளக்கெரிப்பதற்காகக் கொடுத்திருக்கிறார்கள்.

இன்றைய தினம் மாகாளேசுவரர், மகாகாளநாதர், காளகண்டேசுவரர் என்றழைக்கப்பட்ட இறைவனின் திருப்பெயர்கள் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் அம்பர் திருமாகாளம் உடையார் என்ற பெயரில் வழங்கப்பட்டிருக்கிறது. அதாவது அம்பர் என்ற ஊரிலுள்ள திருமாகாளம் என்ற கோயில் என்ற பொருளில் இப்பெயர் வழங்கியிருக்கிறது. இன்றையதினம் இத்திருமாகாளம் கோயில் உள்ள இடம் கோயில்திருமாளம் என்ற பெயரில் வழங்கி வருகிறது. திருமாகாளம் என்பது திருமாளம் என்று திரிபடைந்துள்ளது.

பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் மாகாளநாதர் கோயிலுக்குப் பல தானங்கள் செய்யப்பட்டுள்ளன. பனையூர் நாட்டிலுள்ள சிறுவேளூரை (இன்றைய தினம் இவ்வூர் திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் செருவேளூர் என்ற பெயரிலுள்ளது) சேர்ந்த மன்னமுதன் என்பவரின் புதல்வர் உதய மார்த்தாண்டன் என்பவர் மகாகாளநாதர் கோயிலில் விளக்கெரிப்பதற்காக தொண்ணூறு ஆடுகளை வழங்கியிருக்கிறார். இத்திருமாகாளத்து மகாதேவர்க்கு வாணராயன் அரங்கன் மாதேவன் என்பவர் நிலமளித்திருக்கிறார்.

மகாகாளத்து மகாதேவரை அபிடேகம் செய்தபோது, குன்றக் கூற்றத்துப் பழுவூரைச் சேர்ந்த (திருச்சி மாவட்டம் உடையார்

பாளையம் வட்டத்திலுள்ள பழுவூர்) கார்புலியன் என்ற சோழ மாராயந் என்பவர் இறைவனுக்கு மணிமகுடமும், முத்துமாலையும் வழங்கியிருக்கிறார். மணிமுடியானது 62 மாணிக்கம், 55 மரகதம் 48 வயிரம், 226 முத்து, 80 பொன்கொண்டு செய்தளிக்கப் பட்டிருக்கிறது. முத்துமாலையானது 15 மாணிக்கம், 64 முத்து, 12 வயிரம், முப்பத்து முக்கழஞ்சேய் எட்டு மஞ்சாடிப் பொன் கொண்டு செய்தளிக்கப்பட்டிருக்கிறது.

அனங்க வள்ளுவப்பாடியைச் சேர்ந்த ஒருவர் திருமாகாளத்து மகாதேவர் கோயிலில் ஐம்பது விளக்குகள் எரிப்பதற்காகப் பொன் அளித்திருக்கிறார். முளையூர் நாட்டு (இன்றைய தினம் திருநள்ளாற்றை ஒட்டிய பகுதி) குந்தவைச் சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த ஒருவர் இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காகப் பணமளித்துள்ளார். இதே போல, குறுக்கை நாட்டிலுள்ள (தற்போது மயிலாடுதுறை வட்டத்தில் உள்ள "கொக்கை" என்ற ஊரைச் சூழ்ந்துள்ள பகுதி) அன்னியூரைச் சேர்ந்த வீரவிச்சாதர பல்லவரையன் என்பவரும், இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காகப் பணமளித்துள்ளார்.

அம்பர் திருமாகாளம் கோயிலில் முதலாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக்காலத்தில் உமாபரமேஸ்வரியாரின் திருமேனி எழுந்தருளிவிக்கப்பட்டு, இத்திருமேனியின் வழிபாட்டிற்காக நிலம் வழங்கப்பட்டிருந்தது. இக்கொடை சரியான முறையில் பயன் படுத்தப்படாததால், விக்கிரமசோழனின் பத்தாம் ஆண்டில், மதுராந்தகச் சதுர்வேதிமங்கலத்துச் சபையாரால் புதுப்பித்து வழங்கப்பட்டிருக்கிறது. இதே இறைவிக்கு விக்கிரமசோழனின் 15-ஆம் ஆட்சியாண்டில் அம்பர் நகரத்தாரும் நிலம் வழங்கியிருக்கின்றனர்.

பனையூர் நாட்டுச் சிறுவேளூரைச் சேர்ந்த அமுதன் திருச்சிற்றம்பலமுடையானான உதையமார்த்தாண்ட மூவேந்தவேளான் என்பவர் தமது முன்னோர்களால் அம்பர் திருமாகாளம் கோயிலுக்குச் செய்தளிக்கப்பட்ட ஆட்கொண்ட நாயகர் மற்றும் இறைவியாரின் திருமேனிகளின் வழிபாட்டிற்காக நிலக்கொடை அளித்திருக்கிறார். இன்றும் இத்திருமேனிகள் இத்திருக்கோயிலில்

வழிபாட்டிலிருப்பது குறிப்பிடத்தக்கது. இன்றையதினம் இத் திருமேனி காட்சிகொடுத்த நாயகர் என்றழைக்கப்படுகிறது. அதே சிறுவேளூரைச் சேர்ந்த சிலர் இத்திருக்கோயில் அம்மனுக்கு நிலம் வழங்கியிருக்கின்றனர். வாணராயன் அரங்கன் மாதேவன் என்பவர் திருமாகாளத்து மகாதேவர்க்கு நிலக்கொடையளித் திருக்கிறார். திருமாகாளமுடையாரின் திருவிழாவிற்கென்று கேரள மாதேவிச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் (இன்றைய பேரளம்?) நிலம் அளித்திருந்தனர். இக்கோயிலில் திருவாதிரைத் திருநாளைச் சிறப்பாக நடத்துவதற்காகச் சிறுவேளூரில் நிலம் வழங்கப்பட்டிருக் கிறது. பனையூர்நாட்டு முடிகொண்டசோழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் (சன்னாநல்லூர் அருகிலுள்ள முடி கொண்டான்?) இக்கோயில் இறைவி அய்யன்மாதேவி நாச்சியாரின் வழிபாட்டிற்காகக் கொடையளித்துள்ளனர். இக்கொடை ஊரின் வளத்திற்காகவும், அரசன் உலகுடைய பெருமாளின் நலத்திற் காகவும் வழங்கப்பட்டிருக்கிறது.

பிற்காலச்சோழர் காலத்தில் அம்பர்நாட்டுக்குட்பட்டிருந்த வளவன் அன்னியூரும், இருமுடிசோழநல்லூரும், திருமாகாளம் கோயிலின் தேவதானக் கிராமங்களாக இருந்திருக்கின்றன. ஆவூர்க்கூற்றத்தைச் (தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் - பாப நாசம் பகுதி) சேர்ந்த விளத்தூர் கிராமத்தலைவர் அரயன் பொன்னம்பலக் கூத்தனான நீலகங்கரராயன் என்பவரின் துணைவியார் திருமாகாளம் கோயிலுக்கு நிலம் விற்றிருக்கிறார்.

அம்பர்த்திருமாகாளம் கோயிலிலிருக்கும் திருச்சுற்றுமாளிகை விக்கிரமசோழனால் கட்டப்பட்டது.

அம்பரிலிருக்கும் பிரம்மபுரீசுவரர் திருக்கோயிலில் இருக்கும் கல்வெட்டொன்று, அம்பர்நாட்டு வைகாவூரான எதிரிலிசோழ நெற்குன்றத்தில், எதிரிலிச் சோழீசுவரமுடையார் என்ற சிவாலயம் இருந்ததையும், இச்சிவாலயத்தில் விளக்கெரிப்பதற்காக சோழ மன்னன் இராசராசன் காலத்தில் அம்பரைச் சேர்ந்த வியாபாரி ஒருவர் பணம் அளித்ததையும் தெரிவிக்கிறது.

முதலாம் பராந்தகசோழனது ஆட்சிக்காலத்தில் இவ்வூரின் பெயரில் ''அம்பர்வாய்'' என்ற வாய்க்காலொன்றிருந்ததைத் திருமீயச்சூர் கல்வெட்டொன்றால் அறியமுடிகிறது.

துவராபதி பேரிளமை சென்று, போர் நடத்திப் பட்டமைக்காக, கோணல் தில்லை அழகன், ஐய்யாறன் அமுதன், நாரணந்சேந்தன் வீரனுக்கு தாழி செட்டி, அருக்கன் பெரியான் என்ற நான்கு வியாபாரிகளுக்கும், முதலாம் குலோத்துங்கனது ஆட்சிக் காலத்தில், இந்நால்வருடைய மனை நிலம், நீர் நிலம் ஆகியவற்றிற்கு அம்பர் நகரத்தார் வரிநீக்கம் செய்தளித்திருக்கின்றனர். இச்செய்தி இஞ்சிக்குடிக் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.

## இடையாத்தங்குடி (இடையாற்றுக்குடி)

இவ்வூர் திருமருகல் அருகில் உள்ளது. பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் மருகல் நாட்டுப் பிரிவிற்குட்பட்ட பிரம்ம தேயமாக இருந்திருக்கிறது. இவ்வூர் இடையாற்றுக்குடி என்றும் கலிகடிந்த சோழச் சதுர்வேதிமங்கலம் என்றும் அழைக்கப்பட்டிருக் கிறது. கலிகடிந்த சோழன் என்பது இரண்டாம் குலோத்துங்க சோழனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று. எனவே இம்மன்னனின் பெயரிலேயே இவ்வூருக்குக் கலிகடிந்த சோழச்சருப்பேதிமங்கலம் என்ற பெயரேற்பட்டிருக்கிறது எனக்கொள்ளலாம். மூன்றாம் இராசராசசோழனின் இருபத்தாறாம் ஆட்சியாண்டில் இடை யாற்றுக்குடியின் மகாசபையார், சாத்தங்குடியின் ஊர்க்கணக்கருக்கு ஆணை பிறப்பித்து, அவ்வூரிலிருந்த, அயவந்தி உடையார் கோயிலுக்குரிய நிலங்களுக்கு வரிவிலக்கு அளிக்கச் செய்திருக் கின்றனர். இதனால் கிடைத்த பணத்தைக் கொண்டு அயவந்தி உடையார் கோயிலில், ஊர் நன்மைக்காக வேண்டி இரண்டு நந்தா விளக்குகளை எரிக்கச் செய்திருக்கின்றனர்.

## இராமநதிச்சுரம்

இவ்வூர் திருவிராமேசுவரம் என்றும் திருஇராமநதீச்சுரம் என்றும் இராமநந்தீசுவரம் என்றும் பலவாறாக அழைக்கப் படுகிறது. இது நன்னிலம் வட்டத்தில் திருச்செங்காட்டாங்குடி, திருக்கண்ணபுரம், திருப்புகலூர் போன்ற வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர்களுக்கருகே அமைந்துள்ளது. தற்போது வழங்கி வரும் இராமநந்தீசுவரம் என்ற பெயர் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இவ்வூருக்கு வழங்கி வந்த இராமனதீச்சரம் என்ற பெயரின் திரிபே. இவ்வூரிலுள்ள இறைவனைச் சம்பந்தர் பாடியிருப்பதால் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூர் சிறப்புடன் திகழ்ந்து

வருவது தெளிவாகிறது. பிற்காலச்சோழர் காலத்தில் அருமொழி தேவவள நாட்டு நென்மலி நாட்டு கிராமமாக இருந்த மதனமஞ்சரிச் சதுர்வேதிமங்கலமான நெடுமணலும் இவ்வூரும் ஒன்றே என திரு. எஸ். ஆர் பாலசுப்பிரமணியம் அவர்கள் கருதுவது பொருத்த மாகப்படவில்லை. ஏனெனில், பிற்காலச்சோழர் காலத்தில் நென்மலி நாடு என்பது தற்போதய மன்னார்குடி வட்டத்தின் ஒரு பகுதியாகவே விளங்கியிருக்கிறது. தற்போது மன்னார்குடி வட்டத்திலுள்ள திருவிராமீசுவரம் என்ற கிராமத்திலுள்ள சிவாலயம் பிற்காலச்சோழர் காலத்தில் திருவிராமேஸ்வரம் என்றே வழங்கி வந்துள்ளது. மன்னார்குடி வட்டத்திலுள்ள திருவிராமேஸ்வரமே தேவாரப்பாடல் பெற்ற இராமநதீச்சுரம் என்று சில வரலாற்ற றிஞர்கள் கருதுகின்றனர். இதுவும் பொருத்தமாகப்படவில்லை. ஏனெனில் திருஞானசம்பந்தர் திருப்பனையூரை வணங்கிவிட்டு திருஇராமநதீச்சுரத்தை அடைவதாகவே பதிக வரலாறு கூறுகிறது. எனவே, திருப்பனையூர் அருகில் உள்ள நன்னிலம் வட்டத்து இராமநதீச்சுரமே திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற திருக் கோயில் எனக் கொள்வதே பொருத்தமாக உள்ளது. மன்னார்குடி வட்டத்திலுள்ள திருவிராமேசுவரத்துக் கோயில் பிற்காலச்சோழர் கல்வெட்டுகளில் ''திருவிராமேசுவரம் உடையார்'' என்றும் நன்னிலம் வட்டத்திலுள்ள கோயில் ''இராமனதீச்சுரமுடையார்'' என்றும் தேவாரப் பதிகங்களில் குறிக்கப்பட்டுள்ளது போலவே அழைக்கப்படுவதும் ஈண்டு எண்ணிப்பார்க்கத் தக்கது.

இராமன் இராவணனைக் கொன்ற கொலைப்பழி நீங்கப் பெற வேண்டி வழிபட்ட திருத்தலங்களுள் இதுவும் ஒன்றான படியால் இவ்வூருக்கு இராமநதீச்சுரம் என்ற பெயர் ஏற்பட்டதாகக் கருதப்படுகிறது.

### உருத்திரகங்கை (ருத்ர கங்கை / திருச்சிற்றம்பலம்)

பிற்காலச்சோழர் ஆட்சிக்காலத்தில் இவ்வூர் திருச்சிற்றம்பலம் என்றழைக்கப்பட்டிருக்கிறது. இவ்வூரிலுள்ள சிவாலயம் விக்கிரம சோளீசுவரமுடையார் கோயில் என்ற பெயரில் விளங்கியதைக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. இன்றைய தினம் இச் சிவாலயம் ஆபத்சகாயேசுவரர் கோயில் என வழங்கி வருகிறது. இக்கோயிலும், திருமுற்றமும், திருமடைவிளாகமும், திருநந்த

வனமும், மடமும், மண்டபங்களும், கொற்றமங்கலங்கிழான் திருவேகம்பமுடையான் கருவூர்நாயகன், திருவேகம்பமுடையான் குலோத்துங்கன், கோவிந்தன் என்போரால் ஏற்படுத்தப்பட்ட செய்தியினை, இங்குள்ள இரண்டாம் இராசராசசோழனின், கல்வெட்டொன்றிலிருந்து உய்த்துணர முடிகிறது.

அச்சுதமங்கலத்து எல்லைக்குத் தெற்கில், இவ்வூர்க் கோயிலுக்கு நிலமும், புளியங்கொல்லை நத்தமும் நத்தத்தின் அருகில், பிடாரிகோயிலும், பிடாரிகோயில் நிலமும் இருந்ததையும் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகளால் அறிய முடிகிறது. இப்புளியங்கொல்லை நத்தத்திற்கு அருகிலேயே குடியிருப்பு நத்தமும் இருந்திருக்கிறது.

விக்கிரமசோளீசுவரமுடையார் அமாவாசைதோறும் நெய்யாடி அருளுவதற்கும், திருமந்திரப் போனகத்திற்கும், இரண்டாம் அல்லது மூன்றாம் இராசராசசோழனின் பதினேழாவது ஆட்சியாண்டில், நிலம் வழங்கப்பட்டிருக்கிறது. இந்நிலத்தினைக் கொற்றமங்கலத்தைச் சேர்ந்த அபிமுக்திநாயகன் என்பவர் வழங்கியிருக்கிறார்.

இவ்வூர்க் கல்வெட்டுகளில் கொற்றமங்கலத்துப் புகழாபரணீசுவரமுடையார் கோயில் ஒன்று குறிப்பிடப்படுகிறது. கொற்றமங்கலம் என்ற பெயரே உருமாறி கொத்தவாசல் என்று தற்போது வழங்கி வருகிறதெனலாம். எனவே, கொத்தவாசலுக்குட்பட்ட சிவாலயமாகப் புகழாபரணீசுவரமுடையார் கோயில் இருந்ததெனக் கொள்ளலாம். இக்கோயில் கி.பி. 12-ஆம் நூற்றாண்டளவில் சிறப்புற்றிருந்திருக்கிறது. இப்புகழாபரணீசுவரமுடையார்க்குத் திருநந்தவனம் உள்ளிட்டு வேண்டுவன செய்ய வேண்டி சிறுவேளூருடையான் பொன்னமுதன் என்பவர் நிலம் வழங்கிய செய்தியினைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள, ருத்ரகங்கையிலிருக்கும் ஆபத்சகாயேசுவரரின் மதிய வழிபாட்டிற்கும், திருவமுதுக்கும் என்று மாகாளத்தைச் சேர்ந்த 18 கிராமங்களிலிருந்து, வேலி ஒன்றுக்கு ஒரு பணமும், மூன்று குறுணியே நான்கு நாழி நெல்லும் என்ற கணக்கில் ஆண்டொன்றுக்கு முப்பது கலம் நெல்லும், பத்துப்பொன்னும்

வசூலித்தளிக்கப்பட்டு வந்த செய்தியினை, விசயநகர மன்னன் ஸ்ரீரங்கன் காலச் செப்பேடு (31-5-1736) தெரிவிக்கின்றது. இதிலிருந்து விசயநகரர் காலத்திலேயே ருத்ரகங்கைக்கு, திருச்சிற்றம்பலம் என்ற பெயர் மாறி ருத்ரகங்கை என்ற பெயர் ஏற்பட்டு விட்டதென்பதையும், விக்கிரம சோளீசுவரமுடையார் கோயில் என்றழைக்கப்பட்ட பெயர் மாறி சிவாலயத்திற்கு ஆபத்சகாயேசுவரர் என்ற பெயர் ஏற்பட்டுவிட்டதையும் தெரிந்து கொள்ள முடிகிறது.

## ஒட்டக்குடி

சிறப்புமிக்க இவ்வூர் பிற்காலச் சோழர் காலத்தில் ஒட்டைக்குடி எதிரிலிச் சோழபுரம், இராசேந்திர சோழபுரம் என்றெல்லாம் வழங்கியிருக்கிறது. இருப்பினும் மன்னர்களின் பெயர்களில் வைக்கப்பட்ட பெயர்கள் காலப்போக்கில் வழக்கிலிருந்து மறைந்துவிட ஒட்டைக்குடி என்ற பெயரும் பேச்சு வழக்கின் தாக்கத்தால் ஒட்டக்குடியாக மாறிவிட்டது. பிற்காலச் சோழர் காலத்தில் திருநங்காளீசுவர உடையார் என்றழைக்கப்பட்ட இவ்வூர் இறைவன், தற்போது திருக்காளீசுவரர் என்றழைக்கப்படுகிறார். இவ்வூர் பிற்காலச் சோழர் காலத்தில் வணிகர்கள் வாழ்ந்த நகரமாக விளங்கியிருக்கிறது. இவ்வூர் சிவாலயத்திலுள்ள அம்மன் சன்னதியை சிறைக்காவூர் தியாகப் பெருமாள் என்பவர் தோற்றுவித்த செய்தி இங்குள்ள கல்வெட்டுகளிருந்து தெரியவருகிறது

## கீரனூர்

இவ்வூர் சிவலோகநாதசுவாமி கோயிலில் பன்னிரெண்டு கல்வெட்டுகள் உள்ளன. இவை இராசகேசரிவர்மன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் ஆகியோர் காலத்தவையாகும்.

முதலாம் இராசராசனின் கல்வெட்டுகளில் இவ்வூர் உய்யக் கொண்டார் வளநாட்டு, திருவழுந்தூர் நாட்டு கீரனூர் என்று குறிப்பிடப்படுகின்றது. முதலாம் இராசராச சோழனின் 3-ஆம் ஆட்சியாண்டில் கீரனூர் ஊரார் அவ்வூரிலுள்ள தரிசுபுலநிலம் கால் வேலியை தங்கள் ஊரிலுள்ள துர்க்கைக்கு அர்ச்சனா போகமாக

விற்றுக் கொடுத்துள்ளனர். இத்துர்க்கையை அர்ச்சனை செய்தவர் வைகானசன் கௌதமன் விஷ்ணுபட்டன் வேங்கடவன் எனக் குறிக்கப்படுகின்றான். இம்மன்னனின் ஏழாவது ஆட்சியாண்டு கல்வெட்டு அருமொழி பல்லவரையர் என்பவர் விண்ணப்பம் செய்தபடி முன்புள்ள அரசர்கள் தேவதானமாகக் கொடுத்த பன்னிரெண்டு வேலி நிலமும் எதற்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்று வரையறுக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது. அவ்வாறு வரையறை செய்யப்பட்டபோது நாற்பத்தெண்ணாயிர பட்டன் போன்றோர் உடனிருந்து இதை செய்தார்கள். அதாவது இக்கோயிலில் இறைவனை ஆராதனை செய்யும் பிராமணர்க்கும், பிற பணிகள் செய்யும் பணியாளர்க்கும் எட்டு மாக்காணி நிலம் கொடுக்கப்பட்டது. இக்கோயில் இறைவனுக்கு அர்த்தசாமத்தில் படைக்கும் அமுதினுக்கும், கூத்தப்பெருமாள் திரிபுவனசுந்தரர் ஆகியோருக்கு திருப்பலி, அன்னபலி ஆகிய வற்றிற்கும் செம்மரிசி கொடுக்கப்பட்டது. சங்கராந்திக்கும் கிரஹணத்திற்கும், இறைவனைத் திரவியம், தேன், சந்தனம் முதலியவற்றால் நீராட்டவும் நிலங்கள் கொடுக்கப்பட்டன. அத்துடன் மேலையாற்றில் இருவேளை இறைவனை நீராட்டும் போகியும் மஞ்சள் நீராட்டுவோனும் கல்வெட்டில் குறிக்கப்படு கின்றனர். எனவே சோழர் காலத்தில் இக்கோயிலில் வழிபாடு சிறந்த முறையில் நடைபெற்றிருத்தல் வேண்டும். நந்தவனத்தைத் தபசியர் இருவர் கவனித்து வந்தனர். இவர்கள் அனைவருக்கும் நெல் வழங்கப்பட்டு வந்தது. மேலும் இரண்டு சங்குகள் ஊதும் இரு அடியார்களுக்கும் திருப்பள்ளித் தாமம் பறிச்சுக் கொடுப்பார் ஒருத்திக்கும், திருமெழுகிட்டு, திருப்பிண்டியட்டுவார் (உணவு பரிமாறுபவர்) ஒருத்திக்கும், திருமெழுகிடும் ஒருவனுக்கும், சுத்தம் செய்து நீர் தெளிக்கும் ஒருவனுக்கும் காளம் ஊதுவார் நால் வர்க்கும், திருப்பதியம்பாடுவார் மூவருக்கும் நெல் வழங்கப் பட்டுள்ளது. இக்கோயிலில் தினம் நொந்தாவிளக்கு எட்டும், இராவை சந்திவிளக்கு பதினாறும், பிடிவிளக்கு எட்டும் எரிப் பதற்கு நெல் கொடுக்கப்பட்டுள்ளது. இராசராசனின் 26-ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு இக்கோயில் பிள்ளையாருக்கு உணவுக்கும். சந்திவிளக்கிற்கும் கீரனூர் ஊரார் நிலம் இறையிலியாக அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றது. கீரனூரைச் சேர்ந்த வெள்ளாளன் மகாதேவன் ஆச்சன் ஒரு சந்திவிளக்கு எரிக்க மூன்று மா நிலமும்

காசியபன் சன்னசந்திரசேகரன் ஒரு சந்திவிளக்கு எரிக்க நிலம் மூன்று மாவும், இக்கோயிலுக்காக பொன்கொடுத்து வாங்கிய நிலம் நான்கு மாவும் ஆக மொத்தம் நிலம் பத்து மாவும் அளித்தனர். இதனைப் பெற்றுக் கொண்டு கோயில் பணி செய்பவர்கள் இந்நிலங்களுக்கான வரிகளைச் செலுத்தி, இரண்டு சந்திவிளக்குகள் எரித்து, மேலும் இருபத்திருகலனே தூணிப்பதக்கு நெல் கோயிலுக்கு கொடுக்க வேண்டும் என்று கல்வெட்டுக் கூறுகிறது. மேலும் கோயிலில் பணிபுரியும் கவரி வீசுவோர், உவச்சர், கோயிலுடையார் ஆகியோர் குடியிருக்கும் மனைகளும் இறையிலியாக வழங்கப்பட்டுள்ளன. கார்த்திகை விளக்கெரிக்கவும் இறைவனுக்கு நீராட்டுவதற்கும் திருவிழா நடத்துவதற்கும் நிலம் அளிக்கப்பட்டது.

இங்குள்ள இறைவனை ஸ்ரீபலி எழுந்தருளச் செய்வதற்கு வேண்டும் பலகைகளைக் கோயிலைச் சார்ந்தவர்கள் செய்தார்கள். முதலாம் இராசேந்திரனின் பத்தாவது ஆட்சியாண்டில் உவச்சு கொட்டுபவர்களுக்கும், பள்ளி எழுச்சி ஆட்டத்துக்கு வாசிக்கும் உவச்சர்களுக்கும், சாக்கைக் கூத்து ஆடுபவனுக்கும் (ஸ்ரீகண்டனான மருதூர் சாக்கை) குறிப்பிட்ட அளவு நெல் கொடுக்கப்பட்டது.

இம்மன்னனின் 21வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, கல்யாண மாதேவியாரிடம் 177 காசு பெற்றுக் கொண்டு, ஊரார் நிலம் விற்றுக் கொடுத்தனர், அந்நிலம் நொந்தாவிளக்கு எரிப்பதற்கும், சட்டிசோறுக் கொடுப்பதற்கும், திருவாதிரை, உத்திரத் திருவிழாவுக்கு திருவமுது படைப்பதற்கும், திருவிழாவுக்கு இசை கொட்டும் உவச்சனுக்கும், ஐந்து அங்கம் சாக்கைக்கூத்து நடத்து வதற்கும் வழங்கப்பட்டது என்ற செய்தியைத் தெரிவிக்கின்றது.

### கீழகரம் (கீழவரம்)

கீழகரம் பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டுவரை சிறப்புடன் விளங்கியிருக்கிறது. இவ்வூர் கீழையகம் கீழையம், ஜநநாதன் அத்திப்பாக்கம் போன்ற பெயர் களால் வழங்கப்பட்டிருக்கிறது. இவற்றுள் கீழையம் (கீழையகம்) என்ற பெயரே மருவி தற்போது கீழகரம் என்று வழங்கி வருகிறது என்று கருதலாம். திருவகத்தீஸ்வரமுடைய நாயனார் என்று

கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள இவ்வூர் இறைவனின் திருப்பெயர் தற்காலத்தில் ஆதிபுரீஸ்வரர் என்று வழங்கி வருகிறது. இவ்வூரிலிருந்த வாய்க்கால்களில் ஒன்று ஜனநாதன் வாய்க்கால் என்று பெயர் பெற்றது. இந்த சனநாதன் வாய்க்காலுக்கருகில், பஞ்சாட்சரப் பிள்ளையாரின் திருநாமத்துக்காணியும், பிடாரிவதியும் கேணிக்கால் என்ற நிலமும், பஞ்சாட்சரப் பிள்ளையார் திருவிருப்பும், ஆழங்கால் என்ற நிலமும் இருந்திருக்கின்றன.

விக்கிரமசோழனின் 10-ஆம் ஆட்சியாண்டில், சனநாதன் என்பவன் அத்திப்பாக்கத்து ஊர்த்தலைவன் ஸ்ரீகண்டதேவன் அதிரவீசியாடுவான் முனையதரையர் என்பவனிடமிருந்து வீட்டுமனை ஒன்றினை விலைக்கு வாங்கிக் கோயிலுக்கு அளித்திருக்கின்றான். சுந்தரபாண்டியனின் பெயரால் ஏற்படுத்தப்பட்ட "சுந்தரபாண்டியன் சந்தி" என்ற வழிபாட்டிற்காக இக்கோயிலுக்கு முப்பத்தெட்டு வேலி நிலம் இறையிலியாக வழங்கப்பட்டிருக்கிறது.

மாறவர்மன் வீரபாண்டியனின் 21-ஆவது ஆட்சியாண்டில், திருவகத்தீசுவரமுடையார் கோயிலுக்கு மாதான மங்கலமுடையான் நாயன் பிள்ளை என்பவர், தன்னுடைய மாமனாரான இரதிகண்ட தேவர் என்பவரிடமிருந்து சீதனமாகப் பெற்ற நிலத்தைப் பணம் இருநூற்றுக்கு விற்றுக் கொடுத்தார்.

மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தில் இவ்வூரைச் சேர்ந்த அத்திப்பாக்கத்துக்கிழார் ஆலாலசுந்தரப்பெருமாள் என்பவர் இவ்வூர்க் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறார். இவருடைய துணைவியார் வானவநாச்சியார் இவ்வூர் சிவாலயத்தின் திருக்காமக் கோட்டத்து நாச்சியார் வடிவுடை மங்கைக்கு திருநந்தவனம் அமைத்து நிலக்கொடையளித்துள்ளார். இவ்வூர் பிற்காலச் சோழர் ஆட்சிக்காலத்தில் பனையூர் நாட்டில் இருந்துள்ளது.

மன்னன் பெயர் கிடைக்கப்பெறாத மற்றொரு கல்வெட்டில் அத்திப்பாக்கிழார் அம்பலத்துறைவார் என்பவர் குறிப்பிடப்படுகிறார். விக்கிரமசோழனது கல்வெட்டொன்றில் அத்திப்பாக்கத்து அரும்பாக்கிழான் சீகண்டதேவர் அதிரவீசி ஆடுவான் முனையதரையர் என்பவர் குறிக்கப்படுகிறார். கி.பி. 12, 13ஆம் நூற்றாண்டில் இவ்வூரில் திருமுற்றத்துக்காணி உடையநம்பிமார் பலர்

இருந்திருக்கின்றனர். அவர்களுள் கிருஷ்ணபட்டன் என்பவரது பெயரைக் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்து கொள்ளமுடிகிறது. கி. பி. பதினாறாம் நூற்றாண்டளவில் இவ்வூர்க் கோயிலின் அர்த்த மண்டபத்தை மல்லிநாயக்கர் என்பவரின் குமாரர் விருப்பண்ண உடையார் என்பார் திருப்பணி செய்திருக்கிறார்.

**கூத்தனூர்**

மயிலாடுதுறை-திருவாரூர் பேருந்துத் தடத்தில் பூந்தோட்டத் திற்கருகில் அமைந்துள்ள இவ்வூரில் உள்ள சரசுவதியம்மன் கோயில் இவ்வூருக்குத் தனிச்சிறப்பைச் சேர்க்கிறது. சரசுவதி தேவியை எழுந்தருளிவித்தவர் மலரியைச் சேர்ந்த கவிச்சக்கர வர்த்திகள் பேரனாரான கவிப்பெருமாளான ஓவாதகூத்தர் என்பதை இக்கோயிலிலுள்ள கல்வெட்டு தெளிவாக உணர்த்து கிறது. இந்த ஓவாதகூத்தர், கவிச்சக்கரவர்த்தி என்று போற்றப் பட்ட ஒட்டக்கூத்தரின் பேரனார் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களது குடும்பப் பெயரான "கூத்தன்" என்ற பெயரிலேயே இவ்வூருக்குக் கூத்தனூர் என்ற பெயரேற்பட்டிருக்கிறது எனக் கொள்ளலாம். "ஓவாதகூத்தரான கவிச்சக்கரவர்த்திகள்" என்ற தொடர் இஞ்சிக்குடி கல்வெட்டில் காணப்படுவதிலிருந்து, ஓவாத கூத்தரும் கவிச்சக்கரவர்த்தியாகத் திகழ்ந்தவர் என்பது தெளிவா கிறது. ஓவாதகூத்தரின் மகன் எதிரிலி சோழநல்லூரிலுள்ள பார்வதீசுவரமுடையார் கோயிலை எடுப்பித்தான் என்று கருதத் தக்க வகையில் இஞ்சிக்குடியிலுள்ள பார்வதீசுவரமுடையார் கோயிலிலுள்ள கிணற்றில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டின் மூலம் இரண்டாம் இராசராசசோழனின் சிறப்புப் பெயரான "எதிரிலிசோழன்" என்ற பெயரில் இஞ்சிக்குடிக்கு "எதிரிலிசோழநல்லூர்" என்ற பெயர் பிற்காலச் சோழர் காலத்தில் வழங்கியிருக்கிறது என்று கருதவும் இடமுள்ளது.

கும்பகோணத்து இஷ்டகா மடத்தைச் சேர்ந்த புருசோத்தம பாரதி என்பவர் 15-ஆம் நூற்றாண்டில் கூத்தனூரில் குடி கொண்டுள்ள சரசுவதியம்மனுக்கு தானமளித்த செய்தி சரசுவதி யம்மன் கோயிலில் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

திருவாரூரிலுள்ள அருள்மிகு தியாகராசசுவாமி திருக்கோயிலுக்கு, இரகுநாதநாயக்கன் கோபாலன் என்பவர் கூத்தனூர் கிராமத்தை மன்னனின் நன்மைக்காகக் கொடையளித்திருந்தமையைத் திருவாரூர்க் கோயிலிலுள்ள செப்பேடு ஒன்று புலப்படுத்துகிறது.

## கோட்டூர்

இவ்வூர் பிற்காலச் சோழர் ஆட்சிக்காலத்தில் தாநதுங்கச்சதுர்வேதி மங்கலம் என்று வழங்கியிருக்கிறது. இங்குள்ள குடுமி நாயனார் திருக்கோயிலில் குடிகொண்டிருக்கும் இறைவன் சோழராட்சிக் காலத்தில் திருக்கோத்திட்டை மகாதேவர் என்றழைக்கப் பட்டிருக்கிறார். கோத்திட்டை என்ற பெயர் காலப்போக்கில் கோட்டூர் என்று மருவியிருக்கலாம். இப்பகுதியில் ஓடும் ஆறு இவ்வூர்க் கல்வெட்டுகளில் புத்தாறான குலோத்துங்க சோழப் பேராறு என்று குறிக்கப்படுவதால், இவ்வாறு பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் குலோத்துங்க சோழனின் பெயரில் புதிதாக அமைக்கப்பட்டதென்பது தெளிவாகிறது.

இவ்வூர் பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் பனையூர் நாட்டுப் பிரிவுக்குட்பட்ட கிராமமாக இருந்திருக்கிறது. இப்பனையூர் நாட்டிற்குட்பட்ட பிற கிராமங்களாக அனபாயச் சதுர்வேதி மங்கலம், ஆற்றூர் (சிறுவேளூர்/செருவேளூர்), இளையாங்குடி, சயங்கொண்ட சோழநல்லூர், காக்கை மங்கலம், காரோடுசேரி, நரிக்குடி, தேர்வாயில், பனையூர் (திருப்பனையூர்) புகலோக மாணிக்கச் சதுர்வேதிமங்கலம், சிவபாதசேகரமங்கலம் (அச்சுத மங்கலம்) திருப்புகலூர் (தானதொங்கச் சதுர்வேதிமங்கலம்) முடிகொண்டசோழச் சதுர்வேதிமங்கலம், திருவாஞ்சியம் (ஸ்ரீவாஞ்சியம்) உத்தமசோழமங்கலம் எயிநநூர் (தாநதுங்கச் சதுர்வேதி மங்கலம் போன்ற கிராமங்கள் இருந்திருக்கின்றன.

இவ்வூரில் உள்ள குடுமிநாயனார் கோயிலில் இருந்த ஒன்பது கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுள்ளன. இவை இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் ஆகிய மன்னர்க்கு உரியவையாகும்.

இரண்டாம் குலோத்துங்க சோழனின் பத்தாவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டு இரண்டு ஊர்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு குலோத்துங்க சோழச் சதுர்வேதிமங்கலமென்னும் பெயரால் அழைக்கப்பட்டதென்றும், திருக்கோத்திட்டை மகாதேவர்க்கு வேண்டும் நித்த நிவந்தங்களுக்குத் தேவதான இறையிலியாக நிலம் வழங்கப்பட்ட செய்தியையும், சாந்திக்கூத்தாடுகிற இராமன் திருச் சிற்றம்பலமுடையான் என்ற விக்கிரமசோழ வாசஸ்யன் என்பவனுக்கு நிலம் கொடுத்த செய்தியையும் தெரிவிக்கின்றது. மூன்றாம் குலோத் துங்க சோழனின் மூன்றாவது ஆட்சியாண்டில் இவ்வூர் மகாசபையார் திருக்கோத்திட்டை நாயனார் கோயிலில் இருந்து 100 காசுகள் பெற்றுக்கொண்டு அதற்குப் பொலியூட்டாக (வட்டியாக) எட்டு மா நிலத்தினை இறையிலியாக கொடுத்துள்ளனர். இரண்டாம் குலோத்துங்கசோழனின் நான்காம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டு திருக்கோத்திட்டை மகாதேவர் தேவதானமாகிய குலோத்துங்கசோழ நல்லூரிலுள்ள நிலங்கள் பற்றியும் ஒருவேலி நிலத்திற்கு எவ்வளவு நெல் காணிக்கடனாக தரவேண்டுமென்பது பற்றியும் தெரிவிக்கின்றது. மேலும் இக்கோயிலுக்கு வேண்டிய திருமடைவிளாகம், திருநந்தவனம், திருக்குளம் போன்றவை களுக்கு எயினனூராகிய தானதுங்கசருப்பேதிமங்கலத்தில் நிலம் கொடுக்கப்பட்டிருந்ததையும் கூறுகிறது.

திருக்கோத்திட்டை உடையநாயனார்க்கு, சிவப்பிராமணன் குமுதவன் திருக்கோத்திட்டையானுடையான், எயினனூர் வெள் ளான் உம்பன் குளுந்தான், சேவடி அம்பலவன், எயினனூர் வெள்ளாளன் திருவரங்கன் ஆகிய நால்வரும் ஆளுக்கொரு சந்தி விளக்கு வைத்தார்கள். இவர்களுள் சிலர் சிவப்பிராமணரிடமும், சிலர் தனிநபரிடமும் விளக்குக்குரிய முதலாகிய காசினை அளித் தனர். இரண்டாம் இராசாதிராசனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு சாத்தனூருடையான் கங்கன் முளைத்தான நாயனாரும், இக்கோயில் காணியுடைய சிவபிராமணன் காசியபன் மறைக்காடன் ஆட்கொண்டானான திருமறைக்காடு பட்டனும், திருக்கோத் திட்டை மகாதேவர்க்கு ஒரு சந்திவிளக்கு எரிக்கப் பத்து காசுகள் அளித்ததைக் குறிக்கின்றது. மூன்றாம் குலோத்துங்கசோழனின் பத்தாவது ஆட்சியாண்டில் இக்கோயிலில் காணியுடைய சிவப் பிராமணர்களில் ஆத்ரையன் இருள்நீக்கி ஆலாலசுந்தரபட்டன்,

காஸ்யபன் காடுடையான் புற்றிடங்கொண்டான் ஆகிய இருவரும் இறைவனுக்கு அமுதுபடிக்காக கொடுக்கப்பட்ட நெல் நாற்பது கலத்தினையும், இரண்டு சந்திவிளக்கு எரிப்பதற்குக் கொடுக்கப் பட்ட காசு இருபதினையும் விளக்கு ஒன்றுக்கு காசு இருபதினையும் பெற்றுக் கொண்டு, அம்முதலுக்கு வட்டி செலுத்துவதாக சம்மதித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

### சிறுபுலியூர்

சிறுபுலியூரில் உள்ள சிவலோகநாதசுவாமி கோயிலில் முதலாம் இராசேந்திரன் காலத்திய சிதைந்த கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டிலிருந்து, இவ்வூர் அம்பர் நாட்டு பிரிவிற்குட்பட் டிருந்தது என்பதையும், இவ்வூர் சபையார் இக்கோயிலுக்கு மூன்று மா நிலத்தினை வரி நீக்கி தானமளித்துள்ளனர் என்பதையும்; இங்கு அந்தணர் சபை ஒன்று செயல்பட்டிருந்தது என்பதையும் அறியமுடிகிறது.

இவ்வூரில் திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற பெருமாள்கோயில் உள்ளது. இப்பெருமாள் பற்றி திருமங்கையாழ்வார் பத்துப்பாடல்கள் பாடியுள்ளார். தாயார் திருமாமகள் என்று குறிப்பிடப்பட்டுள்ளாள்.

### திருக்கொட்டாரம் / திருக்கோட்டாறு

சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் 53-ஆவது தலமாகப் போற்றப்படும் கோட்டாறு, வாஞ்சிவாயாற்றின் கரையில் கொல்லுமாங்குடி காரைக்கால் பேருந்துத் தடத்தில் அமைந்துள்ளது. திருஞானசம்பந்தர் இரண்டு திருப்பதிகங்களில் இவ்வூரைப் பாடியிருப்பதாலும், திருநாவுக்கரசர் இத்தலத்தைக் குறிப்பிட்டுப் பாடியிருப்பதாலும், கி.பி. ஏழாம் நூற்றாண்டி லிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள, வண்டமர்பூங்குழலி உடனுறை ஐராவதேசுவரர் திருக்கோயிலும் சிறப்புடன் விளங்கி வருவதை அறியலாம்.

"பூம்பொழிற் குருத்த மாதவியின் விரைமல்கு கோட்டாறு"
"குரவ மாரு நீழிற்பொழின் மல்கு கோட்டாறு"
"தண்பொழில் சூழ்ந்தழகார் திருக்கோட்டாறு"

"தேனமரும் மலர்ச்சோலை சூழ்ந்த திருக்கோட்டாறு"
"நீர்வயில் சூழ்ந்தழகார் திருக்கோட்டாறு"

என்றெல்லாம் ஞானசம்பந்தர் பாடியிருப்பதால் 1300 ஆண்டு களுக்கு முன்பே இவ்வூர் வளமிக்க ஊராக இருந்தமை தெளி வாகிறது.

இவ்வூர் பிற்காலச்சோழர் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் உய்யக்கொண்டார் வளநாட்டில் இருந்த அம்பர்நாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஊராக இருந்திருக்கிறது. சிவா லயத்தின் பெயர் வெள்ளானைவிடங்கதேவர் கோயில் என்றே கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளது. வெள்ளானைவிடங்கதேவர் என்ற பெயரே இன்றைய தினம் ஐராவதேசுவரர் என வழங்கி வருகிறது.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் இவ்வூரில் வாஞ்சிவாயாற்றுக்கு வடக்கில் "பெருவழி" ஒன்றிருந்ததை ஸ்ரீவல்லபபாண்டியனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று புலப்படுத்துகிறது. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வீரபாண்டியனின் கல்வெட் டொன்று இவ்வூரின் பெயரைத் "திருக்கோட்டாறான பழையக்குடி" என்று குறிப்பிடுவதிலிருந்து இவ்வூருக்கு 14-ஆம் நூற்றாண்டில் பழையக்குடி என்ற பெயரும் இருந்தமை புலப்படுகிறது. பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் தெற்குத்திருவீதி, மேலைத்திருவீதி என இவ்வூரின் வீதிகளுக்குப் பெயர் வழங்கியிருக்கிறது. மேலைத்திரு வீதிக்கு மேற்கிலும், தெற்குத் திருவீதியின் வடக்கிலும் கண்ட நாராயணன் திருநந்தவனம் என்ற நந்தவனம் ஒன்றிருந்திருக் கிறது.

வெள்ளானைவிடங்கதேவரின் அர்த்தசாம சந்தியின்போது திருப்பள்ளித்தாமம் சாத்துவதற்காக முதலாம் குலோத்துங்க சோழனின் 10-ஆம் ஆட்சியாண்டில் கோட்டாற்றுக் கோயிலுக்கு நிலம் வழங்கப்பட்டிருந்தது.

பழையக்குடையான் வேளான் வெள்ளானைவிடங்கனான உத்தம சோழ ஆர்வலநாட்டு மூவேந்தவேளான், பழையக் குடையான் சைவசிகாமணி வெள்ளானை விடங்கனான செம்பியன்

ஆர்வலநாட்டு மூவேந்தவேளான், என மக்கட் பெயர்களிலும் இவ்வூர் இறைவன் பெயரின் தாக்கத்தைப் பரவலாகப் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் காணமுடிகிறது. தஞ்சை மாவட்டத்தில் இருப்பது போலவே கன்னியாகுமரி மாவட்டத்திலும் கோட்டாறு ஒன்று உள்ளது.

**திருக்கொண்டீச்சுரம் (திருக்கண்டீசுரம்)**

நன்னிலம் அருகில் அமைந்துள்ளது இவ்வூர். காவிரித் தென் கரைத்தலங்களில் 72-ஆவது தலமாக வைத்துப் போற்றப்படும் இவ்வூருக்குத் திருநாவுக்கரசர் வந்து பதிகம் பாடியிருப்பதால், கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர் சிறப்புடன் விளங்கி யிருக்கிறது என்பது தெளிவாகிறது. தேவாரத்தில் இவ்வூர் இறைவன் திருக்கொண்டீச்சரத்துளான், கொண்டிஈச்சுவரன், கொண்டீச்சுரனார், கொண்டீச்சுவரன் என்ற பெயர்களால் குறிப்பிட்டுப் பாடப்பட்டுள்ளார். இன்றையதினம் இறைவனின் திருப்பெயர் பசுபதிநாதர் என்று வழங்கி வருகிறது.

திருநாவுக்கரசர் தம் பதிகங்களில் இவ்வூர் வயல்களால் சூழப் பட்டு வளமுடனும், மாடமாளிகைகள் நிறைந்து அழகுடனும் விளங்கியதைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

முதலாம் இராசராசன் தஞ்சைப்பெருவுடையார் கோயிலுக்குத் திருமெய்க்காப்பாளர்களை நியமித்தபோது, மருகல்நாட்டு மருகல் சபையார், இந்நாட்டைச் சேர்ந்த பூதனூர் சபையார், வைப்பூர் ஊரார், தஞ்சாவூர் ஊரார், இடையாற்றுக்குடி சபையார், ஆகியோர் தலா ஒரு மெய்க்காப்பாளரைத் தந்தனர் என்று தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. ஒவ்வொரு திருமெய்க்காப்பாளருக்கும் அவ்வவ்வூராரே ஆண்டு ஒன்றுக்கு நூறு கல நெல்லினை ஊதியமாக அளித்துள்ளனர். இதேபோல தஞ்சைப் பெருங்கோயிலுக்கு முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்தில் திருப்பரிசாரகஞ்செய்யும் மாணி ஒருவரையும் இடக்கடவர் என்று தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டு தெரிவிக் கிறது. திருப்பரிசாரகஞ்செய்யும் மாணி ஒருவருக்கு ஊதியமாக நெல்லும், ஆண்டொன்றுக்கு நாலு காசும் வழங்கப்பட்டிருக்கிறது.

சோழப்பெருமன்னன் கோச்செங்கணான் எடுப்பித்த மாடக் கோயில்களில் ஒன்றாக இவ்வூர் சிவாலயமும் கருதப்படுகிறது. இக்கோயிலின் தலமரமாகக் கல்வாழை விளங்கிவருவதால் இவ்வூர் மருகல் என்றழைக்கப்படுவதாகக் கருதப்படுகிறது.

இவ்வூர்த் தெற்குவீதியில் விடம்தீர்த்த பிள்ளையார்கோயில் அருகில் சிறுத்தொண்டரின் மகன் சீராளன் பெயரில் குளம் ஒன்றுள்ளது.

பசுபதீசுவரர் கோயிலிலுள்ள பதினாறாம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்று கிருட்டிணதேவராயர் தமக்குப் பெஜவாடாவி லிருந்து கிடைத்த வரிகளை இக்கோயிலுக்கு நன்கொடையாக வழங்கிய செய்தியினைக் குறிப்பிடுகிறது.

## திருச்செங்காட்டாங்குடி

திருநாவுக்கரசராலும் திருஞானசம்பந்தராலும் பாடப்பெற்ற சிறப்புடையது திருச்செங்காட்டாங்குடி. எனவே இவ்வூர் கி.பி. ஏழாம் நூற்றாண்டு தொடங்கியே சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்து வருகிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகிறது. இவ்வூருக்கு மந்திரபுரி, இரக்தாரண்யம், சத்திபுரி, பிரமபுரி, சமுத்திரபுரி, செங்காட்டாங்குடி, ஆத்திவனம் எனப் பல பெயர் களுண்டு. பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மவர்மனின் படைத் தலைவனாக விளங்கி வாதாபிப் போரில் பங்கு கொண்டு வெற்றி யீட்டிய பரஞ்சோதியாகிய சிறுத்தொண்டர் வாதாபியிலிருந்து கொண்டு வந்ததெனக் கூறப்படும் வாதாபி விநாயகர் இன்றும் இவ்வூருக்குச் சிறப்பு சேர்த்துக் கொண்டிருக்கிறார். இவ்வூரில் கோயில் கொண்டு விளங்கும் சிவபெருமானைத் திருஞானசம்பந்தர் "கணபதீச்சுரத்தான்" என்று கூறியிருப்பது போலவே இன்றும் இறைவன் கணபதீச்சுரர் என்றே அழைக்கப்படுவது குறிப்பிடத் தக்கது. மந்திரபுரீசர், சத்திபுரீசர், பிரமபுரீசர், இந்திரபுரீசர், ஆத்திவனநாதர், பாற்கரபுரீசர், சமுத்திரபுரீசர் போன்றவை புராண ரீதியாக இறைவனுக்கு வழங்கும் பிறபெயர்கள். கணபதீஸ்வர முடைய நாயனார், ஸ்ரீகணபதீஸ்வரமுடைய மஹாதேவர், ஸ்ரீகணப தீஸ்வரமுடையார், திருச்செங்காடுடைய நாயனார் போன்றவை கல்வெட்டுகள் மூலமாக அறியவரும் பிற திருப்பெயர்கள்.

திருஞானசம்பந்தரும், சிறுத்தொண்டரும் சமகாலத்தவர்கள். ஒரு சமயம் திருஞானசம்பந்தர் நாகைக் காரோணரை வழிபட்டு விட்டுக் கீழ்வேளூருக்குக் கேடிலியப்பரை, வழிபட வந்திருந்தபோது சிறுத்தொண்டர் சம்பந்தரைச் சந்தித்து தம் ஊராகிய திருச்செங் காட்டாங்குடிக்கு அழைத்து வந்து தம் விருந்தினராகத் தங்கச் செய்திருக்கிறார். திருஞானசம்பந்தரும் திருச்செங்காட்டாங்குடிச் சிவபெருமானைப் போற்றிப் பாடும்போது "சிறுத்தொண்டன் பணி செய்ய வெங்காட்டுள் அனலேந்தி விளையாடும் பெருமான்" என்றும், கணபதீச்சரத்தோடு சிறுத்தொண்டர் கொண்டிருந்த நெருங்கிய உறவினைப் போற்றிப் பாடுகிறார். அன்னம் வேண்டி வந்த சிவபெருமானுக்குத் தன்மகன் சீராளனையே உணவாகச் சமைத்தளித்த சிறுத்தொண்டர் மற்றும் அவரது துணைவியார் திருவெண்காட்டுநங்கை அவர்களது பணிப்பெண் சந்தன நங்கை ஆகியோருக்கு இறைவன் முக்தியளித்ததை நினைவுகூறும் வகையில், இவர்கள் சிவன் பார்வதியைத் தொடர்ந்து கைலாயம் செல்லும் காட்சி கணபதீச்சுரத்தின் வடசுவரில் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

திருக்கோயிலுக்கு மேற்கில் சிறுத்தொண்டர் திருமடம் உள்ளது. இது சிறுத்தொண்டர் வாழ்ந்த இல்லமாகக் கருதப்படு கிறது. இதனை அடுத்து சிறுத்தொண்டநாயனார் திருமாளிகை ஒன்றுள்ளது. இங்கு பைரவர், சிறுத்தொண்டர், திருவெண்காட்டு நங்கை, ஐயடிகள் காடவர்கோன் போன்றோரின் கற்சிலைகள் உள்ளன. சம்பந்தருக்குக் காலத்தால் முந்தியவராகக் கருதப்படும் காடவர்கோனின் திருவுருவச்சிலை இங்கு இருக்கிறது.

சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்தில் இத்திருக்கோயிலில் சித்திரைத் திருவிழா வெகுசிறப்பாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது. சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் சீராளதேவரை சிறுத்தொண்டர் நம்பியான் திருமடத்துக்கு ஊர்வல மாக எழுந்தருளிவித்திருக்கின்றனர். அப்போது தரிசிக்க வரும் தபசிகளுக்கு உணவளிக்கப்பட்டிருக்கிறது. சித்திரைப் பரணி நாளில் உத்திராவதியார் சிறுத்தொண்டருக்கு முக்தியளிக்கும் விழாவில் திருமுக்திவானெறி மண்டபத்தில் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்பட்டிருக்கின்றன. முதலாம் குலோத்துங்கனது ஆட்சிக் காலத்தில் சீராளதேவரை சிறுத்தொண்டர் மண்டபத்திற்கு எழுந்தருளுவதற்காக இக்கோயிலுக்கு நிலமளிக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் இராசராசனது காலத்தில் திருச்சிற்றம்பலம் உடையான் என்பவர் முக்திவாணெறி மண்டபத்தில் சிறுத்தொண்டருக்கு முக்தி வழங்கும் பெருவிழா நடததுவதறகாக நிலம் வழங்கியிருக்கிறார். தஞ்சைப்பெருவுடையார் கோயிலுக்கு முதலாம் இராசேந்திர சோழனது ஆட்சிக்காலத்தில், ஆதித்தன் சூரியன் என்பவன் சிறுத்தொண்டர், திருவெண்காட்டுநங்கை, சீராளன் ஆகியோரின் செப்புத்திருமேனிகளைச் செய்தளித்திருக்கின்றான். இதிலிருந்து சோழர் காலத்தில் சிறுத்தொண்டரும் அவரது மனைவியும், மகனும், மக்கள் மற்றும் மன்னனின் மனதில் எந்த அளவுக்கு இடம்பெற்றிருந்தனர் என்பது நன்கு புலனாகும்.

கணபதீச்சுவரர் திருக்கோயில் முதன்முதலில் முதலாம் ஆதித்தன் காலத்தில் கற்றளியாக்கப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது. அதற்கு முன்னர் இத்திருக்கோயில் செங்கற்கட்டடமாக இருந்திருக்க வேண்டும். இன்றும் இத்திருக்கோயில் திருச்சுற்று மாளிகையில் காணப்படும் முதலாம் ஆதித்தன் காலக் கலைப் பணியைச் சேர்ந்த நான்முகன், மற்றும் உமையொருபாகன் கற்றிருமேனிகள் இவ்வுண்மைச்குச் சான்றுகளாக விளங்குகின்றன. அதன்பின் இத்திருக்கோயில் முதலாம் இராசராச சோழன் காலத்தில் மீண்டும் திருத்தியமைக்கப்பட்டிருக்க வேண்டும். இன்றுள்ள கணபதிச்சுரர் கருவறை முதலாம் இராசராசன் காலக் கட்டடக் கலைப்பாணியுடன் விளங்குகின்றது. இக்கோயிலிலுள்ள தேவகோட்டங்களில் கணபதி, தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், நான்முகன் ஆகியோரின் அழகிய சிற்பங்கள் உள்ளன. உத்திராபதீசுவரர் திருக்கோயிலின் கருவறையும், மண்டபமும் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டவையாகக் காணப்படுகின்றன. இக்கோயிலிலுள்ள சிற்பங்களில் வடக்குப் பிரகாரத்து மண்டபத்தில் உள்ள நவதாண்டவமூர்த்திகள் என்றழைக்கப்படும், புஜங்க லலிததாண்டவமூர்த்தி, கஜசம்கார மூர்த்தி, ஊர்த்துவதாண்டவமூர்த்தி, காலசம்காரமூர்த்தி, கங்காளமூர்த்தி, பிட்சாடணமூர்த்தி, திரிபுரசம்காரமூர்த்தி, பைரவர், உத்திராபதியார் போன்றவை தனிச்சிறப்பு வாய்ந்தவை.

## திருப்பயற்றூர் (திருப்பயத்தங்குடி)

இன்று திருப்பயத்தங்குடி என்று வழங்கிவரும் இவ்வூர், திருவாரூர் திருமருகல் சாலையில் அமைந்துள்ளது. இது

திருநாவுக்கரசரால் பாடப்பட்டிருப்பதால், கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூர் சிறப்புடன் திகழ்ந்து வருவது தெளிவாகிறது. புஞ்சைப் பயிர்களான பயிறுவகைகள் மிகுதியாக விளையும் காரணத்தினால், இவ்வூர் பயற்றூர் என வழங்குகிறது என்பர். வணிகன் ஒருவனுடைய வேண்டுகோளை ஏற்று இறைவன், அவனது மிளகு மூட்டைகளை வரிவிலக்கின் பொருட்டு பயறு மூட்டைகளாக மாற்றித் தந்ததால் இவ்வூருக்குப் "பயிற்றூர்" என்று பெயரேற்பட்டதாக ஒரு செவிவழிச் செய்தியும் உண்டு.

இன்று இவ்வூர் இறைவன் திருப்பயற்றுநாதர் என்று அழைக்கப்படுகிறார். 1300 ஆண்டுகளுக்கு முன் அப்பர் பெருமான் இவ்வூர் இறைவனைத் திருப்பயற்றூரனார்" என்றே சுட்டியிருக்கிறார். இறைவியின் பெயர் காவியங்கண்ணியாகும். பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் திருப்பயற்றூர் என்று இவ்வூர் குறிப்பிடப்படுகிறது.

இவ்வூர் திருமருகல், திருச்செங்காட்டாங்குடி, கீழைத்தஞ்சாவூர் திருமாலயன் பொய்கை, வைப்பூர், விற்குடி, திருப்பனையூர், திருக்கண்ணபுரம். இராமனதீச்சரம், திருப்புகலூர் போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்கள் சூழ அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

### திருப்பனையூர்

நன்னிலம் வட்டத்திலுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்களுள் திருப்பனையூர் குறிப்பிடத்தக்கது. முன்னொரு காலத்தில் இப்பகுதி பனைமரங்களடர்ந்த காடாயிருந்திருத்தல் வேண்டும். அதனாலேயே இவ்வூர் பனையூர் என்று பெயர் பெற்று, "திரு" என்ற சிறப்பு அடைமொழி சேர்த்து திருப்பனையூராகியிருத்தல் வேண்டும். இன்றும் இவ்வூரிலுள்ள சௌந்தரநாதர் திருக்கோயிலின் தலமரம் (தல விருட்சம்) பனைமரமாக இருப்பது குறிப்பிடத்தக்கது. இவ்வூரைப் போன்ற பனைமரத்தால் பெயர் பெற்ற ஊர்கள் பல உள்ளன. அவற்றுள் திருப்பனங்காடு, திருப்பனைக்குளம், பனைப்பாக்கம், பனைக்குடி, பனைமரத்துப் பட்டி போன்றவை குறிப்பிடத்தக்கவை.

இவ்வூரிலுள்ள சௌந்தரநாதர் திருக்கோயிலுக்குத் திருஞானசம்பந்தர் வருகைபுரிந்து பதிகம் பாடியிருப்பதால், இத்திருக்

கோயில் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகிறது என்பது தெளிவாகிறது. இவருடைய பதிகங்களில் ஊரின் பெயர் பனையூர் என்றே குறிக்கப்படுவதால் ஏறத்தாழ 1300 ஆண்டுகளாகவே இவ்வூரின் பெயர் மாற்றமின்றி வழங்கி வருவது தெளிவாகிறது.

இன்று சௌந்தரநாதர் அல்லது சௌந்தரேசுவரர் என்றழைக்கப்படும் இறைவனின் பெயர் 11, 12, 13-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் ''அழகியதேவர்'' என்றும் ''அழகியநாயனார்'' என்றும், அழகிய தமிழில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சுந்தரரும் தமது திருப்பதிகத்தில் திருப்பனையூர் இறைவனை ''அழகியர்'' என்றே குறித்துள்ளது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ''அழகிய தேவர்'' ''சௌந்தரநாதர்'' என்று வழங்கப்படுவது போலவே ''திருப்பனையூர்'' என்ற இவ்வூரின் பெயர் வடமொழியில் தாலவனம் என்று வழங்கி வருகிறது.

சங்ககால மன்னர்களுள் தனிச்சிறப்புப் பெற்று விளங்கியவனான கரிகால் சோழன், தன் தாய் வயிற்றிலிருந்தபோதே தந்தை இளஞ்சேட்சென்னியை இழந்தான். இவனது தாய்மாமனாகிய சங்ககாலப் புலவர் ஒருவரால் பனையூரில் கொண்டுவந்து, எட்டு வயது வரை வளர்க்கப்பெற்றான் எனக்கருதப்படுகிறது.

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் இவ்வூர்ச் சிவாலயத்திற்கு மத்தியான சந்தியில் வழிபட வந்த சிவயோகிகளுக்கும், தபசியருக்கும் சட்டிச்சோறு கொடுக்கப்பட்டிருக்கிறது. இவ்வூர்க் கல்வெட்டுக் கங்கைகொண்டசோழ வாய்க்கால், திரிபுவனமாதேவி வதி, செங்கழுநீர்க்குளம், குலோத்துங்க சோழப்பேராறு போன்ற நீர்நிலைகளைக் குறிப்பிடுவதால் இப்பகுதி சோழர் காலத்தில் வளம் மிக்கிருந்தமையைப் புலப்படுத்துகின்றன. முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் திருப்பள்ளி எழுச்சி சாதிப்பதற்காக ஆறுமாக்காணி முந்திரிகைக் கீழரை நிலம் இக்கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்தது.

இரவுச்சந்தியின் போது ஸ்ரீபலி செய்வதற்கும் வழிவகை செய்யப்பட்டிருந்தது. சுந்தரபாண்டியனின் ஆட்சிக் காலத்தில் அவனது பெயரில் ''சுந்தரபாண்டியன் சந்தி'' என்ற சிறப்பு

வழிபாடு நடத்துவதற்கும், திருநாள், அமுதுபடி, சாத்துபடி உள்ளிட்ட பலவகைச் செலவினங்களுக்குமாகத் "திருப்பத்தடி நல்லூர்" என்ற பெயரில் ஐந்து வேலி நிலம் இக்கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்தது.

### திருமருகல்

நன்னிலம் வட்டத்திலுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்களுள் திருமருகலும் ஒன்று. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் இவ்வூருக்கு வந்து பதிகம் பாடி இருப்பதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே இவ்வூர் பெருஞ்சிறப்புடன் விளங்கியிருக்கிறது என்பது தெளிவாகிறது. இவ்வூருக்கு 'மருகல்'' என்ற பெயர் ஏறக்குறைய 1300 ஆண்டுகளாக வழங்கி வருவதைத் தேவாரத் திருப்பதிகங்கள் மூலம் அறிய முடிகிறது.

இவ்வூர் மாடவீதிகள் நிறைந்த மதில் சூழ்ந்த பேரூராகத் திகழ்ந்ததைத் தேவார வரிகள் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. மேலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே திருக்கோயில் வழிபாடு சிறப்பான நிலையில் இருந்திருக்கிறது. இறைவனை வேதமோதி மறையோர் வழிபட்டிருக்கின்றனர். பாடல், முழவுடன், பெருமாளின் வீதி உலா என்று இவ்வூர் வழிபாட்டுச் சிறப்புடன் திகழ்ந்திருக்கிறது. இவ்வூரில் குடிகொண்டுள்ள இறைவனை நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும், "மருகற்பெருமான்" என்றும் "மருகனிலாவிய மைந்தன்" என்றும் சுட்டி அழைத்துள்ளனர். இன்றைய தினம் இறைவன் அருள்மிகு மாணிக்கவண்ணர் என்ற பெயரில் அழைக்கப்படுகிறார்.

பிற்காலச் சோழர் காலத்தில் இவ்வூரின் பெயரால் "மருகல் நாடு" என உள்நாட்டுப் பிரிவொன்றிருந்திருக்கிறது. இந்த நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஊர்களாக எயிலூர், இடையாற்றுக்குடி, (கலிகடிந்த சோழச்சதுர்வேதிமங்கலம்/இடையாத்தங்குடி) கருப்பூர், மருதாவூர், மருகல் (திருமருகல்), பொற்கலக்குடி (பொற்காரைக்குடி) பூதலூர் (மேல்பூதனூர்), தஞ்சாவூர் (கீழத்தஞ்சாவூர்) திருச்செங்காட்டாங்குடி, திருக்கண்ணமங்கலம் (பெரிய கண்ணமங்கலம்), திருக்கண்ணபுரம், வைப்பூர் போன்ற கிராமங்கள் விளங்கியிருக்கின்றன.

## திருமீயச்சூர் (திருமெய்ச்சூர்)

இவ்வூர் திருவாரூர்-மயிலாடுதுறை சாலையில் பேரளம் அருகில் அமைந்துள்ளது. அப்பரும், சம்பந்தரும் இவ்வூருக்கு வந்து பதிகம் பாடி இருப்பதால் இவ்வூரும், இவ்வூர்ச் சிவாலயங்களும், கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே சிறப்புப்பெற்று விளங்கின என்பது தெளிவாகிறது. இவ்வூரிலுள்ள முயற்சிநாதர் (மேகநாதர்) திருக்கோயில் திருமீயச்சூர்த் திருக்கோயிலாகவும், இதே கோயிலில் வடக்குத் திருச்சுற்றிலுள்ள சகலபுவனேசுவரர் திருக்கோயில் திருமீயச்சூர் இளங்கோயிலாகவும் போற்றப்படுகின்றன. திருமீயச்சூர்த் திருக்கோயில் இறைவனைத் திருஞானசம்பந்தர் தம் பதிகங்களில் மீயச்சூரார், மீயச்சூரன் என அழைத்துள்ளார். சகலபுவனேசுவரர் திருக்கோயிலைத் திருநாவுக்கரசர், "திருமீயச்சூர் இளங்கோயில்" என்றே சுட்டியழைத்துப் பாடியுள்ளார். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இவ்வூர் செழிப்புடன் இருந்ததை,

> "மேகமுரிஞ்சும் பொழில்சூழ் மீயச்சூர்"
>
> "கோதி வரிவண் டறைபூம் பொய்கைப் புனல்மூழ்கி
> மேதி படியும் வயல்சூழ் மீயச்சூர்"

போன்ற தேவார வரிகளால் நன்குணரலாம்.

இவ்வூர் பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் அம்பர் நாட்டுப் பிரிவுக்குட்பட்ட கிராமமாக திகழ்ந்துள்ளது. பிற கிராமங்களாக அடியரைய குறும்பல் (குறும்பர் கீழத்தெரு) அம்பபுறத்தூர்(அம்பகரத்தூர்) அம்பர் திருமாகாளம் (விக்கிரமசோழபுரம், அம்பர் கோயில் திருமாளம்), அவ்வைநல்லூர், எண்ணுகுடி(எண்ணைக்குடி), கொற்றவாசல் (கொத்தவாசல்) நாகங்குடி, பழையாறு(பழையாறை), பெரும்போழ், பிரெட்டைக்குடி (நெட்டைக்குடி) புரக்குடி, திருக்கடவூர் (திருக்கடையூர்) வைகாவூர் (எதிரிலிச் சோழ நெற்குன்றம்), பாவடைக்குடி (தியாகவினோத நல்லூர்/பாவட்டாகுடி), மேற்றூர், போன்றவைத் திகழ்ந்திருக்கின்றன.

கல்வெட்டுகளில் இவ்வூரின் பெயர் திருமிய்ச்சூர் (திருமியச்சூர்) திருமிகைச்சூர், திருமெச்சூர், திருமீயெச்சூர் எனவும், இறைவனின் திருப்பெயர் திருமெய்ச்சூர் மூலஸ்தானமுடைய மகாதேவர்,

திருமெய்ச்சூருடைய மகாதேவர், நாயினார் திருமிகைச்சூருடையார், திருமிகைச்சூருடைய நாயனார், திருமீயெச்சூர் மகாதேவர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இவ்வூர்க் கோயிலில் விளக்கெரிப்பதற்காக, ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வேட்கோவன் புகழன் முன்னூற்றுவன் என்பவர், ஒன்பது மா அரைக்காணி நிலத்தையும், தொண்ணூறு ஆடுகளையும் கொடையாக வழங்கியிருக்கிறான். இவன் வழங்கிய நிலத்திற்குச் "செம்பியன் மாதேவி மயக்கல்" என்ற பெயர் வழங்கியிருக்கிறது. திருமெய்ச்சூரைச்சேர்ந்த வியாபாரி தாழிமாணிக்கன் என்பவர் ஆயிரத்துநூறு ஆண்டுகளுக்கு முன்னர், இக்கோயிலில் விளக்கு எரிப்பதற்காகத் தென் குடியில் நான்கு மா நிலத்தினைத் தானமாக அளித்திருக்கிறார். இவ்விளக்குகளை எரிக்கும் பொறுப்பினை இக்கோயிலில் பணி புரிந்த மூன்று குடியினர் ஏற்றுச் செயல்பட்டிருக்கின்றனர்.

ஏறக்குறைய 1100 ஆண்டுகளுக்கு முன் இத்திருக்கோயிலில் வைகாசி உத்திரத்திருவிழா மிகச் சிறப்பாக ஏழு நாட்கள் நடந்திருக்கிறது. இத்திருவிழாவிற்குச் சிவயோகிகளும், மாகேசுவரர்களும், அடியார்களும் வந்திருக்கின்றனர். திருவிழாவிற்கு வந்த இவர்களுக்கு உணவளிப்பதற்காக, திருப்பாச்சூர் கிழவன் அமுதாள்வான் என்பவர் "மாணிக்குடி" என்ற ஊரில் நிலம் வாங்கிக் கொடுத்திருக்கிறார். அமுதளிப்பதில் ஆர்வமுடையவராய் இருந்ததாலேயே அவர் தம் பெயரையும் அமுதாள்வான் என்று வைத்துக் கொண்டார் போலும்.

ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் (கி.பி. 911இல்) ஆலத்தூர் ஆளுங்கணத்தானாகிய அத்திக்காடு கருப்பிடவூர் சுவாமி என்பவரிடமிருந்து அதே ஆலத்தூரைச் சேர்ந்த வெள்ளாளந் சிங்கன் என்பவர், இக்கோயில் திருநந்தவனத்திற்கு நீர் இறைப்பாருக்கும், திருமெருகு இடுவார்க்கும் நிலம் வாங்கியளித்திருக்கிறார். ஆலத்தூர் சபையாரே அந்நிலத்திற்கு விலை நிர்ணயம் செய்து, விலையாகப் பொன் கொண்டு வரி நீக்கித் தந்திருக்கிறார்கள்.

கி. பி. 10 - 11 ஆம் நூற்றாண்டுகளில் மகளிர் சிலரும், இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காகக் கொடையளித்துள்ளனர். பெருஞ்செல்விச்சாணி, உமையாழ்வி, ஆண்டாள் சாணி போன்ற சில கொடையாளிகளின் பெயர்களை இக்கோயிற் கல்வெட்டுகளிலிருந்து அறிய முடிகிறது.

10-ஆம் நூற்றாண்டில் சோலைச்சாத்தான் என்ற கருஞ்சிருக்கை பரலூருடையார் திமிலை மற்றும் சில இசைக்கருவிகளைத் தானமாக அளித்திருக்கிறார்.

முதலாம் குலோத்துங்கனது நான்காம் ஆட்சியாண்டில், இக்கோயிலிலுள்ள திரிபுராந்தகரின் வழிபாட்டிற்காக நிலம் கொடுக்கப்பட்ட செய்தி, அத்திரிபுராந்தகர் செப்புத்திருமேனியின் பீடத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளது தனிச்சிறப்பாகும்.

சடையவர்மன் சுந்தரபாண்டியனின் பத்தாவது ஆட்சியாண்டில் இக்கோயிலிலுள்ள திருக்காமக்கோட்டமுடைய சிவகாமசுந்தரி நாச்சியாருக்கு சாத்துப்படி, பரிவட்டம், மற்றும் விஞ்சனங்களுக்காக, இவ்வூர் சபையாரும், நாட்டாரும், காலிங்கராயரும், கடைக்கட்டு பிள்ளை ஆதித்ததேவர் ஆகியோர் சேர்ந்து விரையாவிடங்க பலபட்டடை, தறிஇறை, தட்டார்பாட்டம், சேனைக்கடை, வேட்டைக்காரர்கடை, குளவடை ஒழுக்குநீர், மீன்பாட்டம், செக்காயம், வண்ணார் நற்காசு, பலகணிமாலை, உப்புவழிச்சாரிகை உள்ளிட்ட வரிகளை அளித்துள்ளனர்.

கி.பி. 15, 16-ஆம் நூற்றாண்டுகளில் இவ்வூர் இறைவனுக்குச் சாத்துப்படி, அமுதுபடி, விஞ்சனம், திருப்பரிவட்டம், திருவிளக்கு எண்ணை ஆகியவற்றிற்காகத் திருமெய்ச்சூர் பண்டாரவாடையில், வீரராசேந்திர சோழப் பேராற்றின் வடகரையில், பூசமண்டபமும், மதில் சலசமுத்திரக்கரைக்கு உட்பட்ட தென்னை, மா, பலா, இலுப்பை ஆகியனவும் வழங்கப்பட்டன.

தமிழகக் கட்டடக் கலை வரலாற்றில் தூங்கானை மாட வடிவில் அமைந்த திருக்கோயில்களுள், இக்கோயில் குறிப்பிடத்தக்க தனிச் சிறப்புடையவொன்றாகும்.

## திருவாஞ்சியம்

நன்னிலம்-கும்பகோணம் பேருந்துத் தடத்தில் அச்சுதமங்கலத்திற்குத் தெற்கில் ஒரு கி.மீ. தூரத்தில் அமைந்துள்ள இவ்வூர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவராலும் பாடப்பட்டுள்ளதோடு,மாணிக்கவாசகரால் கீர்த்தித்திருவகவலிலும், திருக்கோவையாரிலும் குறிப்பிட்டும் பாடப்பட்டுள்ள சிறப்புள்ளது. அருணகிரிநாதர் திருப்புகழிலும் இவ்வூர் இடம்பெற்றுள்ளது. களந்தைக் குமரனால் இயற்றப்பட்ட இவ்வூர் தலபுராணமும் உண்டு.

> "புகழாற் பெருகுந் திருவாஞ்சியம்"
> "மாலை கோலமதி மாடம் மன்னும் திருவாஞ்சியம்"
> "சுற்று மாடங்கள்சூழ் திருவாஞ்சியம்"
> "தெற்கு மாடங்கள் சூழ்திருவாஞ்சியம்"

என்றும் தேவாரப் பதிகங்கள் இவ்வூரைப் போற்றுவதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர் சிறந்த நிலையிலிருப்பது புலனாகிறது.

இவ்வூர் திருவாஞ்சிநாதர் என்ற சிவன் கோயிலில் இருந்து முப்பத்தேழு கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுள்ளன. சோழர்களில் முதற் குலோத்துங்கன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றாம் இராசராசன் கல்வெட்டுகளும், பாண்டியர்களில் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சடையவர்மன் வீரபாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், பராக்கிரம ஸ்ரீவல்லப பாண்டியன் கல்வெட்டுகளும் விசயநகரவேந்தர் கிருஷ்ணதேவராயர் கல்வெட்டும், தஞ்சை நாயக்க அரசர் இரகுநாத நாயக்கர் கல்வெட்டும் உள்ளன.

முதற் குலோத்துங்கசோழன் 26-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருவாஞ்சியமுடையநாயனார் கோயிலில் திருவரங்கமுடையான் என்பவன் திருப்பள்ளியறை நாச்சியாரை எழுந்தருளிவித்த செய்தியையும், அத்திருப்பள்ளிறை நாச்சியாருக்கு இறையிலியாக ஊர் சபையார் நிலம் அளித்த செய்தியைபும் தெரிவிக்கின்றது. செம்பியன்மாதேவி பேராறு, குலோத்துங்கப் பேராறு, இராஜேந்திரசோழ வாய்க்கால் ஆகிய பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. சீரங்கநாதபட்டன், கருவறைபோல் நின்றான் ஆகியோரிட

மிருந்தும் உடகண்ணமங்கலத்தைச் சேர்ந்த காணியாளர்களிட மிருந்தும் நிலம் விலைக்கு வாங்கப்பட்டது. நிலத்திற்கு விலையாகக் காசு நாற்பத்தைய்யாயிரத்தைந்நூறு, ஐயம்பகாயிர்ம், ஒன்பதி னாயிரம்'' என்று கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாக உள்ளது. குதிரைவட்டம் உய்யக்கொண்டான் மயக்கல் என்ற நிலங்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. திருமங்கலத்து நாராயண பட்டசோமாசியாரிடமிருந்து 16,000 காசுகள் கொடுத்து நிலம் விலைக்கு வாங்கிய செய்தியும், சாகாளை அவிமுத்தீஸ்வரமுடையான் பட்டரான வெள்ளைப்பிள்ளை ஆண்டார் என்பவரும், சீராள தேவர் என்பவரும் முறையே எழுந்தருளிவித்த தட்சிணாமூர்த்தி, சுப்பிரமணியப்பிள்ளையார் ஆகியோருக்கு வழிபாடு செய்வதற்காக நிலம் வாங்கிய செய்தி வருகிறது. இக்கோயில் ஆதிசண்டேசுவர தேவகன்மிகளுக்கு, அசுரம் ராஜகம்பீரச் சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த மாதவபட்டன் என்பவர் நிலம் விற்றுக் கொடுத்துள்ளார். இக்கோயிலுக்கு சிறுமன்றூர் கிழவன் அழகியநாயகன் அரையன் திருவம்பலப்பெருமாள் என்பவன் நிலம் விற்றுக் கொடுத்து உள்ளூர் வியாபாரி சாட்சியாக பணம் நூற்றுஐந்து பெற்றுக்கொண்டு நிலவிலைப் பிராமணம் செய்து கொடுத்த செய்தி கூறப்பட்டிருக் கின்றது. பிடாரி கோயில் ஒன்று இவ்வூரில் இருந்ததாகத் தெரியவருகிறது. மங்கலக்கிழையான் தேவர் என்பவர், தான் சீதனமாக பெற்ற மூன்றுவேலி நிலத்தை இக்கோயிலுக்கு அறுபது பணத்திற்கு விற்று விலைப்பிரமாணம் செய்து கொடுத்துள்ளார். முடிகொண்டசோழப் பேராறு, சோமனாததேவ வாய்க்கால் ஆகியவை இதற்கு எல்லைகளாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ராஜராஜ சதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்த காராம்புச் செட்டி ஸ்ரீதரபட்டன் என்பவன் ஆணங்கிசாணி என்ற தனது தாயின் ஒரு வேலி நிலத்தை இக்கோயிலுக்கு விற்று விலைப் பிரமாணம் செய்து கொடுத்துள்ளான். திருவாஞ்சியமுடைய நாயனார் கோயிலில் திருக்காமக்கோட்டமுடைய நாச்சியாராகிய இறைவியை (அம்மன் கோயில்) எழுந்தருளுவிக்கும் போது இக்கோயிலுக்கு வடக்குத் திருவீதியிலே நாலே சின்னங்கோல் மனையை காணியாகவும், இறையிலியாகவும், இக்கோயில் எடுத்தவர்க்கு அளிக்கப்பட்டுள்ளது. விபவ வருடம் பங்குனி

மாதத்தில் இராகவன்பிள்ளை என்பவரின் அதிகாரியான அப்பநாயன் என்பவன் இக்கோயிலில் மண்டபம் ஒன்றைக் கட்டியுள்ளான்.

இக்கோயில் அம்மன் சந்நிதியிலுள்ள மூன்று நாயன்மார்களுக்கும், சிறுத்தொண்டர் சீருரைத்தாருக்கும் நித்திய வழிபாட்டு நிவந்தங்களுக்கு அனபாயன் என்பவன் தானமாக காசுகள் அளித்துள்ளான். சிதம்பரத்திலுள்ள பிக்ஷாமடத்து அகோர சிவாச்சாரியரின் மாணவரான பெருமாநயினார் என்பவர் தன்னுடைய மடத்திற்காகக் குத்துவாஞ்சேரியில் நிலம் வாங்கி தானமாக அளித்தார். தஞ்சைநாயக்க மன்னனாகிய இரகுநாத நாயக்கரின் பிரதிநிதியாகிய மாதையநாயக்கர் மல்லப்ப நாயக்கர் என்பவர் திருவாஞ்சியத்திலுள்ள தேவரடியார்க்கு சில வரிகளைத் தானமாக அளித்தச் செய்தியை மற்றொரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

## தூத்துக்குடி (தூற்றுக்குடி)

நன்னிமை அருகிலமைந்துள்ள இவ்வூரின் பெயர் மூன்றாம் இராசராசசோழனின் கல்வெட்டில் தூற்றுக்குடி எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. தூற்றுக்குடி என்ற பெயரே காலப்போக்கில் தூத்துக் குடி என்று மருவி வழங்கிவருகிறது எனக்கொள்ளலாம். பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூர் பனையூர் நாட்டுப் பிரிவிற்குட் பட்ட ஒரு கிராமமாக இருந்திருக்கிறது. இவ்வூரைச் சேர்ந்த ஒருவர் மூன்றாம் இராசராசசோழனின் 17-ஆம் ஆட்சியாண்டில் திருமணஞ்சேரியிலுள்ள சிவாலயத்தில் விளக்கெரிப்பதற்காக ஒரு விளக்கினையும், நாற்பத்தைந்து காசுகளையும் வழங்கியுள்ள செய்தியினைத் திருமணஞ்சேரிக் கல்வெட்டொன்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. எனவே இவ்வூர் பிற்கால சோழராட்சிக் காலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகிறது எனலாம்.

## நல்லமாங்குடி

அச்சுதமங்கலம் சோமனாதசுவாமி கோயிலிலுள்ள மூன்றாம் இராசராசசோழன் காலக் கல்வெட்டில் இவ்வூரின் பெயர் நன்னில ...ாங்குடி என்றே குறிக்கப்பட்டிருப்பதால், சோழப் பெருவேந்தர் ...லத்தில் நன்னிலமாங்குடி என்றழைக்கப்பட்டு வந்த ஊர்ப்

பெயரே காலப்போக்கில் நல்லமாங்குடி என மருவி விட்டதெனலாம். எனவே இவ்வூர் சோழப் பெருவேந்தர் காலத்திலிருந்து இருந்து வருவது தெரிய வருகிறது.

**நன்னிலம்**

நன்னிலம் வட்டத்தின் தலைநகராக அமைந்துள்ளது இவ்வூர். 'கோச்செங்கணானால் எடுக்கப்பட்ட மாடக்கோயில்களுள் ஒன்றாக இவ்வூர்க் கோயிலும் கருதப்படுகிறது. இவ்வூருக்கு வந்து பதிகம் பாடியுள்ள சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வூர்க் கோயிலை நன்னிலத்துப் பெருங்கோயில் என்று சுட்டிப் பாடியிருக்கிறார். இக்கோயிலைக் கோச்செங்கட் சோழன் கட்டினான் என்பதை அவர் தம் பதிகத்தில்,

"கோடுயர் வெங்களிற்றுத் திகழ் கோச்செங்க ணான்செங்
கோயில் நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில்"

என்று குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்.

இவ்வூருக்கு மதுவனம், தேவாரண்யம், சுந்தரவாணி பிரகத்புரம் என்று பலபெயர்கள் புராண ரீதியாக வழங்கி வருகின்றன. நன்னிலம் என்ற ஊர்ப்பெயர்களில் காணப்படும் அடைமொழி நிலத்தின் வளத்தைக் குறிக்கும் என்பர்.

"பலங்கிளர் பைம்பொழில் தண்பணி தெண்மதியைத் தடவ
நலங்கிளர் நன்னிலம்"
"மடைமலி வண்கமலம் மட வண்ணம் மன்னி
நடைமலி நன்னிலம்"
"தளிர்தரு கோங்கு வேங்கை தட மாதவி சண்பகமும்
நளிர்தரு நன்னிலம்"

என்று சுந்தரர் இவ்வூரைப் பற்றி பாடியிருப்பதால் வளமான நல்ல நிலத்தை உடைய ஊராக இவ்வூர் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே திகழ்ந்திருப்பது தெளிவாகிறது.

சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசனது ஆட்சி காலத்தில் இவ்வூரில் திருஅமலீச்வரம் என்ற பெயரில் ஒ கோயிலும் திருமேற்றளி என்ற பெயரில் மற்றொரு கோயிலு

சிறப்புற்று விளங்கியதைத் தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டு களால் அறிய முடிகிறது. தஞ்சைப் பெருங்கோயில் இறைவனுக்குத் தளிச்சேரிப் பெண்டுகளாகச் சோழமண்டலத்துச் தளிச்சேரிகளில் இருந்து சேர்ந்த தளிச்சேரிப் பெண்டுகளில் நன்னிலத்துத் திரு அமலிச்வரத்தைச் சேர்ந்தவர்களாக கயிலாயம், ஏறி, இலவம் சோழமாதேவி, பழிப்பிலி ஆகிய ஐந்து நடனமங்கையரும், நன்னிலத்து திருமேற்றளியைச் சேர்ந்தவர்களாக ஆமாத்தூர், சங்காணி என்ற பெயரில் இருவரும், ஒற்றியூரைச் சார்ந்தவர்களாக நான்கு நடன மங்கையரும் காணப்படுகின்றனர். இதிலிருந்து கி.பி. பத்தாம் நூற்றாண்டில் நன்னிலத்தில் நடனக் கலையில் சிறந்து விளங்கிய தளிச்சேரி பெண்டுகள் பலரிருந்ததை உய்த்துணரலாம்.

முதலாம் இராசராசனின் திருப்புகலூர்க் கல்வெட்டில் "நன்னிலப் பெருவழி" குறிப்பிடப்படுவதால், இவ்வூர் சிறப்புமிக்க ஊராக இருந்தமை தெளிவாகிறது.

## பாவட்டக்குடி

பிற்காலச்சோழர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் பாவடைகுடி என்றும், தியாகவினோதநல்லூர் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. பாவடைகுடி என்ற பெயரே காலப்போக்கில் மருவி தற்சமயம் பாவட்டாக்குடி என்று அழைக்கப்படுகிறது. இவ்வூரின் வீதிகளில் ஒன்றுக்கு சோழப் பெருமன்னன் வீரராசேந்திரன் பெயரால் வீரராசேந்திரன் திருவீதி என்ற பெயர் வழங்கியிருக்கிறது. இத்திருவீதியில் சுப்ரமணிப்பிள்ளையார் கோயில் அமைந்திருப்ப தாக இவ்வூரிலுள்ள அருள்மிகு சுந்தரேசுவரர் திருக்கோயிலில் காணப்படும் மூன்றாம் இராசராசனின் கல்வெட்டொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## புத்தகளூர்

புத்தகளூர் கிராமம் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் பழைமை மிக்கது. இன்றைக்கு இடிபாடுற்ற நிலையில் காணப் படும் இவ்வூர்ச் சிவாலயம் முதலாம் பராந்தக சோழனின் ஆட்சிக் காலத்தில் சிறப்புற்று விளங்கியதை, இச்சிவாலயத்தில் உள்ள

தட்சிணாமூர்த்தி கற்சிலையின் பின்புறமுள்ள கல்வெட்டால் உணரமுடிகிறது. இவ்வூர் பிற்காலச்சோழர் ஆட்சிக்காலத்தில் புத்தகைளூர் என்று வழங்கி காலப் போக்கில் புத்தகளூர் என்று மருவியிருக்கக் கூடும்.

## பெரியகண்ணமங்கலம் (திருக்கண்ணமங்கலம்)

திருமருகல் பகுதியில் உள்ள இந்த ஊர் பிற்காலச்சோழராட்சிக் காலத்திலேயே சிறப்புடன் திகழ்ந்திருக்கிறது. பிற்காலச் சோழராட்சியில் திருக்கண்ணமங்கலம் என்றழைக்கப்பட்ட இவ்வூர் இன்றைய தினம் பெரிய கண்ணமங்கலம் என்றழைக்கப்படுகிறது. பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூரின் ஒரு பகுதியாக விளங்கிய பார்ப்பனச்சேரியைச் சேர்ந்த சோமதேவ பட்டன் என்பவர், கி. பி. 10–ஆம் நூற்றாண்டில் திருவரங்கத்திலுள்ள திருவரங்கநாதர் கோயிலுக்கு அறுபது கழஞ்சுப் பொன் அளித் திருக்கிறார். இப்பொன்னைக் கொண்டு வேதம் வல்ல அந்தணர் ஒருவருக்கு உணவளித்து வர ஏற்பாடு செய்திருக்கிறார். பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூர் மருகல் நாட்டுப் பிரிவிற்குட் பட்ட ஒரு கிராமமாகத் திகழ்ந்திருக்கிறது.

## பொற்காரைக்குடி (பொறகலக்குடி)

இவ்வூர் திருமருகல் அருகில் அமைந்துள்ளது. பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் வீரராசேந்திர சோழனின் மூன்றாவது ஆட்சியாண்டில், இவ்வூரைச் சேர்ந்த சியாரூர் மதுராந்தகமூவேந்த வேளான் என்று சிறப்புடன் அழைக்கப்பட்ட, நாராயணன் என்பவர் ஆந்திர மாநிலத்திலுள்ள திருக்காளத்தி உடையாற்கு (காளஹஸ்தியிலுள்ள காளஹஸ்தீசுவரருக்கு) திருநொந்தா விளக் கெரிப்பதற்காக தொண்ணூற்றாறு சாவாமூவாப்பேராடுகளை அளித்திருக்கிறார்.

பிற்காலச் சோழர் ஆட்சிக்காலத்தில் பொறகலக்குடி, மருகல் நாட்டுப் பிரிவிற்குட்பட்ட ஒரு கிராமமாக இருந்திருக்கிறது. பொற்கலக்குடி என்ற பெயரே காலப்போக்கில் மருவி தற்சமயம் பொற்காரைக்குடி என்று வழங்கி வருகிறது.

## போழக்குடி (பேழைக்குடி)

நன்னிலம் வட்டம் பேரளம் குறுவட்டத்தில் அமைந்துள்ளது இவ்வூர். கி.பி. 1659ஆம் ஆண்டில் இவ்வூரில் ராசமான்யராசாஸ்ரீ மல்லாரிராயர் என்பவர் குளத்தினை வெட்டி அக்குளத்திலிருந்து கூடையால் தண்ணீர் இறைப்பதற்கும், குளத்தைச் சுற்றியுள்ள மரங்களை வெட்டுவதற்கும் தடைவிதித்திருக்கிறார். கி.பி.17-ஆம் நூற்றாண்டளவில் பேழைகுடி என்றழைக்கப்பட்ட இவ்வூரின் பெயர் நாளடைவில் திரிந்து போழக்குடி என்றழைக்கப்படுகிறது.

## முடிகொண்டான்

இவ்வூர் மயிலாடுதுறை-திருவாரூர் பேருந்துத் தடத்திலமைந்துள்ளது. முதலாம் இராசேந்திரசோழனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்றான முடிகொண்டான் என்ற பெயரால் இவ்வூர் அமைந்திருப்பதால் இவ்வூர் பிற்காலச் சோழராட்சிக் காலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகிறது எனக் கொள்ளலாம். இராமாயண காலத்தில் பரத்வாசமுனிவரின் ஆசிரமம் இவ்வூரில் தான் அமைந்திருந்தது என்று செவிவழிச் செய்தி சொல்லப்பட்டு வருகிறது.

திருப்புகலூர்க் கல்வெட்டில் குறிக்கப்படும் பனையூர் நாட்டு முடிகொண்டசோழச் சதுர்வேதிமங்கலம் இவ்வூராக இருக்கக் கூடும். காலப்போக்கில் இவ்வூர்ப் பெயரில் இருக்கும் சதுர்வேதி மங்கலம் என்ற பின்னொட்டு விடுபட்டு, முடிகொண்டான் என்றழைக்கப்பட்டிருக்க வேண்டும். இக்கருத்து ஏற்றுக் கொள்ளப் படும் நிலையில் இவ்வூரில் சோழராட்சிக் காலத்தில் பெருங்குறி மகாசபை செயல்பட்டதெனக் கொள்ளலாம். முதலாம் குலோத் துங்கனது ஆட்சிக்காலத்தில் முடிகொண்டசோழச் சதுர்வேதி மங்கலத்துக் கரணத்தானாக நாங்குடையான் மூவாயிரவன் அழகிய மணவாளன் என்பவர் இருந்திருக்கிறார். இவர் சுகவீனமடைந்த போது, அவருடைய உடல்நலனை முன்னிட்டு திருப்புகலூர்க் கோயில் சித்திரைத் திருவிழாவில் ஐந்தாவது நாள் விழா கொண்டாடுவதற்காக, திருப்புகலூர்க் கோயிலுக்கு, அக்கோயில் பண்டாரத்திடமிருந்து ஒன்பது காசுகளைப் பெற்றுக் கொண்டு, இவ்வூர் மகாசபையார் திருவிழாப்புறமாக இறையிலி செய்து நிலமளித்திருக்கின்றனர். இச்சதுர்வேதிமங்கலத்தில் உத்தமசோழச்

சேரி, இராசேந்திரசோழச்சேரி, முடிகொண்டசோழச்சேரி, குந்தவைச்சேரி, சனநாதச்சேரி, திரிபுவனமாதேவிச்சேரி, பவித்திர மாணிக்கச்சேரி போன்ற பல சேரிகளும் உள்ளடங்கியிருந்ததைத் திருப்புகலூரிலுள்ள சில கல்வெட்டுகளிலிருந்து உய்த்துணர முடிகிறது.

முதலாம் குலோத்துங்கனது ஆட்சிக்காலத்தில் இவ்வூர் மகாசபையார் திருப்புகலூர் கோயிலிலிருந்து மூன்றரைக் காசுக்ளைப் பெற்றுக்கொண்டு, திருப்புகலூர்க் கோயிலுக்கு நாற்பத்தெண்ணாயிரவன் திருநந்தவனம் என்ற பெயரில் திருநந்தவனம் அமைப்பதற்காக முடிகொண்ட சோழப் பேராற்றுக்குத் தெற்கில், கசத்தூரில், நிலத்தினை இறையிலி செய்து கொடுத்திருக்கின்றனர். திருப்புகலூர்க் கோயிலுக்கு முதலாம் குலோத்துங்கசோழனது ஆட்சிக்காலத்தில் பரிவாரத்துப் பெண்களில் ஒருத்தியான இராசராசசோழன் அரம்பையார் என்பவர், சித்திரைத் திருவிழா நடத்துவதற்கும், அத்திருவிழாவிற்கு வரும் ஸ்ரீமாகேசுவரருக்கு, நம்பிமுருகன் திருமடத்தில் உணவளிப்பதற்காகவும் நிலம் அளித்திருக்கிறார்.

### விற்குடி

நன்னிலம் வட்டத்தில் மயிலாடுதுறை திருவாரூர் புகைவண்டித் தடத்தில் விற்குடி ஒரு புகைவண்டி நிலையமாக விளங்குகிறது. புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கில் இரண்டு கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இவ்வூருக்கு, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் வந்து பதிகம் பாடியிருப்பதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூரும், இவ்வூரிலுள்ள சிவாலயமும் சிறப்புடன் திகழ்ந்து வருவதை அறியலாம்.

அட்ட வீரட்டதலங்களுள் ஒன்றாகக் கருதப்படும் இவ்வூரில் இறைவன் சலந்தராசுரனைக் கொன்றதாகக் கருதப்படுவதைக் கீழ் வரும் பாடல் உணர்த்தும்.

''பூமன் சிரம்கண்டி, அந்தகன் கோவல் புரம் அதிகை
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மா வழுவூர்
காமன் குறுக்கை, யமன் கடவூர் இந்தக் காசினியில்
மேதன்று கொன்றையும் திங்களும் குடிதன் சேவகமே''

கி.பி. ஏழாம் நூற்றாண்டில், திருஞானசம்பந்தர் இவ்வூர் சிவாலயத்தினை "விற்குடி வீரட்டம்" என்றே தமது பதிகங்களில் குறிப்பிட்டுப் பாடியிருப்பதால் ஏறக்குறைய 1300 ஆண்டுகளாகவே இவ்வூரின் பெயர் விற்குடி என்றும் இறைவனின் பெயர் வீரட்டானேசுவரர் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. தற்போது இறைவனுக்கு மனானேசுவரர் என்று பெயர் வழங்கி வருகிறது. கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகளில் இவ்வூரின் பெயர் திருவிற்குடி என்று காணப்படுகிறது. இறைவனது பெயர் "விற்குடி உடையார்" என்று அக்கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டிருக்கலாம்.

விசயநகர மன்னர்களின் ஆட்சிக்காலத்தில், கிருட்டிணதேவ ராயர் பல சைவ வைணவ ஆலயங்களுக்கு 10,000 வராகன் அளித்த போது, இக்கோயிலுக்கும் தானம் வழங்கியிருக்கிறார்.

## வைப்பூர்

திருமருகல் பகுதியில் அமைந்துள்ளது இவ்வூர். முதலாம் இராசராசசோழன் தான் தஞ்சையில் கட்டிய பெரிய கோயிலுக்கு திருமெய்க்காப்பாளர்களை நியமித்தபோது, வைப்பூர் ஊரார் திருமெய்க்காப்பாளர் ஒருவரைத் தரவேண்டும் என்று ஆணை பிறப்பித்திருப்பதால், இவ்வூரார் தஞ்சாவூர்ப் பெரிய கோயிலுக்கு திருமெய்க்காப் பொன்றினை இட்டு, அத்திருமெய்க்காப்பாளருக்கு ஆண்டு ஒன்றுக்கு நூறுகலம் நெல்லினை ஊதியமாக வழங்கி வந்திருக்கின்றனர் என்பது தெளிவாகிறது. எனவே, ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளாகவே இவ்வூர் சிறப்புடன் விளங்கி வருகிறது எனலாம்.

## நீடாமங்கலம் வட்டம்

காக்கையாடி

கோயில்வெண்ணி

நீடாமங்கலம்

புனவாசல்

பூவனூர்

பேரையூர்

ரிஷியூர்

வடபாதிமங்கலம்

**காக்கையாடி**

இவ்வூருக்குச் சோழப் பெருவேந்தர் காலத்தில் வருத்தந் தவிர்த்த சோழச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் வழங்கியிருப்பதை இவ்வூரிலுள்ள கைலாசநாதர் கோயிலிலிருக்கும் சோழர் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது. சோழப் பெருவேந்தர் காலத்தில் இவ்வூர்ச் சபையில் ஆண்டு வாரியம் செய்கிற பெருமக்கள் இருந்ததை இவ்வூர் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

**கோயில் வெண்ணி**

ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழக வரலாற்றில் தனிச்சிறப்பிடம் பெற்றுவிட்ட வெண்ணி, தஞ்சையிலிருந்து நீடாமங்கலம் செல்லும் சாலையில் சாலியமங்கலத்திற்கும் நீடாமங்கலத்திற்கும் நடுவில், தஞ்சைக்குக் கிழக்கில் 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சங்ககாலச் சோழ மன்னனான கரிகாற்சோழனை இவ்வூரில்தான் சேர பாண்டிய மன்னர்களும் பதினோரு வேளிர்களும் எதிர்த்துப் போரிட்டனர். வெண்ணிக் குயத்தியார், மாமூலனார், முடத்தாமக் கண்ணியார் போன்ற சங்கப் புலவர்கள் இப்போர் குறித்துப் பாடியப் பாடல்கள் புறநானூற்றிலும், அகநானூற்றிலும், பொருநராற்றுப் படையிலும் இடம்பெற்றுள்ளன. இப்போரில் கரிகாலன் வெற்றி பெற்றான். சேரமான் நெடுஞ்சேரலாதனுக்கு இப்போரில் முதுகில் காயம் பட்டதால் அவன் வடக்கிருந்து உயிர்நீத்தான். சங்க இலக்கியங்களில் இவ்வூரின் பெயர் வெண்ணி என்றே காணப்படுவதால், இவ்வூருக்கு வெண்ணி என்ற இப்பெயர் ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளாகவே வழங்கி வருகிறதென்பது தெளிவு. வெண்ணி என்பது வென்றி என்பதன் மரூஉவாக இருக்கலாமென்று கருதப் படுகிறது. எனவே, வென்றியூர் என்ற பொருளில் இவ்வூருக்கு வெண்ணியூர் என்ற பெயர் ஏற்பட்டு அதுவே வெண்ணி எனச் சுருங்கி வழங்கியிருக்கலாமென்று இவ்வூர்ப் பெயருக்கொரு காரணம் சொல்லப்பட்டு வருகிறது. சங்கப்புலவர் வெண்ணிக் குயத்தியார் இவ்வூரினர் என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இவ்வூருக்கு வந்து திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பதிகம் பாடியுள்ளனர்.

திருநாவுக்கரசர் தம் பதிகத்தில் இவ்வூரினைத் ''வெண்ணித் தொல் நகர்'' என்று குறிப்பிட்டிருப்பது இவ்வூரின் தொல்சிறப்பைப் பறைசாற்றுவதாக உள்ளது.

பிற்காலச் சோழராட்சிக் காலத்தில் இவ்வூரின் பெயரால் வெண்ணிக்கூற்றம் என்ற நாட்டுப்பிரிவு செயல்பட்டிருக்கிறது. இந்த வெண்ணிக்கூற்றத்திற்குட்பட்ட கிராமங்களாக சிறுமங்கலம் குணமாலைப்பாடி, காரிகுறிச்சி, கீழ்பூண்டி(ஒலோகமாதேவி சதுர் வேதிமங்கலம், கோட்டையூர், குறிச்சி, மீடுவெளி, பெருமூர், பெரு நங்கை. மங்கலம், பூதமங்கலம், பூவனூர் (அவனிகேசரிச் சதுர்வேதி, மங்கலம்) ஸ்ரீபூதி, வடதாமரை, வெண்ணித்திறப்பான்பள்ளி மற்றும் கோயில்வெண்ணி ஆகியவை இருந்திருக்கின்றன.

சோழராட்சிக் காலத்தில் வெண்ணியில் நகரம் என்னும் வணிகர் சபை சிறப்பாகச் செயல்பட்டுள்ளது. வெண்ணி நகரத்து உள் கிடையாய் அம்மலப்புறமென்று பேர் கூவப்பட்ட கரிகாலசோழப் பேராறு இருந்திருக்கிறது. இப்பகுதியில் வானவன் மாதேவிவதி என்ற வடிகாலொன்றிருந்திருக்கிறது.

இன்று இச்சாபுரீசுவரர் என்றழைக்கப்படும் இவ்வூர் இறைவன் சோழப்பெருவேந்தர் காலத்தில் திருவெண்ணியுடையார் என்று அழைக்கப்பட்டிருக்கிறார்.

இந்த இச்சாபுரீசுவரர் கோயிலை சோழப்பெருவேந்தர் காலத்தில் பூவனூருடையார் அரையன் திருவையாறுடையார் சோழகங்கர் என்பவர் திருக்கற்றளியாக்கியிருக்கிறார்.

**நீடாமங்கலம்**

இவ்வூருக்கு வடக்கில் விண்ணாறும், மேற்கில் கோரையாறும் ஓடுகின்றன. இவ்வூரில் உள்ள திருக்கோயில்களில் சந்தான இராமசாமி கோயிலும், அருள்மிகு. காசிவிசுவநாதசுவாமி கோயிலும் அருள்மிகு. கோகமுகேசுவரர் கோயிலும் குறிப்பிடத்தக்கவை.

இவ்வூருக்குத் தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங்கரின் (1739-1763) மூன்றாவது மனைவியான ''யமுனாபாய்சாகிப்'' என்பவர் பெயரால் ''யமுனாம்பாள்புரம்'' என்ற பெயருமுண்டு.

இவ்வூரில் இவ்வம்மையார் பெயரால் யமுனாம்பாள்புர சத்திர மொன்றுமுள்ளது. இச்சத்திரம் கி.பி. 1761-இல் கட்டப்பட்டது. யஜுர் வேத பாடம் சொல்வதற்கு வெங்கு ஜடாவல்லபர் என்பவருக்கு நாடோறும் முக்கால் படி அரிசி சாமான்களுடன் கொடுக்கப்பட்ட செய்தியிலிருந்து இச்சத்திரத்தில் வேதம் கற்பிக்கப்பட்டு வந்தமை புலனாகிறது.

தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங்கருக்கு, அவருடைய மனைவி யமுனாம்பாள் மூலம் பல காலம் புத்திரப்பேறு இல்லாமல் இருந்து இவ்வூரிலுள்ள சந்தானராமனைப் பிரார்த்தித்து அதன்பின் குழந்தை பிறந்ததால், சந்தானராமசாமிகோயிலுக்கும், சிவன் கோயிலுக்கும் 150 வேலி நிலங்களைத் தானமாகத்தந்து பல திருப்பணிகளையும் செய்தனர் எனக் கூறப்படுகிறது. கி.பி. 1797ல் காசி விசுவநாதர் கோயிலில் மகாமண்டபம் கட்டப்பட்டது. 1880இல் தஞ்சை மாவட்ட ஆட்சியர் திருமிகு. இ.எஃப். வெப்ஸ்டர் அவர்கள் ஆணையின் பேரில் சத்திரக் கண்காணிப்பாளர் திரு. டி. கோவிந்தராவ் அவர்களால் யமுனாம்பாள் சத்திரம் பழுதுபார்க்கப்பட்டமையை சத்திரத்திலுள்ள கல்வெட்டொன்று புலப்படுத்துகிறது. நீடாமங்கலத்தைச் சேர்ந்த இராமப்பிள்ளை குமாரராகிய சீனிவாசப்பிள்ளை அவர்கள் அன்னதானம் செய்ததைப் பிறிதொரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

யமுனாம்பாள் நீடாமங்கலத்தில் அடக்கம் செய்யப்பட்டு, அவ்விடத்தில் பள்ளிப்படை கோயில் எழுப்பப்பட்டுள்ளது. அங்கு யமுனாம்பாள் மாமரமாக நின்று அடியவருக்கு அருள் வழங்கி வருவதாக நம்பப்படுகிறது.

''நீடம்'' என்ற சொல்லுக்குப் ''பறவைக்கூடு'' என்பது பொருள். ஒருகாலத்தில் கிளி முதலிய பறவைக்கூடுகள் நிறைந்த ஊராக இருந்ததால் இவ்வூருக்கு நீடாமங்கலம் என்ற பெயரேற் பட்டதாகக் கூறுவர். ''நீராட்டுமங்கலம்'' அல்லது ''நீடாழி மங்கலம்'' என்ற பெயரே காலப்போக்கில் நீடாமங்கலமாக மருவியது என்றும் கருதுவர். சில கல்வெட்டுகளில் நீடாள்மங்கலம் என்றும் பெயர் கூறப்பட்டுள்ளது.

யமுனாம்பாள் சத்திரத்திலுள்ள பிரதாபசிம்மன், யமுனாம்பாள், துளசா ஆகியோரின் வண்ண ஓவியம், மராத்தியர் கலைப் பாணியில் அமைந்த மிகச்சிறந்த படைப்புகளில் ஒன்றாகும்.

பாகவதமேளா என்பது இசை நாடகக்குழுவைக் குறிக்கும். பாகவதமேளாவுக்குத் தஞ்சைமராட்டிய மன்னராட்சிக் காலத்தில் சுரோத்திரியங்கள் பல வழங்கப்பட்டுள்ளன. அங்கனம் பாகவத மேளாவுக்குச் சுரோத்திரியமாக வழங்கப்பட்ட ஊர்களுள் இதுவும் ஒன்றாக இருக்கலாம்.

## புனவாசல் (புனவாயில்)

இவ்வூர் நீடாமங்கலம் வட்டம் நீடாமங்கலம் குறுவட்டத்தி லுள்ளது. கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வடபாதிக் கல்வெட்டில் (பாண்டியர் கல்வெட்டு) "புனவாயிலுடை ..." என்ற பெயரும் மன்னார்குடி மேலசேத்திபிரம்மேந்திர சுவாமி கோயில் கல்வெட்டில் 'புனவாயிலுடையான் திருவாலவாயுடையான் பட்டன்' என்ற பெயரும் காணப்படுவதால் இவ்வூர் ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகாலமாகப் "புனவாயில்" என்ற பெயருடனேயே விளங்கி வருகிறது எனலாம். "புனவாயில்" என்ற பெயரே இன்று "புனவாசல்" என்று மருவி வழங்கி வருகிறது. இவ்வூரிலுள்ள மங்கலாம்பாள் உடனுறை மாதவபுரீசுவரர் திருக்கோயிலில் உள்ள கல்வெட்டின்படி கி.பி. 1860-இல் கலிங்கயோகி என்பவரால் இக்கோயிலில் தியானமண்டபம் அமைக்கப்பட்டுள்ளது.

## பூவனூர் (பூவணூர்)

திருநாவுக்கரசர் இவ்வூருக்கு வந்து பதிகம் பாடியிருப்பதால், இவ்வூரும் இவ்வூரிலுள்ள சிவாலயமும் கி. பி. ஏழாம் நூற்றாண்டி லிருந்தே சிறப்புடன் இருந்து வருவது தெளிவாகிறது. நாவுக்கரசர் இவ்வூரை "வெண்ணியின் தென்கரைப் பூவனூர்" என்று குறிப் பிட்டுள்ளார். இவ்வூர் மாமணி ஆற்றின் கரையிலுள்ளதால் மலர் வனங்கள் நிறைந்த ஊர் என்ற பொருளில் பூ+வனம்+ஊர் என்ற பொருளில் பூவனூர் என்று அழைக்கப்படுவதாகக் கொள்ளலாம். சோழப்பெருவேந்தர் காலத்தில் இவ்வூர் வெண்ணிக்கூற்றம்" என்ற கூற்றப்பிரிவிற்குட்பட்ட ஊராக இருந்திருக்கிறது. வெண்ணிக் கூற்றம் நித்தவிநோத வளநாடு என்ற வளநாட்டுப் பிரிவிற்கு

உட்பட்டிருந்திருக்கிறது. மாமன்னன் முதலாம் இராசராசன் காலத்தில் இவ்வூருக்கு "அவனிகேசரிச் சதுர்வேதிமங்கலம்" என்ற பெயரும் வழங்கியிருக்கிறது. இதிலிருந்து சோழப்பெருவேந்தர் காலத்தில் இவ்வூரில் நான்மறைகளில் வல்ல அந்தணர்கள் வாழ்ந்திருந்தனர் என்பது புலனாகிறது.

## பேரையூர் (திருப்பேரெயில்)

இவ்வூர் நீடாமங்கலம் வட்டத்தில் கூத்தாநல்லூர் குறுவட்டத்திலுள்ளது. அப்பரால் பதிகம் பாடிப் போற்றப்பட்டுள்ள "பேரெயில்" என்ற ஊரே இன்றைய தினம் ஓகைப்பேரையூர் என்றும் வங்காரப் பேரையூர் (வெங்குளம் பேரையூர்) என்றும் வழங்கிவருகிறது. இவ்வூரிலுள்ள பெண்ணமிர்தநாயகி உடனுறை ஜகதீசுவரர் என்ற இறைவனே நாவுக்கரசரால் போற்றப்பட்டுள்ள "பேரெயிலாளர்" எனக் கருதப்படுகிறது. எனவே, இச்சிவாலயமும் பேரையூரும் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே இருந்து வருகின்றன எனலாம்.

## ரிஷியூர்/பிழிசூர்

இவ்வூர் நீடாமங்கலம் வட்டத்தில் நீடாமங்கலம் குறுவட்டத்திலுள்ளது. இவ்வூருக்கு சோழப்பெருவேந்தர் காலத்தில் பிழிசூர் என்ற பெயர் வழங்கியிருக்கிறது. இவ்வூர் பாம்புணிக் கூற்றம் என்ற கூற்றப்பிரிவிற்குட்பட்டிருந்திருக்கிறது. இவ்வூரில் இன்று கைலாசநாதர் கோயில் என்ற பெயரிலுள்ள சிவாலயம் சோழர் காலத்தில் "திருவகத்தீசுவரமுடையார்" என்ற பெயரில் இருந்திருக்கிறது. இச்சிவாலயத்தில் சோழப்பெருவேந்தர் காலத்தில் "பெரியநாயனார்" என்ற இறைத்திருமேனியும், சரசுவதி இறைத் திருமேனியும் எழுந்தருளிவிக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டு இறைத்திருமேனிகளின் வழிபாட்டிற்காக மூன்று மாச்சின்னம் நிலம் வழங்கப்பட்டிருக்கிறது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் ஆட்சிக் காலத்தில் இப்பிழிசூரின் கரணத்தானாக திருவாதவுடையான் ஸ்ரீவாசுதேவன் என்பவர் இருந்திருக்கிறார். தேவரடியார் கெங்கா என்பவரின் மகளான பெரியநாச்சி என்றழைக்கப் பட்ட நாற்பத்தெண்ணாயிர மாணிக்கம் என்பவர் சிவாலயத்திற்கு செய்கின்ற திருக்காளஞ்சிக்காக மூன்றாம் குலோத்துங்கனின் ஆட்சிக்காலத்தில் 300 காசுகள் வழங்கியிருக்கிறார்கள்.

இவ்வூரில் சுந்தரசோழபாண்டிய வாய்க்கால் என்ற வாய்க்காலொன்றிருந்திருக்கிறது. இவ்வாய்க்காலுக்கருகிலிருந்த நிலங்களில் ஒன்றுக்குப் பிள்ளையார்குண்டு என்ற பெயர் வழங்கியிருக்கிறது.

### வடபாதிமங்கலம்

முன்னியூர் அகத்தீசுவரமுடையார் கோயிலில் உள்ள சோழர் கல்வெட்டொன்றில் ''வடவாரிமங்கல முடையான்'' என்ற பெயர் காணப்படுகிறது. இந்த ''வடவாரி மங்கலம்'' என்ற பெயரே காலப்போக்கில் ''வடபாதி மங்கலம்'' என மருவிவிட்டது எனக் கருதுவது பிழையாகாது. இக்கருத்து ஏற்புடையதாயின், இவ்வூர் சோழப்பெருவேந்தர் காலத்திலிருந்தே இருந்து வருகிறதெனலாம்

## வலங்கைமான் வட்டம்

அரித்துவாரமங்கலம்

அவளிவளநல்லூர்

ஆலங்குடி

செம்மங்குடி

மணற்கால்

முனியூர்

வலங்கைமான்

### அரித்துவாரமங்கலம் (திரு அரதைப்பெரும்பாழி)

காவிரித் தென்கரைத் தலங்களுள் 99ஆவது தலமான இவ்வூரில் குடிகொண்டுள்ள அலங்கார அம்மை உடனுறை பாதாள வரதர் திருக்கோயில் ஞானசம்பந்தரால் பாடப்பட்டுள்ளதால் கி.பி.ஏழாம் நூற்றாண்டு முதல் இவ்வூரில் சிவாலயம் இருந்து வருவது தெளிவாகிறது.

### அவளிவளநல்லூர்

காவிரித் தென்கரைத் தலங்களுள் 100-ஆவது தலம். இவ்வூரிலுள்ள அருள்மிகு சௌந்தரியவல்லி உடனுறை சாட்சி நாதர் திருக்கோயிலைத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பதிகம் பாடிப்போற்றியுள்ளதால், கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து இச்சிவாலயம் இருந்து வருவது தெளிவாகிறது. இவ்வூர் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் நித்த வினோத வளநாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்த ஆவூர் கூற்றத்தில் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பிற்காலச் சோழர் காலத்தில் ஊரின் பெயர் அவளிவளநல்லூர் என்றும், சிவாலயத்தின் பெயர் தம்பரிசுடைய நாயனார் கோயில் என்றும் வழங்கியிருக்கிறது. இவ்வூரில் விக்கிரமசோழன் பெயரில் திருவீதி ஒன்றிருந்திருக்கிறது. இத்திருவீதியில் ''முழுதுமூவடியான் திருமடம்'' என்ற பெயரில் மடம் ஒன்றிருந்திருக்கிறது.

சோழப்பெருவேந்தர் காலத்தில் அவளிவளநல்லூரைச் சேர்ந்த வியாபாரி சாத்தனுடையான் தம்பரிசுடையான் ஆதித்ததேவனான அமரகோன் என்பவர் இக்கோயிலில் வினாயகப்பிள்ளையார், அம்பெறிந்த பெருமாள், அவருக்குரிய நாச்சியார், ஆட்கொண்ட தேவநாயகதேவர், அவருக்குரிய நாச்சியார், திருப்பள்ளியறை நாச்சியார், ஆவுடையபிள்ளையார் ஆகிய இறையுருவங்களை எழுந்தருளுவித்திருக்கிறார். அம்பெறிந்த பெருமாள் என்பது திரிபுரங்கள் எரிய அம்பெறிந்த பெருமாள் என்பது திரிபுரங்கள் எரிய அம்பெறிந்த பெருமானாகிய திரிபுராந்தகரைக் குறிக்கும். இவ்வூரில் ''தம்பரிசு வதி'' என்ற வடிகாலொன்று இறைவன் பெயரில் இருந்திருக்கிறது. இவ்வடிகாலுக்குக் கிழக்கில் இருந்த நிலத்தைக் கொண்டு இக்கோயிலில் மார்கழித் திருநாள், சித்திரைத் திருநாள், திருக்காப்புநாள் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன.

திருஞானசம்பந்தர் பாடியிருப்பதற்கேற்ப சோழர்காலத்தில் கோயிலின் பெயர் தம்பரிசுடைய நாயனார் கோயில் என்றும், கோயிலில் எழுந்தருளுவிக்கப்பட்ட திருமேனிகளில் ஒன்றுக்கு "அம்பெறிந்த பெருமாள்" என்ற பெயர் வழங்கியிருப்பதும் மேற்சுட்டிய தேவாரப் பதிகத்தின் தாக்கம் இவ்வூரில் தொடர்ந்து இருந்து வந்திருப்பதையே எடுத்துணர்த்துகிறது.

இவ்வூரைச் சேர்ந்த ஆதிசைவ அந்தணர் ஒருவருக்கு இரண்டு பெண்கள் இருந்தனர். அப்பெண்களில் மூத்த பெண்ணை மணந்தவர் ஒருமுறை காசியாத்திரைக்குச் சென்றிருந்தபோது, அவர் மனைவிக்கு அம்மை வந்து, கண் இழந்து உருவில் சிறிது மாற்றம் அடைந்து விட்டார். காசியாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பியவர், உருமாறியிருந்த தம்மனைவியை மனைவியல்ல என்று கூறிவிட்டு, இளையவளே தம் மனைவி எனக் கூறினார். இறைவன் இடபவாகனத்தில் எழுந்தருளி இவ்வழக்கைக் கேட்டு, அம்மை நோயால் உருமாறியிருக்கும் மூத்த பெண்ணே உமது மனைவி என்று தீர்ப்புக் கூறினார். ஆகவே இவ்வூருக்கு அவள் இவள் நல்லூர் எனப்பெயர் ஏற்பட்டதாக புராணரீதியாக ஒரு காரணம் சொல்லப்பட்டு வருகிறது. வலிந்து கூறப்படும் இக்காரணம் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. ஊரின் பெயர் அவளிவள நல்லூர் என்றுள்ளதால், அவளியால் வளம் பெற்ற நல்லூர் எனப் பொருள் கொள்வதே பொருத்தமாக இருக்கும். அவளி என்பது ஒரு மரப்பெயராக இருக்கலாம்.

## ஆலங்குடி

நற்றிணை 230, 330, 400 குறுந்தொகை 8, 45, அகநானூறு 306, புறநானூறு 319 ஆகிய சங்கப் பாடல்களைப் பாடிய புலவரின் பெயர் ஆலங்குடி வங்கனார் என்றுள்ளதால் இப்புலவர் இவ்வூரைச் சேர்ந்தவர் என்று கருதவும் இடமுள்ளது. இக்கருத்து ஏற்றுக் கொள்ளப்படுமாயின் இவ்வூர் சங்க காலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வருகிறது எனலாம்.

இவ்வூர் கும்பகோணம்-மன்னார்குடிப் பேருந்துத் தடத்தில், நீடாமங்கலத்திற்கு வடமேற்கில் அமைந்துள்ளது. இவ்வூருக்குத் திருஞானசம்பந்தர் வந்து பதிகம் பாடியிருப்பதால் இவ்வூரும்,

இந்த ஊரிலுள்ள சிவாலயமும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே சிறப்புடன் விளங்கியிருக்கின்றன என்பது தெளிவாகிறது. தேவாரப் பதிகத்தில் இவ்வூரின் பெயர் இரும்பூளை என்றே குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூர், இவ்வூரின் சிவாலயத்தில் தலவிருட்சமாக விளங்கிவரும் பூளைச் செடியின் பெயரால் இரும்பூளை என்றே அழைக்கப்பட்டிருக்கிறது. இவ்வூர் இறைவனை ஞானசம்பந்தர் தனது பதிக வரிகளில் "இரும்பூளை யிடங்கொண்ட ஈசன்" என்றே சுட்டியழைத்திருக்கிறார். திருப்பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட விடத்தினை (ஆலத்தை) உண்ட சிவபெருமான் உறையும் ஊர் என்ற பொருளில் இவ்வூருக்கு "ஆலங்குடி" என்ற பெயரேற்பட்டதாக ஒரு கருத்து கூறப்பட்டு வருகிறது. ஞான சம்பந்தரும் இவ்வூர்ப் பதிகத்தின் முதல் பாடலிலேயே;

> "ஏராரிரும் பூளை யிடங்கொண்ட வீசன்
> காரார்கடல் நஞ்சமு துண்ட கருத்தே"

எனப் பாடியிருக்கிறார்.

ஆலமரத்தின் கீழமர்ந்து அறமுரைத்த அண்ணலாகிய தட்சிணாமூர்த்தி இத்தலத்தின் சிறப்புமிகு கடவுளாதலால் இவ்வூருக்கு ஆலங்குடி (கல்லாலின் கீழமர்ந்த தட்சிணாமூர்த்தியின்குடி) என்ற பெயரேற்பட்டதாகவும் கூறப்படுகிறது. இதற்கேற்ற வகையில் திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமிக்குரிய பரிவாரத்தலங்களுள் தட்சிணாமூர்த்திக்குரிய தலமாக இவ்வூர் விளங்கி வருகிறது.

இல்வூர் சோழப்பெருவேந்தர் காலத்தில் சுத்தமலி வளநாட்டிற்குட்பட்ட முடிச்சோணாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்திருக்கிறது. ஊரின் பெயர் இரும்பூளை என்றும் ஜனநாதச் சதுர்வேதிமங்கலம் என்றும் வழங்கியிருக்கிறது. ஜனநாதன் என்பது முதலாம் இராசராசனின் சிறப்புப் பெயராதலால், அம்மன்னன் காலத்தில் இவ்வூர் நான்மறை வல்ல அந்தணர் வாழ்ந்த சதுர்வேதிமங்கலமாக இருந்தமை தெளிவாகிறது. மாமன்னன் முதலாம் இராசராசசோழன் தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் திருப்பரிசாரகஞ் செய்ய மாணிகளை நியமித்த போது, இவ்வூர்ச் சபையார் இரண்டு மாணிகளுக்கான பொறுப்பேற்றிருந்தனர்.

இவ்வூருக்கு சிம்ம விஷ்ணுச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயரும் வழங்கியிருக்கிறது.

**ஆலூர்**

சங்கப்புலவர்களுள் கண்ணனார், காவிதிகள், சாதேவனார், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் எனப் பல புலவர்கள் ஆலூரைச் சேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். நற்றினை 265, அகநானூறு 13, 24, 156, 202, 224, புறநானூறு 38, 40, 166, 177, 188, 196, 261, 301, 322 ஆகிய பாடல்கள் மேற்சுட்டிய சங்கப்புலவர்களால் பாடப்பட்டவை.

இவ்வூரை திருஞானசம்பந்தர் பதிகம்பாடிப் போற்றியுள்ளார். இவ்வூரின் பெயர் ஆலூர் என்றும் திருக்கோயிலின் பெயர் பசுபதீச்சரம் என்றும் இன்றளவும் மாற்றமின்றி வழங்கி வருவது குறிப்பிடத்தக்கது.

''விண்ணுயிர் மாளிகை மாடவீதி
விரைகமழ் சோலை கலாவியெங்கும்
பண்ணியல் பாடல றாதவாலூர்"
தெங்குயர் சோலைசே ராமலைசாலி
திளைக்கும் விளைவயல் சேரும் பொய்கைப்
பங்கய மங்கை விரும்புமாலூர்''
''பாவியல் பாடல றாதாலூர்''
'' பன்னிய பாடல் பயிலுமாலூர்''

என ஞானசம்பந்தர் பாடியிருப்பதால் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே இவ்வூர் மிகுந்த செழிப்புடனிருந்தமை புலனாகிறது.

சோழப்பெருவேந்தர் காலத்தில் இவ்வூரின் பெயரால் ஆலூர் கூற்றம் என்ற கூற்றப்பிரிவொன்று செயல்பட்டிருக்கிறது.

**செம்மங்குடி**

இவ்வூர் வலங்கைமான் ஊராட்சி ஒன்றியத்திலுள்ளது. சோழர் காலத்தில் இவ்வூர் ஆலூர் கூற்றத்தில் "செம்பங்குடி" என்ற பெயரிலிருந்திருக்கிறது. சோழப்பெருவேந்தன் முதலாம் இராசராசசோழன் காலத்தில் இவ்வூரைச் சேர்ந்த அமுதன்

தேவனான ராஜவித்யாதர விழுப்பரையன் என்பவர், கோழிப் போரில் மாமன்னன் முதலாம் இராசராசசோழன் ஊத்தை அட்டாமல் இருக்க வேண்டி தஞ்சை பெரியகோயிலில் விளக் கெரிக்கக் கொடையளித்துள்ள செய்தி தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டில் காணப்படுகிறது.

### மணற்கால்/மணக்கால்

திருவாரூரை அடுத்து பெருவேளூருக்கண்மையிலுள்ள இவ்வூர் அப்பரால் (6-25-10) வைப்புத்தலமாகப் போற்றிப் பாடப் பட்டுள்ளதால் கி.பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்தே இவ்வூர் இருந்து வருகிறது எனலாம்.

### முனியூர்/முனிநியூர்

பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வூர் "புத்தூரான திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து முன்நியூர்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரிலுள்ள சிவாலயத்திற்குப் பிற்காலச் சோழர் காலத்திலிருந்தே அகஸ்தீசுவரமுடையார் என்ற பெயர் மாற்றமின்றி வழங்கி வருகிறது. திரிபுவன மாதேவி சதுர்வேதி மங்கலத்தில், இராசேந்திரசோழச்சேரி, திரிபுவனமகாதேவிச்சேரி, அருமொழி தேவிச்சேரி, மதுராந்தகச்சேரி, ஜனநாதச்சேரி, பவித்திர மாணிக்கச்சேரி என்ற பெயர்களில் பல்வேறு அந்தணர் குடியிருப்புப் பகுதிகள்(சேரிகள்) நல்லூரான குலோத்துங்க சோழ நல்லூரில் இருந்திருக்கிறது. திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்தில் சோழப்பெருவேந்தர் காலத்தில் பெருங்குறி மகாசபை செயல்பட்டிருக்கிறது. திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கலம், நித்தவிநோத வளநாட்டு, வீரசோழ வளநாட்டிலிருந்த பிரம்ம தேயங்களில் ஒன்றாகத் திகழ்ந்திருக்கிறது. முன்னியூர் நித்த விநோத வளநாட்டு ஆவூர் கூற்றத்து ஊராக இருந்திருக்கிறது. இவ்வூரிலுள்ள திருவகத்தீசுவரமுடையார் கோயில் தெற்குத் திருமடைவிளாகத்தில் 'திருஞானசம்பந்தன் குகை' இருந்திருக்கிறது. முன்னியூர் சிவாலயத்து திருவகத்தீசுவரமுடைய மகாதேவருக்கும், மேலும் சேத்திரபால தேவருக்கும், நித்த விநோத வளநாட்டு ஆவூர் கூற்றத்துப் பிரம்மதேயமான ஜாதவியாகச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி மகாசபையார் பிறிதொரு நிலம் வழங்கி

யிருக்கின்றனர். இந்நிலத்திற்குக் குறிப்பிடப்பட்டுள்ள எல்லை களிலிருந்து, இப்பகுதியில் இருந்த தஞ்சாவூர்ப் பெருவழி, ஆச்சமங்கலம், ஊரத்தூர் வாய்க்கால், செம்பியன் மாதேவி வதி என்ற வடிகால், அருமொழிதேவ வாய்க்கால், இராசகேசரி வாய்க்கால், இவ்வூர் துர்க்கையம்மனுக்குச் சோழர் காலத்திலிருந்த துர்க்கையார் நிலம் போன்ற பல பகுதிகளைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது.

**வலங்கைமான்**

இவ்வூர் கும்பகோணம் மன்னார்குடி நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இத்தலத்தில் உள்ள சிவமூர்த்தத்திற்கு மட்டும் வலக்கையில் "மான்" வீற்றிருப்பதால் வலங்கைமான் என்று சிவபக்தர்களாலும், மாரீசமாயமானை சீதாபிராட்டியின் வேண்டு கோளுக்கிணங்க விரட்டிச்சென்று இத்தலத்தில் வந்தபோது அம்மாயமான் வலப்புறத்தில் ஓடி மறைந்ததால் "வலங்கைமான்" என்று வைணவர்களாலும் அழைக்கப்படுகின்றது. இவ்வூரில் இராசராசன் காலத்திய செப்புக்காசுகள் நூற்றுக்கணக்கில் புதைய லாகக் கிடைத்துள்ளது.

மகாமாரியம்மன் கோயில் கருவறையில் மாரியம்மன் என்றழைக்கப்படும் சீதளாதேவி அம்மன் வலதுகரங்களில் உடுக் கையும், கத்தியும், இடதுகரங்களில் பாசமும், அனல்சட்டியும் பற்றியுள்ளாள். தலையில் ஐந்தலை நாகம் படமெடுத்து குடை பிடித்துள்ளது

திருக்கோயில் மகாமண்டபத்தில் வடபகுதியில் தெற்கு பார்த்த முகமாக ஐந்து சுதை உருவங்கள் உள்ளன. அவை இருளன், பேச்சியம்மன், மதுரைவீரன் மற்றும் அவனது தேவி மார்கள் இருவராவர். தென்புறத்தில் கிழக்குப் பார்த்த முகமாக ஒரு விநாயகர் சிற்பமும் உள்ளது.

வலங்கைமான் மாரியம்மனுக்கு உகந்தது. பக்தர்கள் அதிக மாக எடுக்கக் கூடியது பாடைக்காவடிகள்தான். பாடைக்காவடிகள் என்றாலே அது வலங்கைமான் தலத்தையே குறிக்கும். இங்கு நடை பெறும் பங்குனித் திருவிழாவில் எட்டாம் நாள் திருவிழா பாடைக் காவடி திருவிழா என்று அழைக்கப்படுகிறது.

பாடைக்காவடி என்பது இறந்தவர் ஒருவரை பாடையில் வைத்து எப்படி தூக்கிச் செல்வார்களோ அதேபோல் உயிர் உள்ள ஒருவரை பாடையில் வைத்து தூக்கி கொண்டு மாரியம்மன் கோயிலுக்குச் செல்வது வழக்கம். பாடைக் காவடிகள் எடுக்கும் வழக்கம் ஒரு சில அம்மன் கோயில்களில் உள்ளது என்றாலும் வலங்கைமான் மாரியம்மன்கோயிலுக்கு ஆயிரக்கணக்கான பாடைக் காவடிகள் வருவது சிறப்புடையது. அவ்வாறு வரும் பாடைக் காவடிகள் மட்டும் ஒருபுறத்தில் மலைபோல் குவிக்கப்பட்டிருக்கும். அப்பாடைகாவடிகளில் உள்ள மூங்கில்களை ஏலம் விடுவதின் மூலம் பல்லாயிரக்கணக்கான ரூபாய் கோயிலுக்கு வருமானம் கிடைக்கிறது.

சாதாரணமாக ஒருவீட்டில் ஒருவருக்கு உடல்நிலை சரியில்லை என்றால் இம்மாரியம்மனிடம் வேண்டிக்கொள்கிறார்கள். குறிப்பாக உயிர்போகும் நிலையில் உள்ள ஒரு நோயாளியின் குடும்பத்தினர் மாரியம்மனிடம் வந்து "மாரித்தாயே" உனக்கு பாடைக்காவடி எடுக்கிறேன், அவருக்கு உயிர் பிச்சை தா" என்று வேண்டிக் கொள்கின்றனர். அதற்கு நிவர்த்திக்கடனாக எடுப்பது தான் பாடைக்காவடி.

இறந்தவர் ஒருவருக்கு என்னென்ன இறுதிக்கடன் செய்வார்களோ, அதேபோல் அவற்றையெல்லாம் செய்து பாடையில் வைத்து தூக்கி கொண்டு அம்மன் ஆலயத்திற்கு வருவது பாடைக் காவடியாகும்.

# திருவாரூர் மாவட்டம்

### வருவாய் கோட்டங்கள்

1. திருவாரூர்
2. மன்னார்குடி

### வட்டங்கள்

1. திருவாரூர்
2. நன்னிலம்
3. குடவாசல்
4. வலங்கைமான்
5. நீடாமங்கலம்
6. மன்னார்குடி
7. திருத்துறைப்பூண்டி

### ஊராட்சி ஒன்றியங்கள்

1. திருவாரூர்
2. குடவாசல்
3. கொரடாச்சேரி
4. நன்னிலம்
5. வலங்கைமான்
6. மன்னார்குடி
7. கோட்டூர்
8. நீடாமங்கலம்
9. திருத்துறைப்பூண்டி
10. முத்துப்பேட்டை

### நகராட்சிகள்

1. திருவாரூர்
2. மன்னார்குடி
3. கூத்தாநல்லூர்
4. திருத்துறைப்பூண்டி

### பேரூராட்சிகள்

1. நன்னிலம்
2. பேரளம்
3. குடவாசல்
4. கொரடாச்சேரி
5. வலங்கைமான்
6. முத்துப்பேட்டை
7. நீடாமங்கலம்

### மாவட்டத்திலுள்ள மொத்த கிராமங்கள் வட்டவாரியாக

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவாரூர் | : | 48 |
| 2. | நன்னிலம் | : | 73 |
| 3. | குடவாசல் | : | 106 |
| 4. | வலங்கைமான் | : | 71 |
| 5. | மன்னார்குடி | : | 128 |
| 6. | நீடாமங்கலம் | : | 69 |
| 7. | திருத்துறைப்பூண்டி | : | 78 |
| | மொத்த கிராமங்கள் | : | 573 |

### மொத்த மக்கள்தொகை

| | |
|---|---|
| ஆண்கள் : | 5,67,530 |
| பெண்கள் : | 4,60,146 |
| மொத்தம் : | 10,27,676 |

28-8-1997 நாளின் கணக்குப்படி

# துணை நூல் பட்டியல்

## தமிழ்நூல்கள்

### இலக்கியங்கள்

1) பத்துப்பாட்டு எட்டுத் தொகை
2) பன்னிரு திருமுறைகள்

### கல்வெட்டுகள்

1) நன்னிலம் வட்டக் கல்வெட்டுகள் - தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

2) திருத்துறைப்பூண்டி வட்டக் கல்வெட்டுகள் - தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை

3) திருவீழிமிழலைக் கல்வெட்டுகள் - தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை

### பொதுநூல்கள்


1) சோழப்பெருவேந்தர் காலம் – தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் வளர்ச்சி இயக்கம், சென்னை-108

2) ஆளவந்தார். ஆர். - இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் தொகுதி ஒன்று, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984

- கல்வெட்டில் ஊர்ப் பெயர்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983

3) இராதாகிருஷ்ணப்பிள்ளை - தென்னாட்டுக் கோயில்கள், அலயன்ஸ் கம்பெனி, சென்னை, 1957

4) இராசு. செ. தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1983

தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987

5) இராசமாணிக்கனார். மா. - சைவசமய வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1972

6) சந்திரசேகரன், மெய் - தஞ்சைமாவட்ட ஊர்ப் பெயர்கள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983

7) சுப்புரெட்டியார். நா. - சோழநாட்டுத் திருப்பதிகள், பாரி நிலையம், சென்னை, 1986

8) சோமலெ - தஞ்சாவூர் மாவட்டம், பாரி நிலையம், சென்னை, 1961

9) சேதுப்பிள்ளை ஆர்.பி. - தமிழகம் ஊரும் பேரும், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1976

10) நாகசாமி. இரா. - ஓவியப்பாவை, தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சென்னை, 1978

11) பாலசுப்பிரமணியம். - முற்காலச்சோழர் கலையும் சிற்பமும், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1966

பாலசுப்பிரமணியம் - சோழர் கலைப்பாணி, பாரி நிலையம், சென்னை, 1966

12) பாலசுப்பிரமணியம் குடவாயில் - சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும்

13) ,, திருவாரூர்க் கோயில், திருவாரூர்

14) பாஸ்கரத்தொண்டைமான் தொ.மு. - வேங்கடம் முதல் குமரிவரை எஸ்.ஆர்.எஸ். பதிப்பகம், திருநெல்வேலி, 1961

15) பிள்ளை கே. கே. - சோழர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977

16) வெள்ளை வாரணன். க. - பன்னிருதிருமுறை வரலாறு, அண்ணாமலைப்பல்கலைக் கழகம், சிதம்பரம், 1972

17) வேங்கடராமையா கே.எம். - தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும், சமுதாய வாழ்க்கையும், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984

18. வேங்கடசாமி. சீனி. மயிலை. - சமணமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை, 1980

,, பௌத்தமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை, 1957

## ஆங்கில நூல்கள்

1. Annual Report on South Indian Epigraphy - 1887 onwards

2. Annual Report on Indian Epigraphy - 1945-46 onwards

3. South Indian Inscription volumes

4. Balasubramaniam S. R. - Early Chola Art. Part I., Asia publishing House, Bombay 1966
   - Middle Chola Temples, Thomson Press (India) Ltd. Faridabad.
   - Later Chola Temples, Mudgala Trust - 1979

5. Basil Gray, Ed. The Arts of India, phaidon oxford, 1981

6. Dougles Barret - Early Chola Architecture and Sculpture Faber and Faber Ltd. London, 1974,

7. Hock Veld - Meijer. Koyils in the Colamandalam, Krips repro meppel, 1981

8. Heming way, F.R. Madras District Gazatteer, Tanjore- Vol. I

9. Harle, J.C. The Art and Architecture of the Indian Sub continent, Penquin Books, London 1986

10. Jagadisa Ayyar, P.V. South Indian Shrines, Aslam Educational Service, New Delhi-16, 1982

11. Krishna Ayyar - Madras District Gazatteers, Tanjore, Vol. I Madras-1933

12. Neelakanta Sastri. K.A. The Colas. Madras University, Madras

13. Ponnuswamy. S. - Sri Thyagaraja Temple, Dept. of Archaeology, Chennai - 1972

14. Rangacharya. V. - A Topographical list of the inscriptions of the Madras Presidency, Asian Educational Trust, New Delhi - 1985

15. Sethuraman. N. Early Cholas, Kumbakonam-1982

16. Subbarayalu. Y. - Political Geography of the Chola country Dept. of Archaeology, 1973

17. Subramanian. K.R. - Maratha Rajas of Tanjore, Madras-1928

18. Vridhagrisan N. - Nayaks of Tanjore, Annamalai University, Chidambaram

19. William Hickey - Tanjore Maratha Priuicipality in South India, Madras-1872

20. Venkatasamy Rao, T. Manual of District of Tanjore in the Madras Presidency, Madras-1983.

# பிற்சேர்க்கை

## ஊர்ப்பெயர்கள் -- அன்றும், இன்றும்

### திருவாரூர் வட்டம்

| இன்றைய பெயர் (1) | பண்டைய பெயர் (2) | ஊர் அமைந்த நாடு (3) |
|---|---|---|
| திருவாரூர் | — திருவாரூர், ஆரூர் | — திருவாரூர்க்கூற்றம் |
| அம்மையப்பன் | — இராசராசபோத்தூரான அம்மையப்பநல்லூர் | — வேளாநாடு |
| விளமல் | — திருவிளமர் | — |
| அடியக்கமங்கலம் | — அடியப்பிமங்கலம் | — திருவாரூர்க்கூற்றம் |
| திருக்காறவாசல் | — திருக்காறாயில் | — புலியூர் நாடு |
| காட்டூர் | — காட்டூர் | — |
| வலிவலம் | — வலிவலம் | — வலிவலக்கூற்றம் |
| தளிச்சாத்தங்குடி | — தளிச்சாத்தங்குடி | — |
| குன்னியூர் | — குன்றியூர் | — |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| காட்டூர்ஐயன்பேட்டை | — திருபெருவேளூர் | — |
| திருப்பள்ளிமுக்கூடல் | — திருப்பள்ளிமுக்கூடல் | — |
| பழையவலம் | — பழையவல்லம் | — |
| வேலங்குடி | — வேலங்குடி | — |
| சோத்திரியம் | — சுரோத்திரியம் | — |

## திருத்துறைப்பூண்டி வட்டம்

| 1 | 2 | 3 |
|---|---|---|
| திருத்துறைப்பூண்டி | — திருத்துறைப்பூண்டி | — வேளூர்க்கூற்றம் |
| களந்தை | — களப்பால் | |
| நெடும்பலம் | — நெடும்புலம் | — புறங்கரம்பை நாடு |
| அலிவலம் | — ஆர்வலம் | — ஆர்வலக்கூற்றம் |
| வடகாடுகோயிலூர் | — திருவுசாத்தனம் (பிரமதேயம்) சாக்கனமான கேரளகுலாசனிச் சருப்பேதிமங்கலம் விக்கிரம சோழநல்லூர் விக்கிரம சோழபுரம் | — புறங்கரம்பை நாடு |
| பன்னத்தெரு | — முகத்தலை | — |
| தச்சனம் | — கைச்சின்னம் திருக்கச்சினம் | — ஆர்வலக்கூற்றம் |
| சேகல் | — சேகல் | — |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| திருத்தெங்கூர் | — தெங்கூர் வெள்ளிடுநகரம் | — ஆர்வலக்கூற்றம் |
| கீரக்களூர் | — குலதீபமங்கலம் | — புறங்கரம்பை நாடு |
| சிங்களாந்தி | — சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலம் | |
| சிற்றாய்மூர் | — சிற்றாமூர் | |
| இடும்பவனம் | — இடும்பாவனம் | |
| வங்கநகர் | — வங்கநகர் | — புறங்கரம்பை நாடு |
| கொருக்கை | — கொறுக்கை, இராசநாராயணபுரம் | — திருநறையூர் நாடு |

## மன்னார்குடி வட்டம்

| 1 | 2 | 3 |
|---|---|---|
| பாமணி | — பாதாள், பாம்புணி திருப்பாம்புணி | — பாம்புணிக்கூற்றம் |
| மன்னார்குடி | — இராசராசச் சதுர்வேதிமங்கலம் | |
| திருமக்கோட்டை | — குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலம் திருமையான மும்முடிச்சோழ நல்லூர், திருமேற்கோட்டை | — — தென்கரம்பை நாடு |
| கோட்டூர் | — கோட்டூர் | — நென்மலி நாடு |
| சித்தன்வாரூர் | — சிற்றிளவாழ் | — முடிச்சோழநாடு |
| மூர்த்தியம்மாள்புரம் | — மூர்த்தியம்மாள்புரம் | |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| ஓவர்ச்சேரி | — உவர்ச்சேரி | — |
| மகாதேவபட்டணம் | — மகாதேவபட்டணம் | — |
| வேளுகுடி | — மங்கலமான இராசேந்திர சோழச் சதுர்வேதிமங்கலம் | — மங்கலநாடு |
| தண்ணீர்குன்னம் | — மதனமஞ்சரிச்சதுர்வேதிமங்கலம் தண்ணீர்குன்றம் | — நென்மலிநாடு |
| திருக்களர் | — திருக்களர் | — புறங்கரம்பை நாடு |
| பூதமங்கலம் | — பூதமங்கலம் | — வெண்ணிக்கூற்றம் |
| திருவெண்டுறை | — திருவெண்டுறை | |
| கீரங்குடி | — கீரங்குடி | — வலிவலக்கூற்றம் |

## வலங்கைமான் வட்டம்

| 1 | 2 | 3 |
|---|---|---|
| வலங்கைமான் | — வலங்கைமான் | — |
| செம்மங்குடி | — செம்பங்குடி | — ஆலூர்க்கூற்றம் |
| அரிதுவாரமங்கலம் | — திருவரந்தைப்பெரும்பாதி | — |
| மணக்கால் | — மணற்கால் | — |
| ஆலூர் | — ஆலூர் | — ஆலூர்க்கூற்றம் |
| முனியூர் | — முன்னியூர் புத்தூரான திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலம் | — |

| 1 | 2 | 3 |
| --- | --- | --- |
| அவளிவநல்லூர் | — அவனிவண நல்லூர் | — |
| | அவளிவள நல்லூர் | — ஆவூர்க்கூற்றம் |
| ஆலங்குடி | — ஆலங்குடி | — முடிச்சோணாடு |
| | இரும்பூளை | |
| | சனநாதச்சதுர்வேதிமங்கலம் | |
| | சிம்மவிஷ்ணுச்சதுர்வேதிமங்கலம் | |

## நீடாமங்கலம் வட்டம்

| 1 | 2 | 3 |
| --- | --- | --- |
| புனவாசல் | — புனவாயில் | — |
| பேரையூர் | — திருப்பேரெயில் | — |
| வடபாதிமங்கலம் | — வடவாரிமங்கலம் | — |
| ரிஷியூர் | — பிழியூர் | — பாம்புணிக்கூற்றம் |
| காக்கையாடி | — வருத்தந்தவிர்த்தசோழச் | — |
| | சதுர்வேதிமங்கலம் | — |
| கோயில்வெண்ணி | — வெண்ணி | — வெண்ணிக்கூற்றம் |
| நீடாமங்கலம் | — நீடாள்மங்கலம் | — |

| 1 | 2 | 3 |
|---|---|---|

## குடவாசல் வட்டம்

| 1 | 2 | 3 |
|---|---|---|
| அன்னியூர் | — வன்னியூர்<br>வளவன் வன்னியூர் | — வெண்ணாடு |
| ஆரப்பாழ் | — ஆரப்பாழ் | — இங்கநாடு |
| உச்சிவாடி | — உச்சிபாடி | — நென்மலிநாடு |
| எண்கண் | — இங்கண், பவித்திர<br>மாணிக்கச்சதுர்வேதிமங்கலம் | — இங்கநாடு |
| கடகக்குடி | — கடையக்குடி | — பாம்பூர் நாடு |
| கண்கொடுத்தவனிதம் | — ஆலத்தாங்குடி<br>ஜயதுங்கச்சதுர்வேதிமங்கலம் | — |
| கருவிழி (சற்குணேசபுரம்) | — கருவிழி<br>குலோத்துங்கசோழநல்லூர் | — வெண்ணாடு |
| கீரத்தங்குடி | — கீரன்தேவன்குடி | — |
| குடவாசல் | — குடவாயில் | — சேற்றூர்க்கூற்றம் |
| கூந்தலூர் | — கூந்தலூர் | — திருநறையூர் நாடு |
| சேங்காலிபுரம் | — ஜயசிம்மகுலகாலபுரம் | — சேற்றூர்க்கூற்றம் |
| திருக்கண்ணமங்கை | — திருக்கண்ணமங்கை | — மருகல் நாடு |
| திருக்கொள்ளம்புதூர் | — கொள்ளம்புதூர் | — சேற்றூர்க்கூற்றம் |
| செருகுடி | — திருச்சிறுகுடி<br>விக்கிரமசோழன்சிறுகுடி | — பாம்பூர் நாடு |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| திருப்பாம்புரம் | — திருப்பாம்புரம், பாம்பூர் குலோத்துங்கசோழச் சதுர்வேதிமங்கலம் | — பாம்பூர் நாடு |
| திருமெய்ஞானம் (எண்ணுக்குடி) | — திருமயானம் | — சேற்றூர்க்கூற்றம் |
| திருவிடைவாசல் | — திருவிடைவாய் திருவிடைவாயில், விருதராச பயங்கரபுரம் | — மங்கல நாடு |
| பாலையூர் | — பாலையூர் | — இங்க நாடு |
| பத்தூர் | — பத்தூர், நல்லபெருமாள் சதுர்வேதிமங்கலம் | — |
| பருத்தியூர் | — பருத்தியூர் அனபாயபுரம் | — |
| புளியஞ்சேரி | — புலையஞ்சேரி நரசிம்மேந்திரபுரம் | — ஆளூர்சாவடி |
| வண்டுவாஞ்சேரி | — வண்டாழஞ்சேரி | — திருநறையூர் நாடு |
| வயலூர் | — வயலூர் | — வெண்ணாடு |
| வடுகக்குடி | — வடுகக்குடி | — பாம்பூர் நாடு |
| விசுவநாதபுரம் | — விஸ்வநாதபுரம் | — |
| விஷ்ணுபுரம் | — விஷ்ணுபுரம் (நகரம்) | — |
| வட்டமட்டம் | — வடமுட்டம் | — |

| 1 | 2 | 3 |
| --- | --- | --- |
| சீதக்கமங்கலம் | | — |
| ஆலாந்தூர் | — ஆலத்தூர் | — அம்பர் நாடு |
| திருவீழிமிழலை | — திருவீழிமிழலை | — வெண்ணாடு |

## நன்னிலம் வட்டம்

| 1 | 2 | 3 |
| --- | --- | --- |
| அச்சுதமங்கலம் | — அச்சுதமங்கலம் சிவபாதசேகரமங்கலமான சோமநாதச்சதுர்வேதிமங்கலம் | — பனையூர் நாடு |
| கோயில்திருமாளம் | — அம்பர், அம்பர்மாகாளம் | — அம்பர் நாடு |
| செருவேளூர் | — சிறுவேளூர் | — பனையூர் நாடு |
| பேரளம் | — கேரளமாதேவிச்சதுர்வேதிமங்கலம் | — |
| இடையாத்தங்குடி | — இடையாற்றுக்குடி கலிகடிந்த சோழச்சருப்பேதி மங்கலம் | — மருகல் நாடு |
| இராமநதீச்சுரம் | — திருவிராமேசுவரம் | — பனையூர் நாடு |
| உருத்திரகங்கை | — திருச்சிற்றம்பலம் | — |
| கொத்தவாசல் | — கொற்றமங்கலம் | — அம்பர் நாடு |
| ஒட்டக்குடி | — ஒட்டைக்குடி எதிரிலிச்சோழபுரம் இராசேந்திரசோழபுரம் | — |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| கீரனூர் | — கீரனூர் | — |
| கீழகரம் | — கீழையகம் | — பனையூர் நாடு |
| | சனநாதன் அத்திப்பாக்கம் | |
| கூத்தனூர் | — கூத்தனூர் | — |
| கோட்டூர் | — திருக்கோத்திட்டை | — பனையூர் நாடு |
| சிறுபுலியூர் | — சிறுபுலியூர் | — அம்பர் நாடு |
| திருக்கொட்டாரம் | — திருக்கோட்டாறு | — அம்பர் நாடு |
| | திருக்கோட்டாறான பழையக்குடி | |
| திருக்கண்டீசுரம் | — திருக்கொண்டீச்சரம் | — |
| திருச்செங்காட்டங்குடி | — திருச்செங்காட்டாங்குடி | — மருகல் நாடு |
| திருமெய்ச்சூர் | — திருமீயச்சூர் | — அம்பர் நாடு |
| திருப்பயத்தங்குடி | — திருப்பயற்றூர் | — மருகல் நாடு |
| பனையூர் | — பனையூர் | — பனையூர் நாடு |
| திருவாஞ்சியம் | — திருவாஞ்சியம் | — பனையூர் நாடு |
| தூத்துக்குடி | — தூற்றுக்குடி | — பனையூர் நாடு |
| நல்லமாங்குடி | — நன்னிலமாங்குடி | — |
| நன்னிலம் | — நன்னிலம் | — பனையூர் நாடு |
| முடிகொண்டான் | — முடிகொண்டசோழச்சதுர்வேதி மங்கலம் | — பனையூர் நாடு |
| பாவட்டாக்குடி | — பாவடைகுடி | — அம்பர் நாடு |
| | தியாகவினோத நல்லூர் | |

| 1 | | 2 | | 3 |
| --- | --- | --- | --- | --- |
| புத்தாளூர் | — | புத்தகையூர் | — | |
| திருக்கண்ணமங்கலம் | — | திருக்கண்ணமங்கலம் | — | மருகல்நாடு |
| பொற்காரைக்குடி | — | பொற்கலக்குடி | — | மருகல்நாடு |
| போழக்குடி | — | பெரும்போழ் பேழைக்குடி | — | மருகல்நாடு |
| விற்குடி | — | திருவிற்குடி | — | |
| வைப்பூர் | — | வைப்பூர் | — | மருகல்நாடு |